உ

சற்குருவேதுணை.

# காலவினைவென்று கணவனைக்காத்த

# கற்பகவல்லி.






இஃது

சதாரத்தைகரம் காமனெரிந்தகட்டி

உபாத்தியாயர்

சி. நா. குப்புசாமி முதலியாரவர்களால்

இயற்றப்பட்டு

இந்து யூனியன் கமிடி கல்விச்சாலைத் தமிழ்ப்பண்டிதர்

ஈக்காடு, பாலசுந்தர முதலியாரால்

பார்வையிடப்பட்டு

1ST EDITION.]  [முதல் பதிப்பு

கிழக்கட்டளை கிராமம்

சுரோத்திரியதார்

ம-ா-ா-ஸ்ரீ, சுந்தர முதலியாரவர்களின்

குமாரர்

எஸ். துரைசாமி முதலியாரால்

வெளியிடப்பட்டது.





1913.

Price As. 12.] [விலை அணா. 12.

# முகவுரை.



நெடிய கடல்சூழ்ந்த நிலவுலகின்கண் விளங்கும் பல்வகைப் பிறவிகளில் மாநுடப்பிறவியை யடைந்தவர்கள் அப்பிறவியை யடைந்தப் பயனாக நன்னெறியினின்று ஆண் பெண் இருவகுப்பின ரும் முத்த தசையை யடைய வேண்டியது இதன்றியமையாத மிக மேலான கருமமாம். அதற்குரிய சாதனங்களாயுள்ளவை கர்மபக்தி ஞானங்களாம். அவையிற்றை விளங்கக்கூறுவது "கற்பகவல்லி என் னும் மகுடம்பூண்ட நாவலேயாம் "நாவல்" என்னும் பெயரால் இங்கிலீஷ் நடையைத்தழுவி, சில செந்தமிழ்ப் பழமொழிகள் தே வாரம் முதலியவைகளைத்தழுவியும், தற்காலம் நம் இந்தியாவை மேற்கொண்டு பரவி நிற்கும் மேல் நாட்டு, நாகரீகம், நடை உடை, நொடி, பாவனை, ஆசாரம், ஸ்திரீ புருஷாள் நடந்துக்கொள்ளவேண் டிய பன்முறை ஒழுக்கங்கள், கற்புநிலைமை, அறநிலை நாட்டல், இல்லறவொழுக்கம், தாய் தந்தையர் பக்தி, குருபக்தி, தெய்வ பக்தி, புருடபக்தி, முதலியன சன்மார்க்கங்களைப் புகட்டி, சிற்றின் பமாகிய அருநரகின் சாரத்தை அகற்றி, பொறுமை, சாந்தம், பெ ருந்தவம், விரதம் முதலிய நற்குணங்களை இடைவிடாதநுஷ்டித்து அடையும் பலாபலன்களையும் உணர்விக்கும். இதில் விரிவாகக் குணம் அலங்காரமென்னும் சொற்சுவையும், நவரசமென்னும் பொ ருட்சுவையும் குறைவின்றி யமைய, வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், வியப்பயன்றருதலென்பவை நிறைப,ஓது பவர்களின் மடங்கொன்று, அறிவையகற்றி, கல்வியறிவொழுக்கங் களும் மிக்குப்பெருக விளைவிக்கும். இந்நூலை வாசிப்பதால் எவ்வ ளவு கஷ்டம் நேர்ந்தாலும், இல்லக்கிழத்தி கணவனை வெறுத்தொ ழுகல் கூடாதென்பதும், கணவனைக்காப்பாற்றும்பொருட்டு விரதங் களை அநுஷ்டிக்கவேண்டியது. அதியுக்தமான காரியமெனவும், செல்வக் காலத்தும் ஈஸ்வரத் தியான முண்டாதல் அரிதினு மரிதா மென்பவைகளையும் கதாரூபமாக சொன்னயம் பொருணயங்களால் அணிபடத்தொகுத்து அநேக அற்புதமும் ஆச்சரியமுமான கதை களைக்கோர்வை செய்து முத்தரித்து உலோகோபகாரமாய் வெளிப் படுத்தப்பட்டுள்ள இந்த "கற்பகவல்லி"யை இகபரசுக போக வாழ்க்கையை விரும்பும் ஒவ்வொருவரும் வாங்கி வாசித்துணர்வது அத்யந்த அவசியமாகும்.

சி. நா. குப்புசாமி முதலியார்.

காலனைவென்று கணவனைக்காத்த

# கற்பகவல்லி.

(துதிகுறள்)

கற்பகவல்லிக்காதை கழறக் கலித்தலைவன்
பொற்புறுதாட் கமலமதைப் போற்று.

சீர்பூத் திலங்கி பேர்பூத்து விளங்கும் மகமேருகிரிக்குநேர் வடபாரிசத்தில் ஆயிரங்காதத்திற்கு அப்புறம் நீர்வளம் மிகுத்து நிலவளஞ் செழித்து பரியிவணங்துளிர்த்து குடிவளமதிகரித்து புலியும் பசுவு மோர்துறையில் ஜலமருந்தவும், எலியும் பூனையும் ஓர் கூண்டில் களித்து விளையாடவும், அரவுங்கீரியும் உறவுகொண்டாடவும், சிவாலயம் விண்டுவாலயம் முதலாகிய தேவாலயங்களில் நாள்தோறும் திரிகாலப் பூசை நடந்தேறவும், தேர்திருவிழா முதலாகியதுமியற்றி, திங்கண் மும்மாரி சொரிந்து உத்தம தேவதை நான்கு பாதத்திலும் நடந்தியங்காநின்ற ஞானபுரமென்றொரு பட்டணமுண்டு. இந்தப்பட்டணமானது ஐம்பத்தைந்து தேயங்கட்குந் தாயாகார மாகையினாலே, இந்த ஞானபுரமென்னும் பட்டணத்தில், தன்னுயிரைப்போல் மன்னுயிர்களியாவையும் பாதுகாத்து, குடிகளிடத்தில் ஆறிலொருகடமை தீர்வைவாங்கி, ஐம்பத்தாறு தேயத்தையும் ஆளப்படாநின்ற, சத்தியவுத்தம குணாதிபனான, மோனசீலமகாராஜனென்றொரு அரசனுண்டு. இந்த வேந்தர் வேந்தனான மோனசீல மகாராஜனானவர், காணவேணியென்னுந் தேவியுடனும் பன்னிரண்டு அமைச்சர்களுடனுஞ் சிம்மாசனாதிபதியாகக் கொலுவிலமர்ந்து, ஆதுலர்க்குச் சாலையும், ஓதுபவர்கட்குணவும், அறுசமயத்தவர்கட்குண்டியும், பசுவிற்கு வாயுறையும், சிறைச்சோறும், ஐயமும், தின்பண்டநல்கலும், அறவைச்சோறிடுதலும், மகப்பெறுவித்தலும், மகவைக்காப்பாற்றுதலும், மகப்பால் வார்த்தலும், அறவைப்பிணஞ் சுடுதலும், அறவைத்தூரியமும், சுண்ணம்பீதலும் நோய்க்கு மருந்தளித்தலும், வண்ணான் கூலியீந்து வெளுத்த கலைவாங்கியீதலும், நாவிதனுக்குக் கூலியீந்து பிறர் உரோமஞ்

சிரைக்கச் செய்தலும், கண்ணாடியீதலும், காதோலைமாதருக்களி த்தலும், கண்மருந்தீதலும், தலைக்கெண்ணெய் வார்த்தலும், பெண்போகம் நல்கலும், பிறர்துயரை யறிந்துகார்த்து ரட்சித் தலும், தண்ணீர்ப் பந்தலமைத்தலும், மடம் கட்டிவிடுதலும், தடம் கட்டி விடுதலும், சாலைசோலை யமைத்தலும், ஆவுரிஞ் சுதறி யமைத்தலும், விலங்கிற்கு உணவளித்தலும், ஏர்விடு தலும், விலைகொடுத்து உயிர்காத்தலும், கன்னிகாதானம் முத லாகிய முப்பத்திரண்டு தருமங்களும் புரிந்து, ஐம்பத்தாறு தேயத்தையு மரசுசெலுத்திவருகின்ற மோனசில மகாராஜாவா னவர், இருபதாம் வயதில் பதினெட்டு வயதுடைய கானவேணி யென்னும். பெண்மணியைத் திருமணம் புரிந்து, இல்லறம் வழு வாமல் வாழ்ந்து வருகின்றநாளையில், தற்காலம் அரசனுக்கு நாற்பத்திரண்டு வயதும், அரசிக்கு நாற்பது வயதாகியும் இது கால பரியந்தம் இந்நாழிகைவரைக்கும் கானவேணியென்னும் இராஜபத்தினிக்கு ஓர் மழலையேனும் பிறக்கவுமில்லை பிறந் திறக்கவு மில்லை. ஆகையினாலே சக்ரவர்த்தியானவர் வியாகூலங் கொண்டு தனக்குப்பின்பு இவ்வைம்பத்தாறு தேயத்தையும் ஆளுவதற்காக மகப்பேறாகிய புத்திரபாக்கிய முண்டாக வில்லை யே யென்று கவலைகொண்டவராகி கொலுமண்டபத்தில் சிம்மா தனத்திலமர்ந்து, முகவாட்டங்கொண்டு பெருஞ்சாகரமாகிய துக்கக்கடலில் மூழ்கியிருக்கும் பாவனையாகச் சக்ரவர்த்தியான வர் சபாமண்டபத்தில் வீற்றிருந்தார்.

பன்னிரண்டு மந்திரிமார்களும், பிரதானிகளும், கருணீகர் களும், இராயசக்காரர்களும்.படைவீரர்களும்,கொடிவீரர்களும் (சிறியதேன்கூட்டின்மீது ஈக்களானது சூழ்ந்து கொண்டிருக்கி ன்ற பாவனையாக) வீராதிவீரர்களெல்லாம்அரசனைப் புடைசூழ் ந்துகொண்டு எச்சரிக்கை கொடுத்து வீற்றிருக்கும்போது ஆம் பாமாதர்கள். நிர்த்தனஞ்செய்ய, கீதநாதத் தாளமேளங்கள் முழங்கவும், இவ்வித பெரும்பான்மையாகிய ஆடம்பரங்களை யெல்லாங்கண்ணால் நோக்கிப்பார்க்காமற்படிக்கு (இந்த புவன போகசாரமாகிய) பூமியை நோக்கிப் பார்த்துக்கொண்டு சக்ர வர்த்தியானவர் மௌனமாகவே வீற்றிருந்தனர்.

ஐம்பத்தாறு தேயத்தையும் ஆளப்பட்ட சக்ரேஸ்வரனாகிய மோன சீலமகாராஜாவானவர். பூமியைப் பார்த்து, கவிழ்ந்துக்

கொண்டிருக்கின்றதை ஆங்குள்ள பல்லோர்களும் பார்த்துக் கொண்டிருந்த போதிலும், முதல் மந்திரியாகிய முழுமதியென் பவர் எழுந்து இருகரத்தையுங் கட்டிக்கொண்டு குனிந்து அர சனது முகத்தை யுற்றுப் பார்த்துவிட்டு திடீரென்று நிமிர்ந்த வுடனே சக்ரேஸ்வரனும் திடுக்கென்று நிமிர்ந்து முழுமதியென னும் முதல் மந்திரியின் முகத்தைநோக்கி ஏனையா முதன் மந்தி ரியாரே! யென்ன பார்க்கின்றீரென்று மன்னனனவர் கேட்கும் போது, முதன்மந்திரியானவர் திடீரென்று தனது இரண்டுகாத் தையும் சிரசின்மீது கைகூப்பிவணங்கி கேளுமையாமகாராஜனே நெடுநேரம் வரையிலும் தாங்கள் பூமியைநோக்கிப் பார்த்துக் கொண்டு யாதோ சஞ்சலத்தில் மூழ்கியிருக்கின்ற பாவனையாக, செந்தாமரைக் கமலம் போலுள்ள உமது முகமானதுவாடியிருக் கின்ற காரணம் யாதோ ஒன்றுந்தெரியவில்லை. ஆகையினுமல்ல உமது மனக்கடலானது கொந்தளிப்பெடுத்து, மேலுக்கலைவீசி யடித்தாற்போல, உமது மனதில் நினைத்தகாரியத்தை அடியே னுக்கு விபரமாக வெளியிடவேண்டுஞ் சுவாமியென்று முழுமதி யென்னுந்திருநாமமுடைய முதல்மந்திரியானவர் கேட்டவினு வை மன்னனனவர் கேட்டு மந்திரியைநோக்கிக் கூறலாயினர்.

கேளாயப்பா அமைச்சர் முதல்வனே! யான்கொண்டமனோ துக்கத்தை நிவர்த்தி செய்வதற்கு சுயம்பிரகாசச் சத்துசித்தா னந்த பரமேசுரர்தானே கருணைக்கண்திறந்துபார்க்காம லிருக்கி ன்றமையினாலே மானிடர்களாலே எனது சஞ்சலத்தை யொழிப் பதற்கு ஏதுவாகுமோ ஆகையினாலே நீ கேட்பதினாலும் யானு னக் கெடுத்து விளம்புவதினாலும் யாதொரு பிரயோசன மிலலை யானதைப்பற்றி, அதனை நீயேன் கேட்கின்றாய் இதனைவிடுத்து நீ யுனது தொழிலைப்பாரும் பிள்ளாயென்று ஏகசக்ராதிபதியா கிய மோனசீல மகாராஜனனவர் மொழிந்த மொழியைக்கேட்டு அமைச்சர் கோமானாகிய முழுமதியென்பவன் வேந்தர்வேந்தனை நோக்கி விளம்புகின்றான்.

மன்னாதிமன்னர்கள் போற்றி யேற்றும் மண்டலேஸ்பரா கேளும் உமது மனதின் சஞ்சலத்தை ஜெகதீசுரனே பற்றறுக் காமலிருப்பதைப்பற்றி அந்த இரகசியத்தைப் பிரபஞ்சமானி டர்கட்கு அறிவிக்கலாகாதென்பது உண்மையுண்மையேயாம் அதிலும் அரசர்கட்கு யாதொரு மிடியும் வாராமற்படிக்கு பாது

காக்க வேண்டியது அமைச்சரின் கடமை பயிர்விளைவதற்கு ஆதாரம் வேலியே யன்றி மற்றவைகளாகாமையினாலே பயிரைப் போன்ற உம்மைக்காப்பாற்ற வேண்டியதற்கு, வேலியாகிய அடியே னொருவனிருக்கும்போது, உமது மனதி னெண்ணத்தையிவ வடிமைக்குத் தயைகூர்ந்து வெளிப்படையாக விளம்புவீராளுல் அதனைக்கேட்டதின் பின்பு அதனது நாட்டத்தை யெடுத்து யோசித்து நடக்குங்காரியத்தைக் குறைவற நடத்தலாகும். அதி லும் உமது உள்ளத்தில் இருக்கின்ற கவலையைப் பல்லோரும் அறியும்படியாக உரை செய்ய மனமில்லாவிடினும் இவ்வடியேனு க்கு மாத்திரம் செவியினிடமாகவாயினுஞ் செப்பவேண்டுஞ் சுவாமி யென்று முழுமதி யென்னும் முதல்மந்திரியானவர்கேட் கும்போது ஐம்பத்தாறு தேயத்தையும் ஆளப்பட்ட அதிபதி யாகிய மோனசீலமகாராஜன் முதல் மந்திரியை நோக்கி மொழி யத்தொடங்கினர்.

எனதன்பிற் கிசைந்த அமைச்ச சிகாமணியே, கேளும் யான் கொண்டிருக்கப்பட்ட மனைவியாகூலமானது பிரம்ம ரக சியம் பரமரகசியம் புவனரகசியம் முதலாகிய மௌனரகசியங் களான மொழிகள் யாதொன்றுங் கிடையாது கடவுளானவர் எனக்கு சகல சம்பிரதாயமுங் கொடுத்து புத்திரபாக்கியமொ ன்று உதவிசெய்யாம லிருக்கின்றார். எனக்கும் நாற்பது வய தாகி விட்டது. எனது தேவியாகிய கானவேணிக்கும் முப்பத் தெட்டு வயதாகி விட்டது. இதுகாலபரியந்தம் எங்களுக்குஒரு குழவியேனும் பிறக்கவுமில்லை. பிறந்திறக்கவுமில்லை. ஆனதைப் பற்றி எனக்குப் பின்பு இந்த ஐம்பத்தாறு தேயத்தையும் அரசு ரிமை புரிந்து செங்கோல் நடாத்தும்படியாக ஒருபுத்திரனாகி லும் இல்லையே இதற்கென்ன செய்குவோமென்று மனவாட்டங் கொண்டிருக்கின்றேனே யொழிய மற்றொன்றுக்குஞ் சஞ்சலப் படவில்லை யப்பனே யென்று, மன்னுதி மன்னனாகிய மோனசீல மகாராஜன் சொன்ன சொற்களை முன்னவ வமைச்சனானவன்கே ட்டு அரசனைநோக்கி யுரைக்கத்தொடங்கினர்.

கேளும் சுவாமி அரசர் கோமானே! கேளும் உமக்குக் குறை வின்றி சகல செல்வங்களு மளித்த பரம்பொருளானவர் மழலைச் செல்வம் வழங்கவில்லை யென்று கலக்கங்கொண்டிருக்கின்றீரல் லவா நல்லது உமக்குத் திருமணமாகி ஏறக்குறைய இருபதாண்

டுக்குள்ளாகின்றனவே, இதுகால பரியந்தம் உமது தேவியார் வயற்றில் கருதரிக்காமலிருக்குங் காரணமானது என்னவெ ன்றால், அரசியின் வயற்றிலிருக்கப்பட்ட கருப்பப் பையின் வா யிலானது, சுக்கிலத்தை யேற்றுக்கொண்டு உட்செல்லும் படி யானமார்க்கத்தில் உரோமம் விளைந்து மாசுபடிந்திருக்க வேண் டும். அவ்விதமே யிருக்குமானால் ஆயுர்வேத பண்டிதர்களை யழை த்து அதற்குத்தகுந்த ஔஷதம் வாங்கிக் கொடுப்போமானால் அதனால் கருப்பப் பையின் வாயிலினுள்ள உரோமமும் மாசும் தினகரனைக் கண்ட பனியைப்போல விலகிவிடும். அதன்பின்பு சுக்கிலமானது கருப்பப் பையிற்புகுந்து சுரோணிதத்துடன் கல ந்து பிண்டமாகி உரு திரண்டு வளர்ந்து பத்துத்திங்களுஞ் செ ன்று இராஜபத்தினியார் பாலனைப் பெற்றெடுப்பார்கள். ஆகை யினாலே இதுதான் தகுந்த யோசனையே யொழியவேறொருமார் க்கமு மில்லை யையனே யென்று அமைச்சன்கூறியவற்றை யெல் லாஞ் செவியாரக்கேட்ட அரசனானவர் மந்திரியைக்நோக்கி கூறலாயினார்.

கேளுமையா அமைச்சர் தலைவனே நீவிரறைந்த வாக்கியத் தைப்போலவே ஆயுர்வேதப்பண்டிதர்களை இங்ஙனம் அழைப் பியும் பிள்ளாயென்று அரசனுரைத்தவுடனே, முதன் மந்திரியா னவர் அருகிலிருந்த தலைக்காவலனைநோக்கி, அப்பா தலைக்காவ லனே கேளும், நமது தேசத்திலிருக்கும்படியான பண்டிதவீதி க்கு அதிகச்சுருக்காக நீ சென்று வேளாளகுல திலகராகிய ஆயு ர்வேத பண்டிதரான ஆதிமூல உபாத்தியாயரைக் கண்டு யான ழைத்துவருகச் சொன்னதாகச்சொல்லி அன்னவரைக்கையுடன் அழைத்துக் கொண்டு வாரும் பிள்ளாயென்று ஆக்ஞாபித்தவுட னே தலைக்காவலனானவன் கொலுக்கூடத்தைக் கடந்து ஓடோ டியுஞ்சென்று ஆயுர்வேதப்பண்டிதரின் அரண்மனைக்குள்ளாகப் புகுந்து ஆதிமூல உபாத்தியாயரைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து, ஐயா ஆயுர்வேத பண்டித உபாத்தியாயரே உம்மை எங்கள் முதல் மந்திரியாகிய முழுமதியென்பவர் பிடித்த பிடி யுடன் அழைத்துக்கொண்டு வரும்படியாக அடியேனை யேவினார் ஆனதினால் யானோடி வந்து தெரிவித்தனன், எழுந்திருஞ்சுவாமி எழுந்து என்னுடன்கூடவே பிரயாணப்பட்டு வாருமையனே யென்று காவலனானவன் ஓதியசேதியை வேளாளகுலதிலக ஆயுர் வேதபண்டித உபாத்தியாயரான ஆதிமூல மென்பவர் திடீரெ

ன்றெழுந்து மாளிகைக்குள்ளாகப் புகுந்து மாத்திரைப்பையை யெடுத்து இடைமடியில் வைத்துக்கொண்டு வெளியில் வந்து காவலனுடன் கூடி நடையாய் நடந்து மன்னனது கொலுமண்டபத்திற்குவந்து மோனசீல மகாராஜனையும் முழுமதியென்னும் முதல் மந்திரியையுங்கண்டு இராஜாதிராஜ ராஜபரமேஸ்பரா ஆசீர்வாதமென்று வாழ்த்தி, ஆசீர்வதித்துப்,பின்னும்அமைச்சர் கோமானை நோக்கி கேளுஞ் சுவாமி மந்திரித்தலைவரே, காவலனை யேவி ஏனையா, என்னை யாதுகாரணத்திற்காக இங்ஙனம் வரவழைத்தீர் ஓதுமையனே யென்று ஆதிமூல உபாத்தியாயரானவர் கேட்கும்போது அமைச்சர் கோமான் கூறுகின்றார்.

கேளுமையா ஆயுர்வேத பண்டிதரேகேளும் உம்மை யழைப்பித்தகாரியமாவது ஏதுக்கென்றால், நமது மகாராஜாவின் பத்தினியாகிய கானவேணியம்மனுக்குத் திருமணமாகி இருபதாண்டாகின்றது இந்த இருபது வருடகால பரியந்தம் இராஜபத்தினியார் வயற்றில் கருதரிக்கவுமில்லை, யாதொருமழலையேனும் பிறக்கவுமில்லை, பிறந்திறக்கவுமில்லை, அதனைப்பற்றி அரசியாருக்கு உமது கரத்தால் யாதாமொரு ஔஷதங்கொடுத்து கருப்பப்பையை சுத்திகரஞ்செய்து கருதரிக்கும்படியான எத்தனஞ்செய்ய வேண்டுமென்று நினைவு கொண்டு உம்மையழைத்ததே யல்லாமல் மற்றொன்றுக்கும் உம்மை யழைக்கவில்லை இதற்காகத்தான் அழைத்தேன் சுவாமியென்று அமைச்சனானவர் அறைந்து நிறுத்தினார்.

மந்திரிகோமான் சிந்தித்துரைத்த சந்தோஷவாக்கியத்தைக் கேட்ட ஆயுர்வேத பண்டிதரானவர், இராஜபத்தினியின் நாமதேயத்தைக் குறித்து, ஆரூடம்பார்த்து, மனது களிப்புகொண்டு அமைச்சனை நோக்கி கேளுமையா முதன்மந்திரியாரே! கானவேணியென்னு மிராஜபத்தினியாருக்கு ஓர் புத்திரனுண்டு. அந்தப் புதல்வனானவன் யான்கொடுக்கும்படியான ஔஷதத்தினால் ஆறுமாதத்திற்குள்ளாக அம்மண்வயற்றில் கருதரிக்க வேண்டியது. அவ்விதம் ஆறுதிங்களுக்குள்ளாக இராஜபத்தினியார்கர்ப்பவதி யாகாமற் போனால் ஆறுமாதத்திற்கு மேற்பட்டு இந்த ஞானபுரமெனனும் பட்டணத்தில் நான்கு மூலைகட்கும் நான்கு சத்திரங் கட்டுவித்து அந்தச் சத்திரத்திற்கு வரப்பட்ட அதிதி பரதேசி ஜோகிஜங்கமர் சன்னியாசர் முதலாகிய யார் வந்துளது

கேட்டாலும் இல்லையென்னுமற்படிக்கு முப்பத்திரண் டறமுங் குறைவற ஒருவருடகால பரியந்தம்நடாத்தி வருகுவீர்களானல் அரசர் புரியுந் தருமத்தைக் கண்டு பரமனவர் திருவுளங் களி கொண்டு ஒருவருடத்திற்குள்ளாக இராஜபத்தினியின் கருப்ப மோங்கச் செய்குவார். அதிலும் அரசியருக்கு தீவினைகளேதே னுமிருந்த போதிலும், அறத்தின் திறத்தால் அவ்வினையகன்று புத்திரபாக்கிய முண்டாகும். இதற்குச்சம்மதமாயின் அரசிக்கு யானிப்பொழுதே ஔஷதங்கொடுக்கின்றேனென்றுரைத்துமடி யில் வைத்துக்கொண்டிருந்த மாத்திரைப் பையை யெடுத்து அவிழ்த்து மூன்றுகுளிகைகள் எடுத்து அரசன் கரத்தில் கொ டுத்து பண்டிதர் பகருகின்றார்.

கேளுஞ்சுவாமி மகாராஜனே! அந்தக்குளிகைகள் மூன்றை யும் நாளைய முதற்கொண்டு காலையில் இரண்டரை நாழிகைக்கு ள்ளாக ஓர் நாளைக்கு ஓர் குளிகையாக மூன்றுநாளைக்கு மூன்று குளிகைகளையும் வெற்றிலையில் வைத்துச் சுருட்டி மடித்து, உமது தேவியாருக்குக்கொடுத்து உண்ணச்செய்து, இந்த மூன் று குளிகைகளையும் அம்மனுக்குக் கொடுக்கும் வாறுபோல் நீவிர் அருந்த வேண்டியது. பின்னும் மூன்றுகுளிகைகளெடுத்து மன்னன்கரத்தில் கொடுத்தவுடனே வேந்தனவர் குளிகை களைப் பெற்றுக்கொண்டு அக்குளிகைகளைச் சிம்மாசனத்தில் வைத்துவிட்டு, தன்கழுத்தில் தானணிந்து கொண்டிருக்கின்ற முத்துகண்டி, மோகனகண்டி, வைரகண்டி, வஜ்ரகண்டி, இரத் தினமாலை, முத்துமாலை, மோகனமாலை, முதலாகிய விலைமதிக்க வொண்ணாத ஆபரணங்களைக்கழட்டி (வேளாளகுலத்தினிலவத ரித்த நாதமுனி உபாத்தியாயரின் தவக்குமாரனாகிய கதாரத்ன கரம் காமனெரிந்தகட்சி உபாத்தியாயராகிய சி. நா. குப்பு சாமி முதலியாரின் தலைத்தமையனாகிய ஆயுர்வேத பண்டித ரான்) ஆதிமூல உபாத்தியாயரின் கழுத்தில் போட்டு பொக்கிஷ த்தலைவனை யழைத்து, அடேயப்பா பொருளதிகாரியே இதோ இந்த ஆயுர்வேதபண்டிதருக்கு ஐம்பதாயிரம் வராகன்கொடு த்து பட்டுப் பீதாம்பரங்களும் சரிகையுடைகளும் பட்டுக்குடை களுங்கொடுத்து, முப்பழமொடு பாலன்னத்தோடுங் கூடிய அச னமளித்து உண்ணச்செய்து, இந்த மகானுபாவரை எனது பிதாவானவர் ஊர்ந்து சென்று வரும்படியான நவரத்னச் சிவி கையில் அமர்த்தித் தண்டுதளங்கள் புடைசூழக் கொண்டு

போய்ப் பெரியவரை யவரது அரண்மனையில் இறக்கி விட்டு விட்டு தண்டிகையைத்தூக்கிக்கொண்டு இங்ஙனம் வந்துசேரக் கடவாயென்று பொக்கிஷத் தலைவனுக்கு மோனசில மகாராஜா வானவர் கட்டளையிட் டருளினர்.

அரசனுரைத்த வாக்கியத்தைக் கேட்ட பொக்கிஷத்தலை வனனவன் பண்டிதரின் முகத்தைநோக்கிப் பார்த்து வாரும் சுவாமி யென்று கரத்தைப்பிடித்து அழைத்துக்கொண்போய் பொக்கிஷச் சாலைக்குள்ளாகப் புகுந்து சிந்தாமணிப் பேழையை த்திறந்து அரசனுக்ஞையைப் போலவே ஐம்பதினுயிரம் வரா கன் எண்ணி யெடுத்து பண்டிதருக்குக் காண்பித்து. அந்தப் பொன்களையெல்லாம் வேறொருபேழையில் வைத்து அடக் கஞ்செய்து பட்டுப்பட்டாடை யுள்ளதெல்லாமெடுத்து உபாத்தி யாயருக்கு வேண்டியவளவு கொடுத்து பட்டுக்குடையெடுத்து பெரியவரின் கரத்தில் கொடுத்து இடது கரத்தைப்பிடித்து அழைத்துக்கொண்டு மடப்பள்ளிக்குள்ளாகப் புகுந்து, அறு சுவையோடுங்கூடிய அசனமளித்து உண்ணச்செய்து பெரியவர் உண்டு எழுந்ததின்பின்பு கால்கரங்களை யலம்பிவித்து,நவரத்ன மிழைத்த பஞ்சணைமீது குந்தவைத்து காலாட்களையேவி பெரிய ராஜாவின் நவரத்னச்சிவிகையைத் தூக்கிக்கொண்டு வாருங்க ளென்று கட்டளையிட்டருளினவுடனே காலாட்களோடிச்சென் றுநவரத்னச் சிவிகையை யெடுத்துக்கொண்டு வந்தவுடனே பண் டிதரைவாருமென்று அழைத்துக்கொண்டுபோய் தண்டிகையில் குந்தவைத்து ஆட்களையேவி பல்லக்கையெடுத்துக்கொள்ளச்செ ய்து. பொக்கிஷசாலைக்குள்ளாகப்புகுந்து ஐம்பதினுயிரம் வரா கன் வைத்து பேழையைத் தூக்கிக்கொண்டு வந்து சிவிகையில் வைத்துதானும் அந்தப்பல்லக்கிலமர்ந்து பண்டிதர்மனைக்குச்செ ல்லும்படியாகச் சிலவுகொடுத்தவுடனே, காலாட்கள் ஓட்டமும் நடையுமாகச்சென்று பண்டிதரின் அரண்மனைபண்டை திண்ணை யோரத்தில் தண்டிகை யிறக்கினவுடனே பண்டிதரின் கரத்தைப் பிடித்துக்கொண்டு பொக்கிஷத்தலைவனனவன் தண்டிகையை விட்டு வெளியில் வந்து பெரியவரை யழைத்துக்கொண்டுபோய் அவரது அரண்மனைக்குள்ளாக ஆசனத்தில் அமர்த்தி பொக்கி ஷப்பேழையைக் கொண்டுவரச்செய்து பண்டிதரின் சமுகண்டை யில் வைத்துவிட்டு வந்தனம் சுவாமி போய்வருகின்றேனென்று உரைத்து மனையைக்கடந்து வெளியில்வந்து சிவிகையிலமர்ந்து

தூக்கிக்கொள்ளச்செய்து பற்பல வீதிகளுங்கடந்து அரசனது மாளிகையில் வந்திறங்கி மன்னனைக்கண்டு வணங்கி சேளும் சுவாமி மகாராஜனே! தங்களாக்ஞையின்படியே பண்டிதருக்குச் சகலமு மளித்து அன்னவரை அவர் மாளிகையில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு வந்து விட்டேனென்று பொக்கிஷத் தலைவனுரைத்துச் சென்று விட்டவுடனே மகாராஜாவானவர் கொலு கலைந்து சிம்மாசனத்தை விட்டெழுந்து விட்டார். இது நிற்க பண்டித உபாத்தியாயரானவர் தனதரண்மனையில் தானுஞ் சுகஜீவியாக வாழ்ந்துக் கொண்டிருந்தனர்.

முன்னர் கொலுவை விட்டிறங்கிச் சென்ற மகாராஜாவானவர் குளிகைகளை யெடுத்துக்கொண்டுபோய் தனது பள்ளியறையிலுள்ள பேழையில் வைத்துக்கொண்டு அன்றிரவு கழித்து மறுநாட்காலையி லெழுந்திருந்து மனைவியை யெழுப்பிகாலைக் கடனதி ஸ்நானஞ் செய்துவருகும்படியாகக்கட்டளையிட்டருளி விட்டுத் தானுஞ் சென்று நித்தியக்கடன் முதலிய வெல்லாங்கழித்து முடித்து புனலி லிறங்கி ஸ்நானஞ் செய்து முடித்துக்கரையேறிவந்து திருவெண்ணீறணிந்து பரனைப்பணிந்தெழுந்து பள்ளியறைக்கு வந்து புகுந்தவுடனே கானவேணியென்னு மிராஜபத்தினியாள் தானுங் காலைக்கடன் முதலாகிய நியமநிஷ்டை முதலிய வெல்லாம் முடித்துக்கொண்டு பள்ளியறைக்கு வந்து பத்தாவைக்கண்டு வணங்கிப்பணிந்து நின்று கொண்டிருக்கும்போது நாயகனாகிய சக்ரவர்த்தியானவர் பேழையைத்திறந்து குளிகைகளை யெடுத்து பண்டிதர் மனைவிக்குக்கொடுத்த குளிகைகளில் ஒன்றெடுத்து வெற்றிலையில் வைத்துச் சுருட்டிமடித்து மனையாளை வாயைத் திறக்கச்செய்து அவளது வாயில் போட்டு அதனை யுண்டுவிடும் பெண்ணே யென்று உரைத்தவுடனே அம்மஞனவள் அத்தட்சணமே அதனைக்கசகசவென்று மென்றுத் தின்று விட்டாள்.

இராஜபத்தினியானவள் வெற்றிலையுடன் குளிகையை யுண்டுவிட்டவுடனே மகாராஜாவானவர் குளிகைகளில் ஒன்றெடுத்து அதனையும் வெற்றிலையில் வைத்துச் சுருட்டிமடித்து வாயிலிட்டு உண்டு விட்டதின்பின்பு மனையாளுடன் அமர்ந்து முப்பழமும் சர்க்கரையும் பாலும் உண்டெழுந்து மனையாளை நோக்கி உனது காரியத்தைப்பாரும் பெண்ணே யென்று மோனசீலமகா

ராஜாவானவர் போக விடை கொடுத்ததைக் கேட்ட மனையாளாகிய இராஜபத்நினியார் வேந்தனை நோக்கி தேவரீர் இதுகாலமாக இல்லாமலிப்போதென்னமோ ஒரு குளிகையை வெற்றிலையில் வைத்து எனது வாயில் போட்டு உண்ணச் செய்தீரே அந்தக்குளிகையை என்னகாரணத்திற்காகக் கொடுத்துண்ணச் செய்தது சந்தேகம் நிவர்த்தியாகும்பொருட்டாக தயை கூர்ந்து அடியாளுக்கு விடுவிக்கவேண்டும் பத்தாவே அல்லது அடியாள் கேட்டேனென்று மனதிரக்கங் கொள்ளப் போகாது நாயகனே யென்று அரசியானவள் கேட்கும்போது வேந்தனானவர் விளம்புகின்றார்.

கேளாய் மாதே கானவேணியே! நீ வினவிய சந்தேகத்தெளிவை யின்றிரவிற்குத் தெரிவிக்கின்றனன். இப்போதுரைப்பதற்கு நாழிகை யதிகமாகி விட்ட தாகையினாலே யான் கொலுவிற்குச் செல்ல வேண்டியதாகையால் இதோ போகின்றேன் பிறகுவந்து தெரிவிக்கின்றே னென்றுரைத்துப் பள்ளிமனையைக்கடந்து நடந்துகொலுமண்டபத்திற்கு வந்து சிம்மாதனத்திலமர்ந்துமந்திரியுடன் கலந்து தேசாதி காரியங்களைப் பேசிக்கொண்டு அன்று பகல் முழுவதுங் கழிந்து சபாமண்டபத்தில் கொலு கலைந்து ஆங்குள்ள பலருக்கும் போகும்படியான விடைகொடுத்துவிட்டு மகாராஜாவானவர் நடந்து அரண்மனைக்குள்ளாகவந்துபுகுந்து ஆடையாபரணங்களைக் களைந்துவைத்து விட்டு பள்ளிக்கலையை யுடுத்திக்கொண்டு காற்கரங்களை சுத்திசெய்துக் கொண்டானதின்பின்பு தேவியைக் கூவி ஓ கானவேணியே! என்று அரசன் அழைத்த குரலைக் கேட்ட அரசியானவள் இதோ வந்தேன் வந்தேனென்று திடீரென்றெழுந்து ஓடோடியும் வந்து பள்ளிமனைக் கபாடத்தைத் திடீரென்று திறந்து மனைக்குள்ளாக நுழைந்து வேந்தனைக் கண்டு வணங்கி வந்தனஞ்செய்து இருகரத்தையும் பிடித்துப் பொன்னாசனத்திலமர்த்தி இரும் நாதாவருகின்றேனென் றுரைத்துவிட்டு வெளியில்வந்து சேடிப்பெண்களை யழைத்துஅரசருக்கும் எனக்கும் ஆசனங்கொண்டு வாருங்களென்றுரைத்தவுடனே தோழிப்பெண்கள் ஓடோடியுஞ்சென்று முக்கனி சர்க்கரையும் தேனுக்கினைமாவும் பசும்பாலுடன் அறுசுவையோடுங்கூடிய அமுது படைத்துக்கொண்டு ஓடோடியும்வந்து அரசியை யழைத்துக்கொண்டுவந்து பண்டங்களை யெல்லாம் மனைக்குள்ளாகக் கொண்டுபோய் நாச்சியாரிட மொப்பிவைத்து

விட்டு ஏவற் பெண்மணிக ளெல்லாம் வெளியில் வந்துவிட்டவுடனே அரசியானவள் தலைவாழையிலை யொன்றெடுத்து அரசருக்கு முன்னிலையிற் போட்டு நீர் தெளித்துப் பண்டுபலாதி முதலாகிய தெல்லாம் வாங்கிப்படைத்து பஞ்சலோகச்செம்பில் பால் வைத்தவுடனே மகாராஜாவானவர் உண்டதின்பின்பு எழுந்து காற்கரங்க ளலம்பிக்கொண்டு தங்கத்தினால் சமைத்த சிங்கமுக நாற்காலியின் மீது அமர்ந்தவுடனே வெற்றிலையும் பச்சைக் களிப்பாக்கும் முத்து சுட்ட சுண்ணாம்பும் ஏலக்காய் ஜாதிக்காய் ஏலம், இலவங்கம் வால்மிளகு முதலாகிய மணப்பண்டங்களை யெல்லாந் தங்கத்தாம்பாளத்தி லமைத்து கானவேணியானவள் எடுத்துக்கொண்டுவந்து மன்னவன் முன்னிலையில் வைத்து ஓ சுவாமி தாம்பூலந்தரித்துக்கொண்டிரும் அடியாள் சென்று அசன முண்டுவருகின்றேனென் றுரைத்துவிட்டு அரசியாகிய கானவேணியானவள் அரண்மனையைக் கடந்து வெளியில் வந்து விட்டாள்.

இராஜபத்தினியானவள் பள்ளிமனையைக் கடந்து வெளியில்வந்து மடப்பள்ளி மனைக்குள்ளாகப் புகுந்து தனக்கினிய பாங்கிப் பெண்ணை யழைத்து அடியம்மா சேடியே அசனங் கொண்டுவாடி யுண்பதற்கு என்றுரைத்தவுடனே பாங்கிப்பெண்ணானவள் திடீரென்று அருகிலிருந்த தலைவாழை யிலையை யெடுத்து இடதுகரத்தில் பிடித்துக்கொண்டு வலதுகரத்தில் பொன்மணையொன் றெடுத்துப் போட்டு அரசியைப் பார்த்து குந்துமம்மா தாயே யென்றுரைத்து இடது கரத்திலிருந்த இலையை விரித்துப்போட்டு நீர் தெளித்து தேன்கனிகளும் பண்டுபலாதிகளும் படைத்து பால்வைதத வுடனே அரசியானவள் புசித்ததின்பின்பு அறுசுவையோடுங்கூடிய அசனம் படைத்தவுடன் அரசியுண்டெழுந்து காற்கரங்களைச் சுத்திசெய்துக் கொண்டு தாம்பூலப் பேழையைக் கொண்டுவரச்செய்து ஏலம் ஏலக்காய் முதலாகிய மணபபண்டங்கள் கலந்தபாக்கையள்ளி வாயிற் போட்டுக்கொண்டு ஓரடுக்கு இளம்வெற்றிலையை யெடுத்து இடது கரத்திற் பிடித்துக்கொண்டு வலதுகரத்தின் பெரிய விரலில் முத்துச்சுண்ணாம்பை வழித்து யெடுத்துக்கொண்டு நடையாய நடந்து அரசியானவள் பள்ளிமனைக்குள்ளாக வந்து நுழைந்தனள்.

ராஜாவானவர் போக விடை கொடுத்ததைக் கேட்ட மனையாளாகிய இராஜபத்நிளியார் வேந்தனை நோக்கி தேவரீர் இதுகாலமாக இல்லாமலிப்போதென்னமோ ஒரு குளிகையை வெற்றிலையில் வைத்து எனது வாயில் போட்டு உண்ணச் செய்தீரே அந்தக்குளிகையை என்னகாரணத்திற்காகக் கொடுத்துண்ணச் செய்தது சந்தேகம் நிவர்த்தியாதும்பொருட்டாக தயை கூர்ந்து அடியாளுக்கு விடுவிக்கவேண்டும் பத்தாவே அல்லது அடியாள் கேட்டேனென்று மனநிரக்கங் கொள்ளப் போகாது நாயகனேயென்று அரசியானவள் கேட்கும்போது வேந்தனானவர் விளம்புகின்றார்.

கேளாய் மாதே கானவேணியே! நீ வினவிய சந்தேகத்தெளிவை யின்றிரவிற்குத் தெரிவிக்கின்றனன். இப்போதுரைப்பதற்கு நாழிகை யதிகமாகி விட்ட தாகையினாலே யான் கொலுவிற்குச் செல்ல வேண்டியதாகையால் இதோ போகின்றேன் பிறகுவந்து தெரிவிக்கின்றே னென்றுரைத்துப் பள்ளிமனையைக்கடந்து நடந்துகொலுமண்டபத்திற்கு வந்து சிம்மாதனத்தி லமர்ந்துமந்திரியுடன் கலந்து தேசாதி காரியங்களைப் பேசிக்கொண்டு அன்று பகல் முழுவதுங் கழிந்து சபாமண்டபத்தில் கொலு கலைந்து ஆங்குள்ள பலருக்கும் போகும்படியான விடைகொடுத்துவிட்டு மகாராஜாவானவர் நடந்து அரண்மனைக்குள்ளாகவந்துபுகுந்து ஆடையாபரணங்களைக் களைந்துவைத்து விட்டு பள்ளிக்கலையையுடுத்திக்கொண்டு காற்கரங்களைச் சுத்திசெய்துக் கொண்டானதின்பின்பு தேவியைக் கூவி ஏ கானவேணியே! என்று அரசன் அழைத்த குரலைக் கேட்ட அரசியானவள் இதோ வந்தேன் வந்தேனென்று திடீரென்றெழுந்து ஓடோடியும் வந்து பள்ளிமனைக் கபாடத்தைத் திடீரென்று திறந்து மனைக்குள்ளாக நுழைந்து வேந்தனைக் கண்டு வணங்கி வந்தனஞ்செய்து இருகரத்தையும் பிடித்துப் பொன்னாசனத்திலமர்த்தி இரும் நாதாவருகின்றேனென்றுரைத்துவிட்டு வெளியில்வந்து சேடிப்பெண்களை யழைத்துஅரசருக்கும் எனக்கும் ஆசனங்கொண்டு வாருங்களென்றுரைத்தவுடனே தோழிப்பெண்கள் ஓடோடியுஞ்சென்று முக்கனி சர்க்கரையும் தேனுந்தினைமாவும் பசும்பாலுடன் அறுசுவையோடுங்கூடிய அமுது படைத்துக்கொண்டு ஓடோடியும்வந்து அரசியை யழைத்துக்கொண்டுவந்து பண்டங்களை யெல்லாம் மனைக்குள்ளாகக் கொண்டுபோய் நாச்சியாரிட மொப்பிவைத்து

விட்டு ஏவற் பெண்மணிக ளெல்லாம் வெளியில் வந்துவிட்ட வுடனே அரசியானவள் தலைவாழையிலை யொன்றெடுத்து அரச ருக்கு முன்னிலையிற் போட்டு நீர் தெளித்துப் பண்டுபலாதி முத லாகிய தெல்லாம் வாங்கிப்படைத்து பஞ்சலோகச்செம்பில் பால் வைத்தவுடனே மகாராஜாவானவர் உண்டதின்பின்பு எழுந்து காற்கரங்க ளலம்பிக்கொண்டு தங்கத்தினால் சமைத்த சிங்கமுக நாற்காலியின் மீது அமர்ந்தவுடனே வெற்றிலையும் பச்சைக் களி ப்பாக்கும் முத்து சுட்ட சுண்ணும்பும் ஏலக்காய் ஜாதிக்காய் ஏலம், இலவங்கம் வால்மிளகு முதலாகிய மணப்பண்டங்களை யெல்லாந் தங்கத்தாம்பாளத்தி லமைத்து கானவேணியானவள் எடுத்துக்கொண்டுவந்து மன்னவன் முன்னிலையில் வைத்து ஓ சுவாமி தாம்பூலந்தரித்துக்கொண்டிரும் அடியாள் சென்று அசன முண்டுவருகின்றேனென் றுரைதது விட்டு அரசியாகிய கானவேணியானவள் அரண்மனையைக் கடந்து வெளியில் வந்து விட்டாள்.

இராஜபத்தினியானவள் பள்ளிமனையைக் கடந்து வெளி யில்வந்து மடப்பள்ளி மனைக்குள்ளாகப் புகுந்து தனக்கினிய பாங்கிப் பெண்ணை யழைத்து அடியம்மா சேடியே அசனங் கொண்டுவாடி யுண்பதற்கு என்றுரைத்தவுடனே பாஙகிப்பெ ண்ணனவள் திடீரென்று அருகிலிருந்த தலைவாழை யிலையை யெடுத்து இடதுகரத்தில் பிடித்துக்கொண்டு வலதுகரத்தில் பொன்மணையொன் றெடுத்துப் போட்டு அரசியைப் பார்த்து குந்துமம்மா தாயே யென்றுரைத்து இடது கரத்திலிருந்த இலை யை விரித்துப்போட்டு நீர் தெளித்து தேன்கனிகளும் பண்டு பலாதிகளும் படைத்து பால்வைதத வுடனே அரசியானவள் புசித்ததின்பின்பு அறுசுவையோடுங்கூடிய அசனம் படைத்த வுடன் அரசியுண்டெழுந்து காற்கரங்களைச் சுத்திசெய்துக் கொண்டு தாம்பூலப் பேழையைக் கொண்டுவரச்செய்து ஏலம் ஏலக்காய் முதலாகிய மணபபண்டங்கள் கலந்தபாககையள்ளி வாயிற் போட்டுக்கொண்டு ஓரடுக்கு இளம்வெற்றிலையை யெடு த்து இடது கரத்திற் பிடித்துக்கொண்டு வலதுகரத்தின் பெரிய விரலில் முத்துச்சுண்ணும்பை வழித்து யெடுத்துக்கொண்டு நடையாய நடந்து அரசியானவள் பள்ளிமனைக்குள்ளாக வந்து நுழைந்தனள்.

சக்ரவர்த்தியானவர் தேவியைக்கண்டெழுந்து அம்சதூளிகா மஞ்சத்தின்மீதேறி அமர்ந்துகொண்டவுடனே தானுஞ்சென்று அந்தப் பஞ்சணையின்மீது மன்னனுடனுக்கடுத்தாப்போலமர்ந்து என்சுவாமி தாம்பூலந்தரித்துக் கொண்டீர்களாவென்று வினவி சிலது நேரம் வார்த்தையாடிக்கொண்டிருந்து அரசனைகளிக்கச்செய்து வேந்தன் முகக்குறியைக் கண்டு நமது நாயகனானவர் மனக்களிப்போடிருக்கின்றாரென்றுணர்ந்து அரசனை நோக்கி கேளுஞ்சுவாமி எனக காத்யந்தமாகிய நாதனே இன்றைய காலையில் வெற்றிலையில் ஏதோகுளிகை மடித்துக்கொடுத்து உண்ணச்செய்தீரே அதனது சங்கதத்தை இப்போதுரைக்கின்றேனென்று காலையிலுரைத்துவிட்டுப் போனீரே அந்தக்குளிகையை யுண்பதினாலே என்ன லாபநஷ்டங் கிடைக்கும் அல்லது நன்மை துன்மைதான் கிடைக்குமா என்னதானிதில் பலனுண்டோ அந்தப் பலத்தின கருத்தை இப்போது அடியாளுக்குத் தயைகூர்ந்து சற்றுநேரஞ் சாற்றவேண்டுமென்று மனைவியானவள் வினவிய சொற்களை மன்னனானவர் கேட்டு தேவியின்முகத்திற்கு நேராகத் திரும்பித் தேவியைநோக்கி அடிமாது சிரோன்மணியே மங்கையர்க்கரசியாளே கேளும் அந்தக்குளிகையின் கருத்தாவதென்னவென்றால் நமது தேயத்தில் ஆதிமூலப்பண்டிதரென்றொருவர் இருக்கின்றார். அன்னவர் புத்திரசந்தானவிர்த்திக்காகக் கொடுத்தக்குளிகையாகையினாலே உனக்கு இன்னும் இரண்டு நாளைக்கு இரண்டு குளிகைகள் இருக்கின்றன. நீ இன்றுகாலையிலுண்டதைப்போலவே நாளையகாலையிலும். இரண்டாநாள் காலையிலும் வந்து உண்டு விட்டுப்போகவேண்டியது எனக்கோ நித்திரை வருகின்றது. நீ இந்தமஞ்சத்தில் சயனிப்பதானால் சயனித்துக்கொள்ளும் அல்லது எதிர்மஞ்சத்திலாகிலும்போய் சயனித்துக்கொள்ளும் பெண்ணே இனியொன்றுமே பேசவேண்டாமென்று வேந்தனானவர் இருவிழிகளையும் மூடிக்கொண்டார். மன்னனானவர் கண்களை மூடிக்கொண்டவுடனே மாதரசியானவள் அந்த மஞ்சத்தில் தானே ஒருபுறமாகத்தானும் பள்ளிகொண்டு கண்களைமூடி இராஜபத்தினியானவள் தானு மயர்ந்து துயில் செய்வாளாயினள்.

பஞ்சமாபாவிகளின் மனதைப்போன்ற இருள் முழுவதும் நீங்கிற்று அரசனும் அரசியும் நித்திரைதெளிந்து அருணன்

பிறந்து பொழுது விடிந்தவுடனே எழுந்து இருவருஞ்சென்று காலைக்கடனை முடித்துக்கொண்டு வந்து நேற்றையதினம் போலவே இருவர்களுங் குளிகையை யுண்டு பாலும்பழமுமுண்டு ஆடையாபரண மலங்கரித்துக்கொண்டு வேந்தனானவர் பத்தினியினிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு பள்ளிமனையைக் கடந்து வெளியில் வந்து பாதசாரியாக நடந்து கொலுமண்டபத்திற்கு வந்து சிம்மாதனத்தி லமர்ந்து மந்திரிமார்களை நோக்கி வேந்தனானவர் தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தனர்.

மன்னன்சென்றுவிட்ட வுடனே அரசியாகிய மாதுசிரோன்மணியானவள் தானும் பள்ளிமனையைக்கடந்து வெளியில் மாளிகைக்குள்ளாகப் புகுந்து சேடிப்பெண்களை அழைத்து சோழி சொக்கட்டான் முதலாகிய ஆட்டங்களை யாடிக்காலங்கழித்துக்,கொண்டிருந்தாள். கேளீர் கதாநேயச் செல்வச்சிரோன்மணிகளே மூன்றுநாள்காலையிலும் அரசனுமரசியுங்குளிகையை பழையபடியே உண்டுவிட்டு நாள்கழித்துக்கொண்டு வருகும்போது பண்டிதர் சொன்ன கெடுவு மாதமாகிய ஆறுவதுமாதம் பிறந்தவுடனே மகாராஜாவானவர் கொலுவிலமர்ந்திருக்கும் போது ஓர்நாள் காலையில் முதல் மந்திரியைநோக்கி ஐயா முதல் மந்திரியாரே ஆயுர்வேதப்பண்டித ஆதிமூலவுபாத்தியாயரானவர் குளிகையைக்கொடுத்துக் கூறிவிட்டுப்போன ஆறுமாதகெடுவுஞ் சரியாயினதா இல்லையா பாரும்பிள்ளாயென்று மகாராஜனுரைத்த சேதியைக்கேட்டு முதல்மந்திரியாகிய முழுமதியென்பவர் மொழியத் தொடங்கினர்.

இராஜாதிராஜ ராஜபரமேஸ்வரா கேளும் பண்டிதரானவர் குளிகை கொடுக்கும்போது கூறின வார்த்தையாவது என்னவென்றால் குளிகை யுண்பதற்கு ஆதாரமாக நின்றது தருமமாகையினாலேதருமத்தைச்செய்து குளிகையுண்டாற் பலன் கிடைக்குமென்றும், குளிகையுண்டதின்பின்பு தருமம்புரிந்தால் தாமதத்தில் குளிகையின் பலன்கிடைக்கு மென்றுங் கூறியல்லவோ வுமது கரத்தில் குளிகைகளைக் கொடுத்து விட்டுச் சென்றார் அந்த மகானானவர் இங்ஙனம்வந்து உமக்குக் குளிகைகொடுத்த நாள்முதற்கொண்டு இன்றையநாளோடுஆறுமாதம் சரியாகின்றபடியினாலே அந்தப் பெரியவருரைத்தகருத்தைப்போலவேஇந்த ஞானபுரமென்னும் பட்டணத்தில் முடிவுவிடத்தில் நான்கு

மூலைகட்கும் நான்குசத்திரங்கட்டுவித்து அந்தப் பண்டிதர்சொன்ன வாக்கியத்தைப் போலவே முப்பத்திரண்டறமும் குறைவின்றி நிறைவேற்றி நடாத்திவருவோமானால் உபாத்தியாயர் சொன்ன கெடுவிற்குள்ளாக எந்த விதத்திலும் இராஜபத்தினியாருக்கு வயற்றில் கருதரிக்குமையனே யென்று அமைச்சன் உரைத்த வுரையைக்கேட்ட அரசனனவர் முதல் மந்திரியை நோக்கி மொழியத்தொடங்கினர்.

கேளா யென தன்பிற்கிசைந்த அமைச்சர் கோமானே கேளும்ஆயுர்வேத பண்டிதராகிய ஆதிமூலஉபாத்தியாயர் அறைந்த உரையைப்போலவே இந்தக்ஷணமே நீயே எழுந்து சென்று கஜானவி லிருக்கப்பட்ட திரவியங்களில் உனக்கெவ்வளவுவேண்டுமோ அவ்வளவு எடுத்துக்கொண்டு நமது தேசத்தில் நான்கு மூலைகட்கும் நான்கு சத்திரம் உனது மனதின்போலவே கட்டி முடிவு செய்துவிட்டு இங்ஙனம் வாரும் பிள்ளாய் போம் போய்வாருமையா வென்று மன்னாதிமன்னனன மோனசீலமகாராஜாவானவர் மொழிந்த மொழியைக்கேட்ட முதன்மந்திரியானவர் திடீரென்றெழுந்து சபாமண்டபத்தை விட்டிறங்கி பொக்கிஷச்சாலைக்கு வந்து பொருளதிகாரியைக்கண்டு அடேயப்பா பொக்கிஷத்தலைவனே சாவியைக்கொடு என்று கேட்டு திரவியப்பேழையின் சாவியை முதல்மந்திரியானவர் வாங்கிக்கொண்டு பொக்கிஷ மனைக்குள்ளாகப் புகுந்து தனக்கு வேண்டுமட்டும் பொருள்களெடுத்துக்கொண்டு கொல்லரையும் மண்வெட்டும்படியான மல்லர்களையுங் கூட்டிக்கொண்டு அந்தப் பட்டணத்தில் கீழ்மூலைக்குப் புகுந்து ஓர் வெட்டவெளியாகிய கானகத்தில் பதின்காத வழிக்கு அகலநீளத்தில் சவுக்கத்திற்குச்சவுக்கமாக ஏழுடுக்கு அரண்மனைகட்டிவிட்டு அந்த மாளிகைக்கு ஒன்பது வாயில்வைத்து ஒன்பது வாயில் கட்கும் வீராதிவீரராகிய காவலர்களை நியமித்து இரண்டாவது வாசற்படியண்டை ஒன்பது உருவப்பெண்களை நிறுத்தி எந்த ஆடவரேனும் வந்து உங்களொன்பதின்மரில் யாரையாகிலுங் கலவிக்கழைப்பார்களேயானல் அவர்களழைக்கு முன்னமே நீங்களெழுந்து அவர்களின் கருத்தை முடிவுசெய்து அரசனது சத்தியத்தைக் காப்பாற்ற வேண்டியதென்று பெண்மணிமார்கட்குக் கட்டளையிட்டருளினர்.

முதல் மந்திரியாகிய முழுமதியென்பவர் கணிகையின்னார் கட்குக் கட்டுதிட்டஞ் செய்துவிட்டு இரண்டாவது வாயிலைக் கடந்து மூன்றாவது வாயிலிலும் நான்காவதுஐந்தாவதுஆறாவது ஏழாவது வாயில் மட்டிலுள்ள காவலர்கட்கு ஒதத்தகுந்தவாக்கியங்களை யோதித் திட்டஞ்செய்துவிட்டு ஈரேழு தலைமுறைக் குந் தானங்கொடுக்கும்படியான பொருள்களை முதற்கோட்டையிலமர்த்திவிட்டு இரண்டாவது கோட்டைக்குச் சென்று முதல் கோட்டையிலமைத்த பிரகாரமே ஒன்பது கோட்டைகளிலும் சகல சாம்பிரதாயமுஞ் சித்திசெய்து அமைத்துவிட்டு முதல் மந்திரியானவர் தென்பாரிசத்தில் திரும்பி அங்ஙனமிருக்குங்கானகத்தில் முதலில் கீழ்த்திசையில் கட்டிமுடித்த மாளிகையைப் போலவே அங்ஙனம் கட்டிமுடித்து அந்தக்கோட்டையிலும் செல்வப் பொருள்கள் இயாதொன்றுங் குறையாமலமைத்துவிட்டு ஆட்களையேவி அழைத்துக்கொண்டு மேற்குதிசையிற்சென்று அங்ஙனமிருக்கின்ற வனத்தில் முன்னமமைத்த இரண்டுகோட்டைகளைப் போலவே சகலமும் அமைத்துவிட்டு வடக்குதிசையிற் றிரும்பி முன்கட்டிய மூன்றுமாளிகைகளைப்போலவே அங்ஙனமு மோர்மாளிகை சமைத்து சித்தஞ்செய்துவிட்டுகூலியாட்களுக்கெல்லாம்கொடுக்கவேண்டியதொகையைக் கொடுத்துவிட்டு முதல் மந்திரியானவர் கொலுவிற்கு வந்து மன்னனைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்துதான் சென்றக்காரியத்தையும் நான்கு மூலைகளிலும் சத்திரங்கட்டி சகலசாம்பிரதாயமும் அமைக்து வந்த சேதியை யாதியோடந்தமாக அரசனுக்கு ஒதிவிட்டு முழுமதியென்பவர் தனது காரியத்தில் விவேகத்தை யூன்றி வீற்றிருந்தனர்.

இங்ஙனம் நிற்க நான்குமூலைகளிலுங் கட்டியிருக்கும்படியான சத்திரத்தில் தாய்தந்தை இருவர்களைத்தவிர மற்றைய தானமெல்லாங் கொடுத்துக்கொண்டு வருகும்போது சத்திரங் கட்டின மூன்றாவது மாதத்தில் கானவேணியென்னு மிராஜபத்தினியானவள் ஐந்துமாதங் கருப்பவதியாயினள். இவ்வாறு இராஜபத்தினியாகிய கானவேணி யென்பவள் சூல்கொண்டு நடந்தியங்குகின்றதை ஐம்பத்தைந்து தேயத்திற்கும் அதிபதியாகிய மோனசீலமகாராஜாவானவர் துயில்வேளையில் கண்குளிரக் கண்டு களிப்படைந்து வீற்றிருக்கும்போது இராஜபத்தினிக்கு ஐந்துமாத முதற்கொண்டு ஆறு ஏழு எட்டு ஒன்பதுஞ்

சென்று பத்தாவதுத் திங்கள் பூரணமாக நிறைந்தவுடனே பத்தாவை வெறுத்த மனதுள்ளோளாகிப் பிரசவவேதனை பட்டு மூல்கின்றதைப் பார்வையிட்ட பாங்கிமார்கள் ஓடோடியுஞ் சென்று கொலுமுகத்திலிருக்கின்ற வேந்தனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து கேளும் சுவாமி அரசரே எங்கள் நாச்சியாராகிய கானவேணியம்மாள் பூரணச்சூல்நோய் கொண்டு பிரசவ வேதனை படுகின்ற சேதியை அறிவிக்க தாதிப்பெண்ணேடியும் வந்தேன் சுவாமி யென்று தாதிப்பெண்ணுனவள் பேசத்துணிந்தாள்.

ஏ இராஜாதிராஜராஜபரமேஸ்வரா! ஆசீர்வாதம் நீர் செய்த தான தருமங்கட் கிரமங்கள் உமது தேவியாராகிய கானவேணியென்னும் எங்கள் தாயானவள் கருப்பவதியாகினது எங்களுக்கெல்லாம் மேன்மையே யன்றி தாழ்வொன்று மில்லையானதினாலே இவர்க்குப்புத்திர சந்தானமுண்டாகவேண்டு மென்று யாங்களு மனேக காலங்கடவுளைக்கோரித் தவஞ்செய்துக் கொண்டிருக்கிறோம் அஃதைப்பற்றிப் பரமனுனவர் திருவுளங் கொண்டு அம்மன் வயற்றில் கருவையுண்டு செய்தனர்.

ஏ கதாநேயச்செல்வர்காள்! நமது முதல் மந்திரியாகிய முழுமதியென்பவர் இந்த புத்திரியின் வயற்றில் ஆண்பிள்ளை பிறக்க வேண்டும் ஐம்பத்தைந்து தேயத்தையும் ஆளவேண்டும் என்ற எண்ணமானது பரிபூரணமாயிருந்தபோதிலும் சக்ரவர்த்திக்கு மாறெண்ண பட்டிருப்பதினாலே இதற்கு மறுமழிசொல்லாது மௌனமாக கொலுமுகத்தில் மன்னனேடு பற்பலரும் வீற்றிருக்கும்போது அரசனுனவர் அமைச்சனை நோக்கி ஐயா முதல்மந்திரியாரே இப்போது இங்ஙனம் வந்துரைத்த பாங்கியின் மொழிக்கிணங்க மருத்துவமாதை வரவழையும் பிள்ளாயென்று சக்ரேஸ்பரனுனவர் உரைத்தமொழியைக் கேட்ட முதல் மந்திரியாகிய முழுமதியென்பவர் எழுந்து அருகிலிருந்த காவலனையேவி அடேயப்பா காவலனே நீ அதிக சுருக்காகச்சென்று மருத்துவமாதை யழைத்துக்கொண்டு வாரும் யென்று கட்டளையிட்டவுடனே காவலனுனவன் ஓடோடியுஞ் சென்று மருத்துவமாதை யழைத்துக்கொண்டுவந்து மந்திரிமுன்னிலையில் விட்டுவிட்டு காவலனுனவன் தனது காரியத்தில் பிரவேசித்திருந்தனன்.

முழுமதியென்னுந் திருநாமமுடைய முதல் மந்திரியான வர் மருத்துவமாதை நோக்கிக் கேளாய்பெண்ணே மருத்துவ மாதே நமது மகாராஜாவின் தேவியாகிய கானவேணியம்மாள் பிரசவவேதனையும்துன்பமும் படுவதினாலே, நீசென்று அரசியைப் பதனமாகக் கார்க்கவேண்டு மென்று உன்னை யழைத்ததேயல்லா மல் வேறொன்றுக்கும் உந்தனையழைக்கவில்லை. போம்பெண்ணே அரண்மனைக்குள்ளாகச்சென்று அரசியை ஆதரியும் பெண்ணே யென்று அமைச்சனானவர் திருவாய்மலர்ந்தருளினார்.

அமைச்சர்கோமா னறைந்தவாக்கியத்தைக்கேட்ட மருத் துவமாதானவள் அங்ஙனமிருந்தகன்று அரண்மனைக்குள்ளா கப்புகுந்து அரசியினருகிற்சென்று அம்மனை முக்காலியின்மீது ட்காரவைத்துப் பக்குவமாக மருத்துவம்பார்த்து இராஜபத்தி னியின் வயற்றை விட்டுக் கருவானது உதயமாகித் திருமலையின் மீதிருந்துத் தலைகீழாக விழுவோரைப்போல காயாபுரியென்னும் பட்டணத்தைவிட்டுக் காசினியென்னும் ப்ரபஞ்சத்தில் வந்து விழுந்தவுடனே மருத்துவமாதானவள் அருகிலிருந்த பாங்கி யையேவி அம்மா பாங்கிப்பெண்ணே நீ அதிக சுருக்காகச்செ ன்று அரசியார் ஆண்குழந்தையையீன்றதாக அறிவித்து வாருந் தாயே யென்று அறைந்தவுடனே சேடிப்பெண்ணானவள் ஓடோ டியுஞ்சென்று கொலுமண்டபத்திற்குவந்து வேந்தனைக்கண்டு வணங்கி கேளுஞ்சுவாமி மன்னர் பெருமானே எங்கள் நாச்சியா ராகிய இராஜபத்தினியார் ஆண்குழந்தையை யீன்ற சேதியை யறிவிக்க வந்தனன் சுவாமியென்று தாதிப்பெண்ணேகிவிட்டுச் சென்றதின்பின்பு மன்னர் கோமானாகிய மோனசீலமகாராஜா வானவர் மந்திரியை நோக்கி கேளாயெனதன்பிற்குகந்த மந்திரி யே எனது தேவியாகிய கானவெணியாள் ஆண்மகவை யீன்றன ளாம் ஆகையினாலே ஆயூர்வேத பண்டிதராகிய ஆதிமூல உபாத் தியாயரை வரவழைத்து நமது குழந்தைக்கு கிரகநிலையைக்கண்டு ஜாதகம் கணிக்கவேண்டியதால் சுருக்காக அழைத்து ஜாதகங் கணித்ததின் பின்பு நமக்கு குழந்தை பிறந்தசேதியை ஐம்பத் தைந்து தேசத்தரசர்கட்கும் அறிவித்து முப்பத்திரண்டறமுங் குறைவர நடாத்தி நமது ஞானபுரியிலிருக்குங்குடிகளுக்கு இந்த வருடத்திய தீர்வையை யினமாக எடுத்துக்கொள்ளச்செய்து. ஏழை எளியோர் முதலாகிய ஜோகி, ஜங்கமர், அதிதி, பரதேசி,

கட்கு சகல தானதருமங்களும் புரியக்கடவாயென்று மன்னா
திமன்னனாகிய மோனசீல மகாராஜாவானவர் கூறிய மொழியைக்
கேட்ட அமைச்சர் பெருமானானவர் அருகிலிருந்த காவலனை
யேவி ஆதிமூல உபாத்தியாயரை யழைத்துக்கொண்டு வருகும்
படியாய்க் கட்டளையிட் டருளினவுடனே காவலனானவன்
ஓடோடியுஞ் சென்று பண்டிதரைக் கண்டு வணங்கிவந்
தனஞ் செய்து சுவாமி உபாத்தியாயரே! எங்கள் வேந்தர்
பெருமானுக்கு ஆண்மகப் பேறு உண்டானதைப்பற்றி முழு
மதியென்னும் அமைச்சர் கோமானானவர் தங்களை யழைத்துக்
கொண்டு வருகும்படியாக கட்டளையிட்டதைப்பற்றி அடியே
னிங்ஙனம் ஓடிவந்து அறிவித்தனனென்று காவலனானவனுரை
த்தமொழியைப் பண்டிதர் கேட்டுத் திடீரென்றெழுந்து நடை
யாய் நடந்து கொலுக்கூடத்திற்கு வந்து மன்னர் பெருமானைக்
கண்டு இராஜாதி ராஜ ராஜபரமேஸ்பரா ஆசீர்வாதம் எனையோ
லைவாவழைத்தகாரியத்தை விரித்துரைத்தல் வேண்டும் மகா
ராஜனே யென்று உபாத்தியாயானவர் வினவும்போது அமை
ச்சர் தலைவனாகிய முழுமதியென்பவர் மொழியத்தொடங்கினார்

கேளுமையா சுவாமி உபாத்தியாயரே மகாராஜாவின்தேவி
யார் இன்றையதினங் காலையில் ஐந்து நாழிகைக்கு மகப்பே
றடைந்தனர். அதற்காக ஜாதகம் கணிக்கும் பொருட்டாகவும்
மை வரவழைத்ததேயன்றி மற்றொன்றுக்குமல்ல ஆகையினாலே
அந்தக்குழந்தைக்குக் கோள்களெவ்வித மமைந்திருக்கின்றதோ
வதனைப் பார்த்துரை செய்யவேண்டும் சுவாமி யென்று
அமைச்சர் முன்னோனுரைத்த சேதியை உபாத்தியாயர் கே
ட்டு இராசி மண்டபமமைத்து கிரகநிலைகளை சரிவரவூன்றி கே
ளுஞ்சுவாமி மன்னாதிமன்னர் போற்றிப்புகழ்கின்ற மண்டலேஸ்
பரா கேளும் சித்திரைத் திங்களில் முதல்தேதியில் சுக்கிரவார
த்தில் காலை ஐந்து நாழிகைக்கு ஜெனனமானதினாலே அஃது
ஆண்குழவியாக இருத்தல்வேண்டும் ஆனதைப்பற்றி அந்தக்
குழந்தைக்கு தற்காலம் கிரகம் நின்றநிலை கார்த்திகை முதற்
கால் மேஷத்தில் அருணனும் கார்த்திகைபின் முக்கால் ரிஷபத்
தில் புதபகவானும் புனர்ப்பூசம் இரண்டில் குருவும் ஆயிலியம்
ஒன்றில் அங்காரகனும் சுவாதி இரண்டில் குருவும் விசாகமொ
ன்றில் சந்திரனும்கேட்டை மூன்றில் கேதுவும் மூலம்ரெண்டில்

சுக்கிரனும் பூராடம் ஒன்றில் சனியுமாக தற்காலக் கிரகங்கள் நின்ற நிலையிதுவாகையினாலே இனிமீது இந்த ஜாதகனின் பலாபலனைத் தெரிவிக்கின்றேன் கேளும் சுவாமி யென்று உபாத்தியாயரானவர்கூறத் தொடங்கினார்.

| | | | |
|---|---|---|---|
| | ல சூரியன் | புதன் | |
| சுக்கிரன் சனி | இராசி மண்டபம். | | குரு |
| கேது | | | அங்கார |
| | குருசந்தி | | |

கேளுஞ்சுவாமி மகாராஜனை மேஷராசியில் ஜெனனமானதினாலே லக்கினாதிபதி அங்காரகன் ஐந்தாமிடத்தில் விரோதியாகவும் மேஷலக்கினத்தில் சூரியன் பகைவனாகவும் இரண்டாமிடத்தில் புதபகவான் நீசனாகவும் நான்காமிடத்தில் குரு பாபியாகவும் அஷ்டமத்து சந்திரன் உச்சனாகவும் குருவிரோதியாகவும் பத்தாமிடத்தில் கேது நீசனாகவும் பதினொன்றில் சனிஆட்சியாகவும் சுக்கிரபகவான் நேயனாகவும் ஜென்மலக்கினத்தில் சூரியன் விரோதியாகவும் இருப்பதைப்பற்றி இந்த ஜாதகனானவன் பனிரண்டாவதாண்டில் மகுடாபிஷேகஞ் செய்துகொண்டு பதினைந்தாமாண்டில் இடதுகரம் அற்றுப்போய் பரதேசியைப் போல வேடம்பூண்டு நாடுநகரங்களை விட்டு காடாந்தகாரத்தை நோக்கிச் செல்லுவான். இன்னும் பதின்மூன்றாவது வயதில் அந்தவருடத்திலேயே தாய்தந்தையர்கட்கு கருமம் முடித்திடுவான். அதிலும் இந்த ஜாதகனுக்குப் பதினாறாவது வயதில் மாணகண்டமொன்றுண்டு அந்த கண்டத்தில் மாணமாகாமல் மீறுவானானால் எண்பது வயதுவரையிலும் மண்ணுலகில் வாசஞ் செய்து மன்னாதி மன்னர்களாற் புகழ்ந்து கொண்டாடி

எண்பத்தோராமாண்டில் கார்த்திகை நட்சத்திரத்தில் அமரபட்சம் சதுர்த்தசிதிதியில் சுக்கிரவாரம்காலை ஐந்து நாழிகைக்கு சிவலோகபதவியை யடைகுவான் சுவாமியென்று உபாத்தியாயருரைத்த மொழியைக்கேட்ட அரசனானவர் இடிவிழுந்தபனையைப்போலவும் அடியற்ற விருட்சத்தைப்போலவும் அயர்ந்து மௌனமாக சிம்மாதனத்தில் வீற்றிருந்தனர்.

ஆயுர்வேத பண்டிதரான ஆதிமூல உபாத்தியாயர் அறைந்த மொழியைக்கேட்ட அரசனானவர் முதல்மந்திரியை நோக்கி கேளா யெனதன்பிறகுகந்த அமைச்சர்கோமானே கேளும் தவமாய்த் தவம்புரிந்து தானதருமங்களையியற்றி யின்ற சேயானது பதின்மூன்றாவது வயதில் தாய்தந்தையர்கட்கு கர்மானுஷ்டானங்களை முடித்து விட்டு பதினைந்தாவது வயதில் இடதுகரமற்று பரதேசியைப்போல் வேடம்பூண்டு நாடுநகரங்களைவிட்டு காடு கானகங்களிற் சஞ்சரித்து பதினாறாவது வயதில் மரணமாகிவிடுவானென்று உபாத்தியாயர் ஓதினரே இதற்கென்னசெய்குவேன் மந்திரியென்றுமன்னனானவர் ஓவென்றலறி இருகண்களிலுந் தாரைதாரையாக முத்துதிர்த்து ஏங்கிப்புலம்பிக்கொண்டு அமைச்சனை நோக்கிகேளாயப்பா அன்பனே எனக்குப்புத்திரப்பேறில்லையென்று சத்துசித்தானந்த தற்பரனைக்கோரி தவமியற்றி யடைந்தபாலனானவன் ஐம்பத்தைந்து தேயத்தையுமாளுவானென்று அகமகிழ்ந்திருந்தேனே ஐயையோ பதினாறாவது வயதில் இறந்து விடுவானென்றசேதியைக் காதினாற்கேட்டு என் மனமானது கனலிற்பட்ட கிருமியைப்போலத் துடிதுடிக்கின்றதே இதற்கென்ன செய்குவேன் கூறும்பிள்ளாயென்று வேந்தர்கோமானானவர் வியசனக்கடலில் மூழ்கினவராகி வீற்றிருந்தனர்.

ஐம்பத்தைந்து தேயங்கட்கும் அதிபதியாகியச் சக்ரவர்த்தியினது திருமுகத்தை அமைச்சர் முன்னோனான முழுமதியென்பவர் நோக்கி கேளுஞ்சுவாமி வேந்தர் பெருமானே தெய்வத்திருவுளமானது இத்தன்மையாக இருக்குமானால் நம்மாலாவதென்னே எல்லாம்வல்ல பரம்பொருளின் திருவருளை யன்றி மற்றப்படிக்கு ஓர் அணுவும் அசையாதாகையினாலே பிரமன் விதித்தவிதிக்கு வருந்துவதினாலே யென்னபலன் தரப்போகின்றது உபாத்தியாயரானவர் மனிதச்சுருதியிலுரைத்தவற்றை யொரு ஞா அவைகளைப்பற்றி சகலமுந்தெரிந்துள்ள சாதுவாகியநீவிர்

இத்தகையாக ஏங்குவதைப்பற்றி அடியேன் என்னவென்றெடுத்து ஓதப்போகின்றேன் ஐயனேயென்று அமைச்சர் பெருமானறைந்தவுரையைக்கேட்ட அரசனானவர் ஒருவாறுமனதுதேறித் திடங்கொண்டு மந்திரியைநோக்கி கேளாயப்பா அன்பனே வருவது வந்தே தீருமாகையினாலே இருப்பதெல்லாமிருக்கட்டும். உபாத்தியாயருககு வேண்டிய பொன்பொருள் பட்டுப் பட்டாடைகள் பரிசுகொடுத்தனுப்பும்பிள்ளாயென்றுமன்னாதிமன்னன் சொன்ன வாக்கியத்தைக் கேட்ட முழுமதி யென்னும் முதல்மந்திரியானவர் அருகிலிருந்த பொக்கிஷத்தலைவனைநோக்கி இதோ இந்த உபாத்திய யருக்கு வேண்டிய பொன்பொருள் கொடுத்தனுப்பும் பிள்ளாயென்று ஆக்ஞாபித்தவுடனே பொக்கிஷத்தலைவனானவன் உபாத்தியாயரை யழைத்துக்கொண்டு பொக்கிஷ மனைக்குச் சென்று உபாத்தியாயருக்கு வேண்டிய வளவு பொருள் கொடுத்து போகவிடை கொடுத்தனுப்பி விட்டு பொக்கிஷத்தலைவனானவன் தனது காரியத்தில் பிரவேசித்திருந்தனன்.

அரண்மனையிற் பிறந்த குழந்தையை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாகப் பாராட்டி சீர்திருத்தத்தோடு வளர்த்து வருகின்றநாளில் பதினோராநாள் காலையில் குழந்தையை ஊஞ்சலில் வளர்த்தி மோனசீல மகாராஜனும் கானவேணியம்மனும் அருகிலிருந்து வேதவேதியர்கள் புடைசூழ அந்தக் குழந்தைக்கு அறத்தாளன் என்றுதிருநாமமிட்டு அரசனும் அரசியும் திருவாய் மொழிந்து அழைத்தவுடனே ஆங்குள்ளப் பலரும அறத்தாள மகாராஜனே யென்று அழைத்தவுடனே யெல்லோருக்கும் சீனிசருக்கரை வழங்கி விடைகொடுத்தனுப்பி விட்டுப் பாலகனை நாளொருமேனியாக வளர்த்துக்கொண்டு வருகும்போது குழந்தையானது உருளுங்காலம் பிரளுங்காலங் கழிந்து நடக்குங்காலந்தோன்றி ஐந்து வயதாகினவுடனே பாலனை கல்விசாலைக்கனுப்பி அரிச்சுவடி முதற்கொண்டு இலக்கணவிலக்கியங்களும் நான்குவேதமும் ஆறுசாஸ்திரமும் அறுபத்துநான்கு கலைக்ஞானங்களும் தத்துவதிரியம் தொண்ணூற்றாறும் பதினெண்புராணங்களும் ஆகமம் இதிகாசம் முதலாகிய நூல்களும் காவியமெய்யற்றங்களும் தனுர்வேத முதலாகிய வெல்லாமாய்ந்துணர்ந்து மனுநீதிசாத்திரமும் இராஜரீகதருமமும் கற்றுத்தே

ர்ந்து அறத்தாளனென்னுந் திருநாமமுடைய இராஜபுத்திரனு னவன் பாலப்பிராய பத்துவயதாகி வீற்றிருந்தனன்.

சக்ரவர்த்தியின் குமாரனான அறத்தாளனை வேந்தனானவர் கண்டு புதல்வனது செய்கையை யறிந்தவராகையினாலே குமாரனுக்குத் திருமுடி சூட்டவேண்டுமென்று நினைவுற்று முதல்மந்திரியை நோக்கி கேளாயப்பா முதல்மந்திரியே! இன்றைய எட்டா நாள் சுக்கிரவாரம் காலையில் ஐந்துநாழிகைக்கு எனது குமாரனுக்கு இராச்சியபாரமாகிய திருமுடியைச் சூட்டியெனது செங்கோலை யவனது கரத்திற் கொடுக்கவேண்டி நினைவு கொண்டிருப்பதினாலே, ஐம்பத்தைந்து தேயத்தரசர்களையும் இங்ஙனம் விஜயஞ் செய்யும்படியாகத் திருமுக மெழுதியனுப்பித் தெரியப் படுத்தும் பிள்ளாயென்று அரசனானவர் உரைத்தவுடனே அமைச்சர்கோமானானவர் கருணீகனை யழைத்து திருவாசகமெழுதி ஐம்பத்தைந்து தேயங்கட்கும் அனுப்பும்படியாகக் கட்டளையிட்டருளினார்.

முதல் மந்திரியாகிய முழுமதியென்பவர் மொழிந்தமொழியைக்கேட்ட கருணீகனானவன் திருமுகமெழுதி தூதுவரிடங் கொடுத்து ஐம்பத்தைந்து தேயங்களுக்கும் ஏவினவுடனே, தூதுவர்கள் ஓடோடியுஞ் சென்று இராஜ சமுகங்களை யடுத்து திருமுகங்கொடுத்து திரும்பிவந்து அரண்மனைச்சேர்ந்தவுடனே முதல்மந்திரியானவர் ஆட்களையேவி ஞானபுரியென்னும் பட்டணமுழுவதும் அலங்கார ஆடம்பரங்கள் செய்யும்படியாக ஆக்ஞாபித்தவுடனே காவலர்கள் ஓடோடியுஞ்சென்று ஞானபுரியென்னும் பட்டணமுழுமையும் அளகாபுரிக்கு நிகராக அலங்காரஞ் செய்துமுடித்ததின் பின்பு தேசதேசாதிபதிகளாகிய இராஜராஜாக்களெல்லாம் ஞானபுரிக்குவிஜயஞ்செய்து வீற்றிருக்கும் போது முடிசூட்டும்படியாகிய சுக்கிரவாரம் பிறந்தவுடனேகுமாரனையழைத்து பன்னீரால் அபிஷேகம் செய்வித்து ஆடையாபரணங்க ளணிவித்து மன்னாதிமன்னர்கள் முன்னிலையிலும் வேததேவதியர்கள் சூழ்ந்திலங்கவும் ஆதிமூல உபாத்தியாயரையும் அருகிலமைத்துக்கொண்டு, புதல்வனாகிய அறத்தாளனை சிம்மாதனத்தில் அமர்த்தி வெற்றி வெற்றியென்று குமாரனது சிரசில் திருமுடியைச்சூட்டி முத்திரை மோதிர . தைப் புத்திரனின்காததின் விரலில் அணிந்து செங்கோலைக்கரத்தீந்து அப்பா புத்தி

ரசிகாமணியே கேளும், நமது ஆன்ருேர்களெல்லாம் புரிந்த அரசுரிமையைப்போல இராஜதருமநீதிவருமல் ஐம்பத்தைந்து தேயத்தையும் ஆளக்கடாவாயென்றுபுத்திரனுக்கு அனேகபுத்தி மதிகளையெடுத்துப் புகட்டிவிட்டு மன்னனானவர்மந்திரிமரர்களை நோக்கி கேளுங்களையா மந்திரிமார்களே எனது புத்திரனைப்பத்திரமாகப்பாதுகாத்து இரட்சிக்கவேண்டிய கடமை யுங்கள் திருவுளமாகையினலே சிறுவனை ஏனையோனைப்போலவே நினைந்து பணிந்துசெவிக்கக்கடவீர்களென்றுமோனசீல மகாராஜா வானவர் மந்திரிமார்கட்குக் கட்டு திட்டம் செய்துவிட்டுகொலு முகத்தைக்கடந்து அரண்மனைக்குள்ளாகப் புகுந்து வேந்தனானவர் தேவிசமேதராக வீற்றிருந்தனர்.

இங்ஙனம் நிற்க சிம்மாசனப்பதியாக வீற்றிருக்கப்பட்ட அறத்தாள மகாராஜாவாகிய இளவரசு சக்ரவர்த்தியானவர் மந்திரிமார்களுடன் கலந்து தேசாதிகாரியங்களைப் பேசி முடித்துவிட்டு கொலுவை விட்டிறங்கின வுடன் அங்ஙனம் வந்திருந்த வேந்தர்களெல்லாம் விடைபெற்றுச் சென்றதின்பின் இளவரசோனகிய அறத்தாள மகாராஜன் அரண்மனைக்குங் கொலுமண்டபத்திற்குமாக வீற்றிருக்கும்போது பதின்மூன்ருவது வயதுபிறந்தவுடனே திடீரென்று தாய்தந்தையர்கள் இருவர்களும் சிவலோகபதவி யடைந்தனர் இவர்களுக்குச் செய்யும்படியானகருமக்கிரியைகளைச்செய்து முடித்ததின்பின்பு தனதுதந்தையால் அமைத்துவைத்த தருமச்சாலையாகிய கோட்டைகட்கு ஓர்தினமொன்றுக்கு ஒவ்வொருகோட்டைகட்குச் சென்று அங்ஙன மிருக்கும் பொருள்களில் எவ்வளவு சிலவாகி யிருக்கின்றதோ வென்று பார்வையிட்டுக்கொண்டு வருகின்ற வழக்கமாக வீற்றிருந்தனர்.

இளவரசு வேந்தனாகிய அறத்தாளமகாராஜாவானவர் தனது பிதாவிற்கும் அதிகமாகிய தருமம் புரிகின்ருரென்று தரணி முழுவதிலும் பிரபல்யமாகப் பெயர்விளங்கி இருக்கின்ற சேதிசைசித்திர புரமென்னும் பட்டணத்தையாளப்பட்ட சத்தியசீல மகாராஜாவானவர் தானுந்தனது தேயத்தில் நான்குமூலைகட்கும் தருமசத்திரம் அமைத்து ஓர்சத்திரமொன்றுக்கு பன்னிரண்டு வாயல்கள் அமைத்து இயாவர் வந்து என்னபொருள் விரும்பிக்கேட்டபோதிலும் இல்லையென்னுமல் கொடுக்கக்கடவதெ

ன்று அனேகபொருள்களை யமைத்து அதற்காகிய ஆட்களை நியமித்துவைத்து நெடுநாளாகத்தருமம் புரிந்துக்கொண்டு வருகின்றநாளையில் ஞானபுரமென்னும் பட்டணத்தில் இளவரசோனாகிய அறத்தாளமகாராஜன் புரியுந்தருமத்தொழிலைச் செவியாரக்கேட்ட சத்தியசீல மகாராஜாவானவர் தனது மந்திரிமார்களை நோக்கி ஐயா அமைச்சன்மார்களே கேளுங்கள். ஞானபுரியென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாள மகாராஜனென்பவன் என்னிலும் அதிகமாகிய அறம்புரிகின்றானும் அன்னவனின் நாமதேயம் புவனமெங்கினும்பெரும்பெயராகப் பரவியிருக்கின்றமையினாலே அன்னவனை சம்மாரஞ்செய்து விடுவோமானால் அன்று முதற்கொண்டு சகலதேயங்களிலும் எனது நாமதேயம் பிரபல்யமாக விளங்குமேயன்றி அறத்தாளனிருக்கும் பரியந்தம் என்னுடையபெயர் பிரசுரமாகாதாகையினாலே இந்தட்சணமே படைகளைக்கூட்டி தண்டெடுத்துக்கொண்டுபோய் அறத்தாளனை சிரச்சேதஞ் செய்துவிட்டு ஞானபுரத்தையுங் கைப்பற்றி நாமரசாட்சி செய்யலாம். அதிக சுருக்காக தளங்களைச்சேர்த்து பிரயாணத்திற்கு சித்தப்படுத்துங்களையாவென்று சத்தியசீலமகாராஜனானவர் கட்டளையிட்டருளினார்.

அரசன்மொழியைக்கேட்ட அமைச்சனானவன் திடீரென்றெழுந்து வீராதிவீரர்களாகிய படைவீரர் நடைவீரர் கொடிவீரர் முதலாகியப்போர் வீரர்களையெல்லாஞ் சித்தஞ்செய்து பரிகரிகளுடன் ஆயுதபாணிகளாகி யெள்ளுக்கிடமில்லாமல் நெருக்குண்டு சகலரும் அரசன் முன்னிலையில் வந்து நின்றார்கள். சேனைகளை யெல்லாம் சத்தியசீல மகாராஜனானவர் விழியினால் நோக்கிப்பார்த்து தானும் ஆடையாபரண அலங்காரனாகி கத்திகேடயம் வாள் வில்அம்பு முதலாகிய ஆயுதங்களையெடுத்து இடையில் தரித்துப் புரவியின் மீதாரோகணித்துத் தண்டு தளங்களுக்கு நடுவிலமர்ந்துபோர் பேரிகையறைவிக்கும்படியாக வீரர்கட்கு அறிக்கையிட்டு சேனைகளையெச்சரித்து ஞானபுரியின் அறத்தாளனைப் போடுபோடென்று படைகளை நடத்திக்கொண்டு ஞானபுரியென்னும் பட்டணத்தெல்லைக்குள்ளாகப் புகுந்து தூதுவனையேவி சத்தியசீலமகாராஜன் சமருக்கு வந்திருக்கின்றானென்று அறத்தாளனுக்கு அறிவித்து விட்டு வாருங்களப்பா வென்று தூதுவனையேவி விட்டு தண்டுக்கு நடுவில் சத்தியசீல மகாராஜனானவர்போர்முகமாக வீற்றிருந்தார்.

சத்தியசீல மகாராஜன் ஏவிய தூதுவனானவன் ஓடோடி யுஞ்சென்று முழுமதியென்னும் முதல் மந்திரியைக்கண்டு கேளுமையா மந்திரியாரே! உமது வேந்தன்மீது எங்களரசனாகிய சத்தியசீல மகாராஜன் போர்க்கோலங்கொண்டு வந்திருக்கின்றனர். இதற்காக உமது கருத்தென்ன வெளியிடுமென்று தூதுவனானவன் கேட்கும்போது இளவரசராகிய அறத்தாள மகாராஜாவானவர் தூதுவனை நோக்கிக் கேளாயப்பா சத்தியசீல மகாராஜனின் தூதுவனே! உமதரசனுக்கும் எனக்கும் இயாதொரு விரோதமுமில்லையே என்மீதேன் போர்க்கோலங்கொண்டு இங்ஙனம் வந்தனரென்று இளவரசு சக்ரவர்த்தியானவர் கேட்கும் போது தூதுவனானவனோதுகின்றான்.

கேளுஞ்சுவாமி அறத்தாள மகாராஜனே எமதரசருக்கும் அதிகமாகிய தருமம் நீவிர் செய்வதாகவும், அதினால் சத்தியசீல மகாராஜனின் நாமதேயங் குறைவாகவும், உமது நாமதேயம் பெரும் பிரபல்யமாக விளங்குகின்றதென்றும், உம்மைவதைத்துச் சதைந்துச் சிரச்சேதஞ்செய்துவிட்டால் அதன் பின்பு அவரது நாமதேயம் பெரும் பிரபல்யமாக விளங்குமென்று உம்மீது போர்க்கோலங்கொண்டு வந்திருக்கின்றாராதலால் உமது கருத்தென்னவையா வென்று தூதுவன் கேட்கும்போது அறத்தாளமகாராஜன் கூறுகின்றார்.

கேளாயப்பா தூதுவனே! தருமத்தின்பெயரானது எனக்குப் பெரும்பான்மையாக விளங்குதென்றன்றோ நும் வேந்தன் என்மீது படையெடுத்து வந்தனன். நல்லது அந்த தருமத்தின் பெயரானது எனக்கு வேண்டியதில்லை. அந்த நாமத்தை யுங்கள் மன்னனுக்கே கொடுக்கும் பாவனையாக இதோ எனது பட்டத்தை யிப்பொழுதுதானே ஒப்புவிக்கின்றேன். வந்து பெற்றுக் கொள்ளச் சொல்லுமென்று இளவரசோனாகிய அறத்தாளனுரைத்து விட்டுத் தனது முதன்மந்திரியை நோக்கி ஐயா அமைச்சர்சோமானே! கேளும் இதோ இந்த சுரங்கத்தில்யான் இறங்கி எனது மனது போன போக்காகக் கடவுளடியே நாடிப்போகின்றேன். சித்திரபுரத்தரசனுக்கு இந்த தேயத்தைக் கொடுத்துவிடுங்களையா வென்று கூறி, சுரங்கத்தின் மார்க்கமாகஞானபுரத்தரசனான அறத்தாளமகாராஜாவானவர் ஆடையாபரணங்களை யெ

ல்லாங் களைந்துவைத்து விட்டு பரதேசியைப்போல இரண்டுகலைகளை யுடுத்திக்கொண்டு சுரங்கத்தின் மார்க்கமாக இறங்கிச்சென்று விட்டனர்.

தூதாகச்சென்ற தூதுவனானவன் அறத்தாளனுரைத்த சேதியையும் சுரங்கத்தின் மார்க்கமாகச் சென்று விட்டதையும் சத்தியசீல மகாராஜனுக்கு ஆதியோடந்தமாக ஓதியபின்பு அரசனானவன் தண்டு தளங்களையெச்சரித்துப் படைகளைத் தூண்டி அறத்தாளனின் அரண்மனையை நான்கு புறத்திலும் சூழ்ந்து வளைத்துக்கொண்டு திடீரென்று கொலுமண்டபத்திற்குள்ளாகப் புகுந்து பார்க்கும்போது, இளவரசோனாகிய அறத்தாளன் இல்லாததைக கண்டு களிப்படைந்து அறத்தாளனின் கொடியை யிறக்கிவிட்டுத்தனது சித்திர புரத்தின்கொடியை நாட்டி, அத்தேயத்தி லிருக்கப்பட்ட மந்திரி பிரதானி முதலாகிய குடிப்படைகளை யெல்லாம் தனது கைவசமாக்கிக் கொண்டு சத்தியசீல மகாராஜாவானவர் ஞானபுரியை யாண்டுக்கொண்டு வருகின்ற நாளையில் மந்திரிமார்களையும் காலாட்களையும் படைவீரர்களையுந் தூதுவர்களையும் நோக்கிக் கூறுகின்றார்.

கேளுங்களப்பா அன்பர்களே அறத்தாள மகாராஜனானவன் உயிருடனே ஓடிவிட்டபடியினாலே, அன்னவன் இன்னும் எங்கையாகிலும் பதுங்கிக் கொண்டிருந்து தருமம் புரிகுவானாதலால் அவனை யாராகிலும் உயிருடன் பிடித்துக்கொண்டு வருவீர்களானால், இந்த ஞானபுரியென்னும் பட்டணத்திற் பாதிபட்டணம் பகுந்து கொடுக்கின்றேனென்றுஉலகிலுள்ளோர்கள் பலரும் அறியும் பொருட்டாகப் பறையறைவித்துவிட்டு சத்திய சீல மகாராஜனானவன் கொலுவிலமர்ந்து தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தனன்.

இங்ஙனமிருக்க சுரங்கத்தின் மார்க்கமாகச்சென்ற தருமசிந்தையுடையோனாகிய அறத்தாளமகாராஜனானவர் மனிதர் சஞ்சாரமில்லாத வனத்திற்குச்சென்று,காய்கனிகளையுண்டு ஒரு வருடமாகக் காலங்கழித்துக்கொண்டு வருகின்றநாளையில், அந்தக் கானகத்தில் ஒரு ஆலவிருட்சமொன்றுண்டு. அந்த விருட்சத்தடியில் ஓர்குடிசையமைத்து அந்த குடிசைக்குள்ளாக ஓராண்டிக்கிழவனும் ஆண்டிச்சியும் நெடுநாளாக வாழ்ந்துகொண்டு வருகின்றார்கள். அவர்களிருவர்களும் வயதுமுதிர்ந்த விருத்

தாப்பியர்களாகையினாலே எங்கேனுஞ் சென்று ஜீவிப்பதற்குத் தள்ளாமையால் மூன்று நாளாக உணவில்லாமல் களைத்திருப்பதினால் கிழவியாகிய ஆண்டிச்சியானவள் புருடனாகிய ஆண்டியை நோக்கிக் கூறுகின்றாள்.

கேளும் சுவாமி பிராணநாயகா அதோ தென்படுகின்ற ஞானபுரியென்னும் பட்டணத்தை இதற்கு முன்னம் அரசாண்டுக்கொண்டிருந்த அறத்தாளமகாராஜனானவர் எங்ஙனமோஓடிப்போய்ப் பதுங்கிக்கொண்டிருக்கின்றதாகவும், அன்னவனைப் பிடித்துக் கொடுத்தால் ஞானபுரியென்னும் பட்டணத்திற் பாதி பட்டணம் பகுந்துக் கொடுப்பதாக இப்போது அரசாட்சிசெய்து வரப்பட்ட சத்தியசீலமகாராஜனானவர் பலருமறியப் பறைசாத்தி யிருக்கின்றபடியினாலேநாமிருவரும் எழுந்து காடு கானகங்களில் தேடிப் பார்ப்போமானால், கடவுளின் கருணையினால் அறத்தாள னகப்படுவானானால் அன்னவனைப்பிடித்துக்கொண்டு போய் சத்தியசீலமாகாராஜ னிடத்தில் ஒப்புவிப்போமாயின் நமது மிடிகளெல்லாம் பருசூரணமாகும்படியான திரவியங்களும் பாதிபட்டணமும் பகுந்துக் கொடுப்பான் எழுந்திரும் சுவாமி போய்த் தேடிப்பார்க்கலாமென்று ஆண்டிக் கிழவியானவள் ஆண்டிக்கிழவனை யழைக்கும்போது கிழவனானவன் தேவியாகிய கிழவியை நோக்கிக் கூறுகின்றான்.

அடீ கேளடி கிழப்பிணமாகியசண்டாளியே! கேளும் அந்த அறத்தாளமகாராஜாவானவர் மென்மேலும் தருமசிந்தையுடையவர். அந்த மகானுபாவரைப் பிடித்துக் கொடுப்போமானால் ஏழுநரகத்திற்குக் கீழுநரகமாகிய ரௌரவாதிநரகத்தில் வீழ்ந்து கற்பகோடானுகோடிகாலம் வரையிலும் கோசார புழுவைப் போல உருண்டு பிரண்டு மருண்டு கிடக்கும்படியான ஆக்கினை வந்தணுகும். இப்போது அந்த அறத்தாளமகாராஜனைக் கண்டு நமக்கு வேண்டும் பொருளைக் கேட்போமானால், அந்தட்சணமே கொடுக்கத் தகுந்த கருணாகரனைப் பிடித்துக்கொடுக்கலாகாதடி, விவேகமற்ற வீணியேயென்று கிழவனுங் கிழவியும் வழக்குரைகள்பேசி வார்த்தையாடிக் கொண்டிருக்கும்போது,

இவர்களிருவர்களும் குடிசைக்குள்ளாகஒருவர்க்கொருவர் உரத்த சத்த வோசையாகப் பேசிக் கொண்டிருக்கின்றதை அந்த ஆலாவிருட்சத்தின் நிழலில் சயனித்துத் துயில் வாராமல

ல்லாங் களைந்துவைத்து விட்டு பரதேசியைப்போல இரண்டுகலை களை யுடுத்திக்கொண்டு சுரங்கத்தின் மார்க்கமாக இறங்கிச்சென்று விட்டனர்.

தூதாகச்சென்ற தூதுவனைவன் அறத்தாளனுரைத்த சேதியையும் சுரங்கத்தின் மார்க்கமாகச் சென்று விட்டதையும் சத்தியசில மகாராஜனுக்கு ஆதியோடந்தமாக ஒதியநின்பின்பு அரசனைவன் தண்டு தளங்களையெச்சரித்துப் படைகளைத் தூண்டி அறத்தாளனின் அரண்மனையை நான்கு புறத்திலும் சூழ்ந்து வளைத்துக்கொண்டு திடீரென்று கொலுமண்டபத்திற்குள்ளாகப் புகுந்து பார்க்கும்போது, இளவரசோனுகிய அறத்தாளன் இல்லாததைக் கண்டு களிப்படைந்து அறத்தாளனின் கொடியை யிறக்கிவிட்டுத்தனது சித்திர புரத்தின்கொடியை நாட்டி, அத்தேயத்தி லிருக்கப்பட்ட மந்திரி பிரதானி முதலாகிய குடிப்படைகளை யெல்லாம் தனது கைவசமாக்கிக் கொண்டு சத்தியசீல மகாராஜாவானவர் ஞானபுரியை யாண்டுக்கொண்டு வருகின்ற நாளையில் மந்திரிமார்களையும் காலாட்களையும் படைவீரர்களையுந் தூதுவர்களையும் நோக்கிக் கூறுகின்றார்.

கேளுங்களப்பா அன்பர்களே அறத்தாள மகாராஜனைவன் உயிருடனே ஓடிவிட்டபடியினலே, அன்னவன் இன்னும் எங்கையாகிலும் பதுங்கிக் கொண்டிருந்து தருமம் புரிகுவானுதலால் அவனை யாராகிலும் உயிருடன் பிடித்துக்கொண்டு வருவீர்களானல், இந்த ஞானபுரியென்னும் பட்டணத்திற் பாதிபட்டணம் பகுந்து கொடுக்கின்றேனென்றுஉலகிலுள்ளோர்கள் பலரும் அறியும் பொருட்டாகப் பறையறைவித்து விட்டு சத்திய சீலமகாராஜனைவன் கொலுவிலமர்ந்து தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தனன்.

இங்ஙனமிருக்க சுரங்கத்தின் மார்க்கமாகச்சென்ற தருமசிந்தையுடையோனுகிய அறத்தாளமகாராஜனைவர் மனிதர் சஞ்சாரமில்லாத வனத்திற்குச்சென்று,காய்கனிகளையுண்டு ஒரு வருடமாகக் காலங்கழித்துக்கொண்டு வருகின்றநாளையில், அந்தக் கானகத்தில் ஒரு ஆலவிருட்சமொன்றுண்டு. அந்த விருட்சத்தடியில் ஓர்குடிசையமைத்து அந்த குடிசைக்குள்ளாக ஓராண்டிக்கிழவனும் ஆண்டிச்சியும் நெடுநாளாக வாழ்ந்துகொண்டு வருகின்றார்கள். அவர்களிருவர்களும் வயதுமுதிர்ந்த விருத்

தாப்பியர்களாகையினாலே எங்கேனுஞ் சென்று ஜீவிப்பதற்குத் தள்ளாமையால் மூன்று நாளாக உணவில்லாமல் கிளைத்திருப்பதினால் கிழவியாகிய ஆண்டிச்சியானவள் புருடனாகிய ஆண்டியை நோக்கிக் கூறுகின்றாள்.

கேளும் சுவாமி பிராணநாயகா அதோ தென்படுகின்ற ஞானபுரியென்னும் பட்டணத்தை இதற்கு முன்னம் அரசாண்டுக்கொண்டிருந்த அறத்தாளமகாராஜனானவர் எங்ஙனமோஓடிப்போய்ப் பதுங்கிக்கொண்டிருக்கின்றதாகவும், அன்னவனைப் பிடித்துக் கொடுத்தால் ஞானபுரியென்னும் பட்டணத்திற் பாதி பட்டணம் பகுந்துக் கொடுப்பதாக இப்போது அரசாட்சிசெய்து வரப்பட்ட சத்தியசீலமகாராஜனானவர் பலருமறியப் பறை சாத்தி யிருக்கின்றபடியினாலேநாமிருவரும் எழுந்து காடு கானகங்களில் தேடிப் பார்ப்போமானால், கடவுளின் கருணையினால் அறத்தாள னகப்படுவானானால் அன்னவனைப்பிடித்துக்கொண்டு போய் சத்தியசீலமாகாராஜனிடத்தில் ஒப்புவிப்போமாயின் நமது மிடிகளெல்லாம் படுசூரணமாகும்படியான திரவியங்களும் பாதிபட்டணமும் பகுந்துக் கொடுப்பான் எழுந்திரும் சுவாமி போய்த் தேடிப்பார்க்கலாமென்று ஆண்டிக் கிழவியானவள் ஆண்டிக்கிழவனை யழைக்கும்போது கிழவனானவன் தேவியாகிய கிழவியை நோக்கிக் கூறுகின்றான்.

அடீ கேளடி கிழப்பிணமாகியசண்டாளியே! கேளும் அந்த அறத்தாளமகாராஜாவானவர் மென்மேலும் தருமசிந்தையுடையவர். அந்த மகானுபாவரைப் பிடித்துக்கொடுப்போமானால் ஏழாநரகத்திற்குக் கீழாநரகமாகிய ரௌரவாதிநரகத்தில் வீழ்ந்து கற்பகோடானுகோடிகாலம் வரையிலும் கோசார புழுவைப்போல உருண்டு பிரண்டு மருண்டு கிடக்கும்படியான ஆக்கினை வந்தணுகும் இப்போது அந்த அறத்தாளமகாராஜனைக் கண்டு நமக்கு வேண்டும் பொருளைக் கேட்போமானால், அந்தட்சணமே கொடுக்கத் தகுந்த கருணாகரனைப் பிடித்துக்கொடுக்கலாகாதடி, விம்வகமற்ற வீணியேயென்று கிழவனுங் கிழவியும் வழக்குரைகள்பேசி வார்த்தையாடிக் கொண்டிருக்கும்போது,

இவர்களிருவர்களும் குடிசைக்குள்ளாக ஒருவர்க்கொருவர் உரத்த சத்த வோசையாகப் பேசிக் கொண்டிருக்கின்றதை அந்த ஆலாவிருட்சத்தின் நிழலில் சயனித்துத் துயில் வாராமல

விழித்துக்கொண்டிருந்த தருமகுண கருணாகரனான அறத்தாள மகாராஜாவானவர் இரண்டு செவிகளிலும் நாராசங் காய்ச்சி யூத்தியதைப்போலக்கேட்டுக்கொண்டிருந்துமனதுபதறித்திடீரென்றெழுந்து நடையாய் நடந்து குடிசைக்குள்ளாகப் புகுந்து வந்து ஆண்டிக்கிழவனையும் ஆண்டிக்கிழவியையும் ஏறஇறங்கச் சற்று நேரம் உற்றுப் பார்வையிட்டு ஓ ஹோ! இவர்கள்தான் மூன்று நாளாக வுணவில்லாமல் இருப்பதாகவும், நம்மைப் பிடித்துக் கொடுக்கவேண்டுமென்று பேசிக்கொண்டவர்கள், இவர்களேயன்றி மற்றெவர்களு மில்லை யென்று ஐயையோ இந்த விருத்தையர்கள் மூன்று நாளாக வுணவில்லை யென்று கூறவும், இந்தப் பாவியின் செவியாரக்கேட்கச்செய்தனையே மனமே உனக்கு என்னமார்க்கமாகிய மதிகளை யெடுத்து எத்தனைதரந்தான் புகட்டுவேன். நல்லது இவர்களை விடப்போகாது. இந்த இரண்டு விருத்தையர்களை நாமே வலுவிற்பிடித்திழுத்துக்கொண்டுபோவோமானால், சத்தியசீல மகாராஜாவானவன் கண்டு நம்மைக் கொன்றுவிட்டு இவர்களுக்கு அசனம் படைப்பான். அதனாலே இவர்களின் அன்னக் களையும் நீங்கும். நமது தருமமும் நிலைநிற்கும். இதுதான் தகுந்த யோசனையென்று மதித்து இரண்டுகரத்தாலும் இரண்டு விருத்தையர்களின் மடியைப் பிடித்திழுத்து, நான்தான் அறத்தாளன் வாருங்கள் என்னைக் கொண்டுபோய் சத்தியசீலனிடத்தில் விட்டுவிட்டு நீங்களிருவர்களும் அசனம் புசியுங்கள் வாருங்களென்று இழுத்தழைக்கும்போது ஆண்டிக்கிழவனானவன் பரதேசியாக விருக்கின்ற வேந்தனைக்கண்டு வந்தனஞ்செய்து கேளுமையா சுவாமி அறத்தாள மகாராஜனே கேளும் இந்தக்கிழவியானவள் விவேகமற்ற வீணியாகையினாலே ஏதோ பித்தம்பிடித்து உளறி விட்டாள். அதனை நீவிர் பெரும்பான்மையாகப் பாராட்டவேண்டாமையனே எங்களை விட்டுவிடும் சுவாமி யென்று ஆண்டிக்கிழவனானவன் ஏங்கும் பாவனையாக வுரைத்த மொழியை வேந்தன்கேட்டு விளம்புகின்றான்.

கேளுமையா சுவாமி பெரியவரே! நீங்களிருவர்களும் மூன்று நாளாக வுணவில்லாமலிருக்கின்றதாகக் கேள்விப்பட்டதின் பின்பு யான் உயிருடனிருக்க மனமில்லாதவனாகையினாலே, பிறந்தபொழுதே யிறப்புண்டென்ற திட்டப்படி வந்தவனானதால், நான் இறந்துவிட்டால் உங்களுக்கும் மற்றையோ

ருக்கும் நஷ்டங்களொன்று மில்லே. ஆனதைப்பற்றி நீங்களிருவரும் உணவருந்தினல் அதுவொன்று தானே எனக்குப்போதுமானது வாருங்கள். உங்களை விடமாட்டேன் வாருங்களென்று இருவரையும் மடியிற் கரத்தைப் போட்டிழுத்துக் கொண்டு, காடு கானகமெல்லாங் கடந்து நடந்து ஞானபுரியென்னுந் தனது பட்டணத்திற் குள்ளாகப் புகுந்து மூவர்களும் மடிபிடித்திழுத்து வழக்குரைகள் பேசி வாதாடிக் கொண்டிருக்கின்றதைக் குடிஜனங்க ளெல்லோரும் பார்த்து இதோ வந்துவிட்டாரே அறத்தாள மகாராஜ னென்றும், இதோ நமது அரசன் வந்துவிட்டார் வந்துவிட்டாரென்று குடிகளெல்லோரும் பெரும்போராகப் பிரலாபித்து உரைத்துக்கொண்டிருக்கின்ற சேதியைச் சத்தியசில மகாராஜாவானவன் கேள்விப்பட்டு சிம்மாதனத்தைவிட்டுக் கர்ச்சனைசெய்து திடீரென் றெழுந்து உரையிலிருந்த கத்தியை யுருவி கரத்திற் பிடித்துக்கொண்டு முதல்மந்திரியைநோக்கிச் சத்தியசீல மகாராஜாவானவர் கூறுகின்றார்.

கேளுமையா பெரியவரே உங்களரசனுகிய அறத்தாளன் மூன்றுவது வீதியில் வந்திருப்பதாகப் பெரும்போராய் விளங்குகின்றமையினுல், அவனின் முடியைத் துணிக்க வேண்டியதினுலே யென்னுடன் பிரயாணப்படுமென்று மற்றுமுள்ள வீரர்களேயும் அழைத்துக்கொண்டு ஓட்டமும் நடையுமாக ஓடோடியும் வந்து, மடிபிடித் திழுத்துக்கொண்டிருக்கின்ற மூவர்களேயுஞ் சத்தியசீலன்கண்டு இயாதுகாரணம் ஏன் மடிபிடித் திழுத்துக்கொண்டிருக்கின்றீர்கள் கூறுங்களென்று கோபக்குறியோடுங்கூடிச் சத்தியசீலன் கேட்கும்போது அறளத்தாள மகாராஜன் கூறுகின்றார்.

கேளுமையா சத்தியசீல மகாராஜனே! இவர்களிருவர்களும் அசனம் புசித்து மூன்றுநாட்களாகின்றனவாம். இவர்களுக்கு முன்னம் அசனம் படைத்துவிட்டு அதன்பின்பு என்னே சிரச்சேதம் செயதுவிடுமையா வென்று அறத்தாள மகாராஜனுனவர் கூறின மொழியைக்கேட்ட சத்தியசீலனுனவன் ஓ! ஹோ இவன் யாரோ தெரியவில்லேயே யென்று அடே நீயாரடா? இந்தக்கிழவனும் கிழவியும் யாரடா? கூறடாவென்று கர்ச்சனே செய்து கேட்க கேளுமையா தவச்சீலனே! இவர்கள் அதோ தென்படுகின்ற வனத்தில் இருக்கின்ற ஆலாவிருட்சத்தடியிலிருக்குங்

குடிசையில் வாசஞ்செய்யப்பட்டவர்கள். நான் அந்த விருட்சத்
தின் நீழலிற்படுத்து விழித்துக்கொண்டிருக்கும்போது நானிரு
ப்பதை யறியாத இந்தக்கிழவனும் இந்தக்கிழவியும் பேசிக்கொ
ண்டவார்த்தையாவது என்னவென்றால்,

கேளும்சுவாமி பிராணநாயகா! நமக்கு மூன்று நாளாக உண
வு சிக்கவில்லையே யாகையினாலே இந்த ஞானபுரி பட்டணத்தை
இதற்கு முன்னம் அரசுபுரிந்து கொண்டிருந்த அறத்தாளமகா
ராஜாவானவர், ஞானபுரிப் பட்டணத்தை சத்தியசீல மகாராஜ
னுக்கு ஒப்பிவைத்துவிட்டு அவருக்கு அஞ்சுதலை கொண்டு
எங்ஙனமோ மறைந்திருக்கின்றார். நாமெழுந்து சென்று அந்த
அறத்தாளனைத்தேடிப் பிடித்துக்கொண்டுபோய்ச் சத்தியசீலம
காராஜனிடத்தில் விடுவோமானால்,மிதமின்றிப் பொன்பொருள்
கள் கொடுப்பார். அதனாலே நாம் ஜீவிக்கலாகுமென்று இந்தக்
கிழவியானவள் வழுத்தின மொழியைக் கிழவன்கேட்டு, அடியா
ரடி பித்தம்பிடித்துப் பேய்ப்பிணமேயென்று கிழவிக்கு நீதிகளை
யோதிக்கொண்டிருக்குஞ் சேதியை யான்கேட்டு ஜீவகாருண்ணி
ய மார்க்கத்தில் எனது மனதானது மெலிந்து, திடீரென்றெழு
ந்து ஓடோடியுஞ்சென்று குடிசைக்குள்ளாகப் புகுந்து இவர்க
ளிருவர்களையுங்கண்டு பரிதாபங்கொண்டு, நான்தான் அறத்தா
ளன் வாருங்கள். என்னைப் பிடித்துக்கொண்டுபோய்ச் சத்திய
சீல மகாராஜனிடத்தில் விடுத்து விட்டு, நீங்கள் அசனம் புசியு
ங்களென்று மடியைப் பிடித்திழுத்துக்கொண்டு உன்னிடத்திற்
கொண்டுவந்து விடுவதற்காக வந்தேனையனே. இவர்களுக்குமுன
ன்னம் அமுதளித்துவிட்டு என்னைவெட்டிவிடு மையனே அல்லது
என்னையாகிலும் முன்னதாகவெட்டி யெறிந்து விட்டு அதன
பின்பாகிலும் இந்த விருத்தையர்க ளிருவர்கட்கும் அசனம்
படைத்து ஆதரித்து ஆறுதலை புரியவேண்டு எனது நாமதேய
ந்தான் அறத்தாளன் நான்தான் மோனசீலமகாராஜனின் புதல்
வன் இந்தாரும் இதோ எனது கழுத்தை வெட்டு
மையனே யென்று அறத்தாளமகாராஜாவானவர் சிரசை யிற
ங்கிக் குனிந்து கொடுக்கும்போது, சத்தியசீல மகாராஜ
னானவன் கண்டு ஆஹா இதென்ன புதுமையாக விருக்கின
றது! தருமஞ் செய்வதற் றனதுகழுத்தைக் கூட வெட்டிக்
கொடுப்பார்களா? இந்த அறத்தாள வேந்தனானவன தனது

கழுத்தை வெட்டி யெறிந்துவிட்டு, இந்தக்கிழவர்கட்கு அசனம் படைத்து ஆதரியுமென்றுரைக்கின்றாரே ஆ ஹா! தருமஞ் செய்வதற்கும் அறத்தாளனென்னும் நாமதேயத்திற்கும், தருமம் புரிவதற்கும் இவரொருவருக்கே தகும் தகுமென்று ஆனந்தக் கடலில் மூழ்கினவனாகித் தனது கரத்திற் பிடித்துக்கொண்டிருந்தகத்தியைப் பூமியிற் சோரவிட்டுவிட்டுத் திடீரென்றுமண்மீது கவர்ந்து படுத்து, அறத்தாளமகாராஜனின் திருவடியிற் றனது முடியைச் சாய்த்துப் பணிந்தெழுந்திருந்து கேளுமையா அறத்தாள மகாராஜனே! அருணனும் இந்துவுந் தோன்றும்படியா தரணியின்கண் தருமம் புரிவதில் உமக்குமீறினவர்களொருவருமில்லை, யாதலால் அறம்புரிவதற்கு வுமக்கொருவருக்குத்தான் அடுக்குமேயன்றி மற்றைய வனையோரைப்போன்றவர்கட்கு அடுக்காத தொழிலாகையினாலே உமது தருமசிந்தையை யறியாத கருமியாகிய அடியே னியற்றிய அபசாரங்களை மன்னித்து மனது கூர்ந்து இவ்வடிமையை யாட்கொள்ளும் பொருட்டாக வுமது இராச்சியத்தை நீவிரே பெற்றுக்கொண்டு முன்போலவே அரசுபுரியும்படியாகக் கோருகின்றனன்.

வாருமையா அறத்தாள மகாராஜனே! யென்று கரத்தைப்பிடித்து அழைத்துக்கொண்டு அவருடன்கூட தனதுசேனா சைனியங்களையும் ஆண்டி ஆண்டிச்சியையும், அழைத்துக்கொண்டு ஞானபுரத்துக் கொலுமண்டபத்திற்கு வந்து சிம்மாதனத்தில் இளவரசோனாகிய அறத்தாள மகாராஜனைக் குந்தவைத்துத் தனது திருமுடியை இளவேந்தனது சிரசிற் சூட்டிவிட்டு அறத்தாளமன்னவனே! தருமத்தில் மீறினோனென்று பலரும் புகழ்ந்து கொண்டாடும்படியாகச் செய்துவிட்டுச் சத்தியசீல மகாராஜனானவன் தனதுசேனைகளையழைத்துக்கொண்டு இளமன்னவனிடத்திற் சிலவுபெற்றுக்கொண்டு கொலுக்கூடத்தைக் கடந்து தண்டுதளங்கள் புடைசூழ ஞானபுரியென்னும் பட்டணத்தைவிட்டுக், காடுகானகங்களெல்லாங் கடந்து சித்திரபுரத்தை நோக்கி வந்து தனது சிம்மாதனத்திலமர்ந்து அறத்தாளனின் தருமசிந்தையினளவுத்தொழிலைப்பற்றி வார்த்தையாடிப் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தனர்.

சித்திரபுரத்தரசனாகிய சத்தியசீல மகாராஜனானவர் ஞானபுரியைவிட்டுச் சென்றதின்பின்பு அறத்தாள மகாராஜனானவர்

தானுங் கொலுவிலமர்ந்து மந்திரிமார்களுடன் கலந்து தேசாதி காரியங்களைப் பேசிக்கொண்டு இரப்போர்க்கில்லை யென்னாமல் அறம்புரிந்து வீற்றிருக்கும் தருணத்தில் இவரது தருமகுணமானது இவ்விதமாகத்தானே விளங்கியிருக்கின்ற நாளையில், ஞானபுரியென்னும் பட்டணத்திற்குத் தென்மேற்கில் ஐந்நூறு காதத்திற்கு அப்புறத்தில் நீர்வளம் நிலவளம் பெருத்து, பயிர் வளர்ந்துளிர்த்து, கோவளம் அதிகரித்து குடிவளம் பெருத்து உத்தமதேவதையானது நான்குபாதத்தினாலும் நடந்தியாங்காநின்ற திருமகளுலாவுகின்ற பட்டார்புரியென்னும் பட்டணமானது, தானும் ஐம்பத்தைந்து தேயங்கட்குந் தாயாகாரமாகிய பட்டண மாகையினாலே அந்தப்பட்டணத்தின் குடிகளிடம் ஆறிலொருகடமை வாங்கி தன்னுயிரைப்போல மன்னுயிர் இயாவையும் பாதுகாத்து அரசுசெலுத்தாநின்ற கட்டழகனென்னுந் திருநாம முடைய சக்ரவர்த்தியானவர் திட்டவேணியென்னும் மாதரசியைத் திருமணமுடித்து வாழ்ந்துகொண்டு வருகின்ற நாளையில், புத்திரப்பேறில்லாமல் மெத்தவும் சித்தத்திற் சஞ்சலங்கொண்டு முப்பத்திரண்டறமும் புரிந்து நாடோறும் அதிதி, பரதேசிகட்கு அசனம் படைத்து அவர்களுண்டதின் பின்பு கட்டழகு மகாராஜனும் திட்டவேணியம்மாளும் உண்டெழுந்திருப்பது வழக்கமாகையினாலே இந்தவிதமாகத்தானே கட்டழகு மன்னனானவர் அறம்புரிந்து அரசுசெலுத்திக்கொண்டு வருகின்றநாளையில் இராஜபத்தினியாகிய திட்டவேணியம்மாளானவள் கடவுளின் கருணைக்கிருபாநோக்கத்தினால் வயற்றில் கருதரித்து கருப்பவதியாகிச் சூல்கொண்டு பத்துதிங்களுஞ்சென்று பெண்மகவு ஒன்று பெற்றெடுத்தனள்.

அந்தப் பெண்குழந்தையானது பிரளுங்காலம் உருளுங் காலத்தில் பதினோராம்நாளில் ஊஞ்சலில் வளர்த்தி அக்குழந்தைக்கு கற்பகவல்லியம்மாளென்று நாமகரணமிட்டு வளர்த்துக்கொண்டு வருகும்போது தவழுங்காலமுஞ்சென்று நடக்குங் காலந்தோன்றி ஐந்து வயதாகினவுடனே கல்விசாலை உபாத்தியாயரை வரவழைத்து கற்பகவல்லியம்மாளுக்கு பற்பல கல்விகளையுங் கற்றுக்கொடுக்கும்படியாகச்செய்து இலக்கிய இலக்கணங்களும் வேதசுருதிகளையு மோதித்தெளிந்து கற்பகவல்லியம்மாள் மனுநீதிதவறாமல் நடந்தியங்கிக் கொண்டிருக்கும்

போது. அந்தப்பெண்மணியானவள் தனது தாய்தந்தையர்களை நோக்கி கேளுங்கள் அருந்தவஞ்செய்து அடியாளையீன்ற அன்னைபிதாக்களே கேளும் அடியாள்படித்த படிப்பு இம்மட்டில் போது மாகையினாலே, எனது மனதில் ஓர் எண்ணமிருக்கின்றது அந்த எண்ணத்தை யுங்களிடத்திற் கூறாமல் மற்ற இயாவரிடத்தில் சொல்லப்போகின்றனன் ஆனதால் அதனைவெளிப் படையாக வுரைப்பதற்கு நீங்களிருவர்களுங் கருணைகூர்ந்து மனுவுகொடுப்பீர்களானால் இந்தட்சணமே உரைசெய்கின்றேனென்று உத்தமப்பெண்மணியாகிய கற்பகவல்லியம்மாள் வினவும்போது தந்தையாகிய கட்டழகு மகாராஜன் கழறுகின்றார்.

கேளாயம்மணி கற்பகவல்லித்தாயே உனதுமனதில் எண்ணியிருக்கின்ற எண்ணமானது என்ன வெண்ணமோ அவ்வெண்ணத்தை வெளியிடுந்தாயே யென்று பிதாவாகிய கட்டழகு மகாராஜனவர் உரைத்தமொழியைக் கேட்ட கற்பகவல்லியம்மாள் பிதாவைநோக்கி, தேவரீர் அருந்தவஞ்செய்து அடியாளையீன்றெடுத்த அண்ணலே கேளும்! நமது பட்டணத்திலிருக்கின்ற இலுப்பைவனத்தை யழித்துவிட்டு ஓர்காத அகலநீளத்திலும் இரண்டு பனைமரவுயரத்திலும் ஒருமாளிகையொன்று கட்டிக் கொண்டு அந்தமாளிகைக்கு தொண்ணூற்றாறு வாயில்களமைத்து அந்தவாயில்களுக்குத் தகுந்த காவலாளிகளை நியமித்து அந்தக் கோட்டைக்குள்ளாக சகலதிரவியங்களும் அமைத்து அதற்குள்ளாக யானமர்ந்திருந்து இயாவர் வந்து என்னகேட்ட போதிலும் இல்லையென்னாமல் முப்பத்திரண்டு தருமமும் புரியும்படியாகவும் அந்தத் தருமக்கோட்டையைச் சுற்றி நான்கு புறத்திலும் எனது நாமதேயத்தை செப்புப்பட்டயத்திலெழுதி கட்டிவைக்கும் பொருட்டாகக் கருணைசெய்ய வேண்டுமென்று பரமனின்திருவருளினால் அறத்தின் புகழ் பெருகுவதற்காகத் தரணியில் பிறந்த கருணாகரகுணசிசயனை புத்திரிச் செல்வமாகிய கற்பகவல்லியம்மாள் செப்பின சேதியைக்கேட்ட தந்தையாகிய கட்டழகு மகாராஜனவர் புத்திரியை நோக்கி கேளாயம்மணி விவேகத்திற் சிறந்த கற்பகவல்லித்தாயே கேளும் உன்மனதின் எண்ணத்தைப்போலவே நீகோரியவாறே இலுப்பைவனத்தை யழித்து இந்தட்சணமே அரண்மனை கட்டும்படியாகச் செய்கின்றேன் நீ மாளிகைக்குள்ளாகச் செல்

லுந்தாயே யென்று மகளுக்கு விடைகொடுத்து மனைக்குள்ளாக அனுப்பிவிட்டுத் தனது முதன் மந்திரியை நோக்கிக் கட்டழக னென்னும் வேந்தனனவர் விளம்புகின்றார்.

கேளாயப்பா அமைச்சர்கோமானே! நீ எழுந்துசென்று நமதுபொக்கிஷச் சாலையைத்திறந்து மிதமின்றி பொன்பொருள்களை யெடுத்துக்கொண்டு மனைகோலுந் தொழிலாளர்களை வரவழைத்து இலுப்பைத்தோட்டத்திற்குச்சென்று அவ்வனத்தை யழித்து ஒருகாத அகலநீளமும் இரண்டு பனைமரவுயரமும் கோட்டையொன்று கட்டிமுடிவுசெய்துவிட்டு அந்தக்கோட்டைக்குள்ளாக முப்பத்திரண்டு தருமத்திற்குத் தக்கதாகிய பொருள்களை யமைத்து இயாவர் வந்து என்னகேட்டபோதிலும் இல்லையென்னமல் வழங்கும் பொருட்டாக ஆட்களுக்கு ஆக்ஞாபித்துவிட்டு அந்தக்கோட்டைக்கு அதிகாரியாகவும் அறம்புரிகுவதற்கு முதலாளியாகவும் எனது குமாரத்தியின் திருநாமத்தை செப்புப்பட்டயத்தில் எழுதித் தருமகோட்டை நான்கு புறத்திலும் வெளிப்படையாகக் கட்டிவிட்டு காவலர்கட்கெல்லாங் கட்டுதிட்டஞ் செய்துவாரும் பிள்ளாயென்று அரசனனவர் உரைத்தருளினர்.

கட்டழகு மகாராஜானனவர் கூறிய கட்டு திட்டத்தைக் கேட்ட முதன் மந்திரியானவர் திடீரென்றெழுந்து கொலுக்கூடத்தைக் கடந்து, காலாட்களையழைத்துக்கொண்டு கஜானா சாலைக்குச்சென்று தனக்கு வேண்டுமளவுந் திரவியங்களெடுத்துக்கொண்டு ஆட்களை தூக்கிக் கொள்ளச் செய்து நடையாய் நடந்து இலுப்பை வனத்திற்குப் போய் அங்ஙனம் விளைந்திருக்கின்ற இலுப்பை விருக்ஷங்களை யெல்லாம் வேரறக்களைந் தெறிந்துவிடச்செய்து ஓர்காத அகல நீளத்திற்கு அரண்மனைக் கடைக்கா லெடுப்பித்து இரண்டு பனைமரவுயரத்தளவாக தொண்ணூற்றாறு வாயில்கள் வைத்து, மாளிகையைக் கட்டி முடிவு செய்து அந்த மாளிகைக் குள்ளாக தருமம் செய்வதற்கு கற்பகோடிகாலம் வரைக்கும் குறையாதிருக்கும்படியான பொருள்களை யமைத்து வைத்து விட்டு, தொண்ணூற்றாறுவாயில்களுக்கும் காவலரை நியமித்து அதிதி பரதேசி முதலாகிய இயாவர் வந்தென்னபொருள் விரும்பிக்கேட்ட போதிலும் இல்லை யென்னமல் கொடுத்தனுப்புங்களப்பா வென்று கட்டுதிட்டஞ்செ

ய்துவிட்டு, தருமத்தில் மீறின கற்பக வல்லியம்மாளின் தரும அரண் மனையென்று நான்கு செப்புப்பட்டயத்திலெழுதி அந்தக் கோட்டையின் நான்கு புறத்திலும் வெளிப்படையாகக் கட்டிச் சகலமுஞ் சித்தஞ் செய்துவிட்டு மாளிகை கட்டின வேலையாட்களுக் கெல்லாங்கொடுக்கும் படியான கைப்பொருளைக் கொடுத்து, அன்னவர்களை யெல்லாம் போகும்படியாக விடைகொடுத்தனுப்பிவிட்டு முதன் மந்திரியானவர் வந்து அரசனைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்து தருமக்கோட்டை கட்டி சகலமுஞ் சித்தப்படுத்தி வைத்து விட்டு வந்தனன் சுவாமியென்று அமைச்சர் தலைவனானவன் அறைந்த வுரையைக்கேட்ட அரசனானவர் கூறுகின்றனர்.

கேளுமையா அமைச்சர் முன்னோனே எனது குமாரத்தியை அழைத்துக்கொண்டு போய் தருமக்கோட்டையில் விட்டுவிட்டு வருகவேண்டியதினாலே நாமெல்லோரும் ஆங்குசெல்ல வேண்டியதினால், தண்டு தளங்களைச் சித்தப்படுத்தும் பிள்ளாய் நானும் மாளிகைக்குள்ளாகச் சென்று எனது தேவியையும் மகளையும் பிரயாணப்படும்படியாகச் செய்து நானும் பிரயாணப்பட்டு வருகின்றேனென்றுரைத்து விட்டு அரசனானவர் சிம்மாதனத்தை விட்டிறங்கி அரண்மனைக் குள்ளாகப்போய்ப் புகுந்து மகளை யழைத்து அம்மாகற்பகவல்லியே கேளும்உனதுமனதின் எண்ணத்தைப்போலவே இலுப்பை வனத்தை யழித்துத் தருமக்கோட்டைகட்டி முடிவு செய்தாகி விட்டது வாருமம்மா வந்துபாருந்தாயே யென்று வுரைத்துவிட்டு, தனதுதேவியாகிய திட்டவேணியை யழைத்து கேளாய்பெண்மணி திட்டவேணி நமது குழந்தையானவள் தருமக்கோட்டைக்குச் சென்று அறம்புரியுந்தொழிலை நிறைவேற்றப் போகின்றனளாம். ஆகையினாலே குழந்தையை யழைத்துக்கொண்டுபோய் அங்ஙனம் அந்த கோட்டைக்குள்ளாக விட்டு விட்டு வருகவேண்டியதினாலே நீயும் குழந்தை கற்பகவல்லியம்மாளும் சிவிகையிலமர்ந்து சேடிப்பெண்கள் புடைசூழும்படியாக வாருமென்று கட்டழகு மகாராஜன்கூறிய வாக்கியத்தைக்கேட்டகற்பகவல்லியம்மாளும் தாயாகிய திட்டவேணியென்னு மிராஜபத்தினியும் ஆடையாபரண அலங்காரமாக வுடுத்திக்கொண்டு பாலங்கிகளைமேவி பல லக்கைக்கொண்டுவரச்செய்து தாயுஞ் சேயுமதிலமர்ந்து பிரயாணப்பட்டு வருகின்றதை யறிந்தமன்னனானவர் தானும்

நவரத்னமிழிதம் பொருந்திய ஆடையாபரணங்களை யணிந்துக் கொண்டு புரவிச்சாலைத் தலைவனையேவி தனது புரவியை யலங்கரித்துக் கொண்டுவரச்செய்து மந்திரி பிரதானிகள் படைசூழ தண்டிக்கு நடுவில் கட்டழகு மகாராஜன் வருகவும் சுற்றில் பாங்கிகள் புடைசூழ அரசியுங் கற்பகவல்லியும் பொற் புறஞ்சிவிகையிலமர்ந்து வருகவும் வீராதிவீரர்களெல்லாம் எச் சரிக்கைசெய்துக்கொண்டு நடந்துவந்து தருமகோட்டைக்குள் ளாகப் புகுந்து அரசனானவர் புரவியை விட்டிறங்கி தனது தே வியையும் குமாரத்தியையும் சிவிகையை விட்டிறக்கி பாதசாரி களாக ஓர்காத அகல நீளமுள்ள அரண்மனைமுழுவதுஞ் சுற் றிப்பார்வையிட்டு மகளை நோக்கிப்பார்த்து அம்மா கற்பகவல் லித்தாயே! இதோ இந்த அரண்மனையையும் இதற்குள்ளாக இருக்கின்ற திரவியத்தையும் பாருந்தாயே. இஃதுனக்குத் தரு மம்புரிவதற்குப் போதுமானதோ இன்னு மேதேனும் வேண்டு மோ விளம்புந்தாயே யென்று வேந்தனானவர் வினவும் போது கற்பக வல்லியம்மாள் கூறுகின்றாள்.

கேளுமையா தந்தையே! இதிலிருக்கின்ற பொன்பொருள் கள் ஏழேழுதலை முறைக்கும் தருமம் செய்வதற்கு ஏதுவாகஇரு க்கின்றபடியினாலே இன்னும் யாதொரு பொருளும் வேண்டிய தில்லை அதிலும் இன்னமோர் சேதியிருக்கின்றது அதாவதென் னவென்றால், அடியாளுக்குத் துணையாக எனது தாயாரை இங் ஙனமொரு மாதமும் தங்களரண்மனையில் ஓர் மாதமுமிருக்கும் படிக் கட்டளையிட்டு, இப்போது இங்ஙனம் விட்டுவிட்டுப்போ வீரானால் ஓர் திங்கள்சென்றதின்பின்பு அம்மாளை அங்ஙனமனு ப்பிவைத்து விடுகின்றேன் அதிலும்வாரத்திற்கொருமுறையாகத் தாங்கள்மாத்திரம் இங்ஙனம் வந்து என்னைக்கண்டு விசாரணை செய்துகொண்டு போகவேண்டியதிதுதான் முடிவாகிய செ ய்தியாகையினாலே இனி வேறொரு வார்த்தையுமில்லை தந்தையே யென்று மகள்மொழிந்த புகழ்மொழியைக் கேட்ட வேந்தனா வர் மனமேலுங் களிப்படைந்தவராகி தருமக்கோட்டைக்கு அமைந்துள்ள காவலாளர்களை நோக்கி கேளுங்களப்பா காவலதி காரிகளே! இந்தக் கோட்டைக்குள்ளாக யாதொரு தீங்கும் நேரி டாமல் வருபவர்கட்கெல்லாம தருமம் புரிந்துகொண்டு எனது குமாரத்தியாகிய கற்பகவல்லி யம்மாள் சிறுகுழந்தை யாகையி

னுலே அந்தக்குழந்தையை பதனமாகப்பாதுகார்த்துக்கொண்டு வருகவேண்டியது இதோ எனது தேவியும் இங்ஙனந்தான் இருக்கின்றனள் நானும் வாரத்திற் கொருமுறை இங்ஙனம் வந்து போவேனுகையினுலே பதனமாகக் காவல் புரியுங்களென்று தொண்ணூற்றாறு வாயிலிலும் கார்த்துக் கொண்டிருக்கின்ற காவலாளர்கட்கு கட்டுதிட்டஞ் செய்துவிட்டு மனைவியாரிடத்திலும் மகளிடத்திலும் கட்டழகனுனவர் விடைபெற்றுக்கொண்டு தனது மந்திரிப்பிரதானி முதலாகிய தளங்களை யழைத்துக் கொண்டு தருமக்கோட்டையைக் கடந்து வேந்தனுனவர் கொலு மண்டபத்திற்கு வந்து சிம்மாதனத்திலமர்ந்து தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தார்.

தருமக்கோட்டைக் குள்ளாகக் கற்பகவல்லியம்மாள் அமர்ந்து காவலர்களையும் சேடிப்பெண்களையும் அருகிலழைத்து கேளுங்களப்பா காவலர்களே அம்மாதோழிமார்களே நீங்களுங் கேளுங்கள் யாராகிலும் அதிதி பரதேசி யோகி ஜங்கமர்கள் யாசகத்திற்கு வருவார்களே யாமாகுல் அன்னவர்கட்குத் தொண்ணூறு வாயில்கள் வரையிலும் கேட்கும் படியான பொருள்களெல்லாங்கொடுத்து உபசரித்து வரப்பட்டவர்களின் பணியாளர்களைப்போல நீங்களெல்லோர்களும் பணிபுரிந்து யாசகத்திற்கு வருபவர்களின் நாமதேயத்தை யறிந்து வந்து எனக்குரை செய்ய வேண்டுமென்று கட்டுதிட்டஞ்செய்துவிட்டு தரும அரண்மனைக்குள்ளாகக் கற்பகவல்லியம்மாள் தாயுடன் வீற்றிருந்தனள்.

கேளீரன்பர்களே பட்டாம் புரியென்னும் பட்டணத்தைப் பரிபாலனஞ் செய்யாநின்ற கட்டழகு மகாராஜனின் குமாரத்தியாகிய கற்பக வல்லியம்மாள் புரிந்து வருகின்ற தருமத்தின் சேதியானது, ஐம்பத்தைந்து தேயத்தரசர்கட்கும் ஆங்காங்குள்ள அதிதிபரதேசிகட்கும் கரதலாமலகம்போல நனகுவிளங்கி பிரதாபமாக வீற்றிருந்த போதிலும் இந்த கற்பகவல்லி யம்மாள் புரியுந் தருமச்செய்கையானது ஞானபுரியென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாளமகாராஜனுக்குத் தெரியாதாகையினுலே அந்த அறத்தாள மகாராஜனும தனது தேயத்தில அறம்புரிந்து கொண்டிருந்தனர்.

இங்ஙனமிருக்க கற்பகவல்லி யம்மாளுக்கு ஐந்து பிராயமு நற்கொண்டு ஆறு எழு எட்டுஞ்சென்று ஒன்பதாவது வயது பிறந்தவுடனே கற்பகவல்லி யம்மாள் புட்பவதியாயினள். தருமத்தில் மிகுந்த கற்பகவல்லியானவள் பருவகாலமடைந்த சேதியைத் தாயாகிய திட்டவேணியானவள் தோழிகள் மூலியமாக அறிக்கையிட்டு பட்டாமபுரிக்குச் சென்று எமது அரசருக்குத் தெரிவித்துவிட்டு வாருங்களம்மா வென்று அரசியானவளுரைத்தமொழியைக்கேட்ட சேடிப்பெண்கள் ஓடோடியுஞ் சென்று கொலுமண்டபத்திற்கு வந்து வேந்தனைக்கண்டு வணங்கி கேளுஞ்சுவாமி இராஜபரமேஸ்பரா தங்கள் குமாரத்தியாகிய கற்பகவல்லி யம்மாள் இன்றுகாலையில் ஐந்து நாழிகைக்குப் புட்பவதியானதாக இராஜபத்தினியாகிய எங்கள் நாச்சியார் உமக்குத் தெரிவித்து விட்டு வருகும்படியாகக் கட்டளையிட்டனுப்பினார். ஆகையினாலே பாங்கிமாரோடிவந்து தெரிவித்தனம் போய்வருகின்றோம் சுவாமி யென்று பாங்கிப்பெண்கள் பகர்ந்து விட்டுக் கொலுமண்டபத்தைக் கடந்து ஓட்டமும் நடையுமாக ஓடிவந்து தருமக்கோட்டைக்குள்ளாகப் புகுந்து தொன்னூற்றாறுவது மாளிகையிலிருக்கின்ற அரசியைக்கண்டு வணங்கி வந்தனஞ் செய்து இராஜசமூகத்திற்குச் சென்றுவந்த சேதியை யோதிவிட்டு பாங்கிப் பெண்கள் தங்கள் காரியங்களிற் பிரவேசித்திருந்தனர். தனது குமாரத்தி புட்பவதியாகின சேதியைக் காதினாற்கேட்ட வேந்தனானவர் முதல் மந்திரியைநோக்கிக் கேளாயப்பா அமைச்சர்கோமானே நமது புத்திரியானவள் இன்றையதினம் காலையில் ஐந்துநாழிகைக்குப் பருவகாலமடைந்ததாகப் பாங்கிப்பெண்ணானவள் வந்து பகர்ந்து சென்றாளல்லவா ஆகையினாலே நமது குழந்தைக்கு ஜாதகங் கணிக்க வேண்டியதைப்பற்றி திரிகாலமு முணர்ந்த சோதிடரை வரவழையுமையாவென்று அரசனாக்ஞாபித்தவுடனே. அமைச்சர் தலைவனாகிய முதல் மந்திரியானவர் தலைக்காவலனையேவி அடேயப்பா காவலனே நீசென்று நமது தேயத்திலிருக்கின்ற வேதியர் வீதியிலிருக்கப்பட்ட முக்காலக்கியானியாகிய சொக்கலிங்க சாஸ்திரியாரை யானழைத்துக்கொண்டு வருகச்சொன்னதாகத் தெரிவித்து அன்னவரைக் கையுடன் அழைத்துக்கொண்டு வாருமப்பிள்ளாயென்று அமைச்சனானவர் ஆக்ஞாபித்தருளினார்.

முதல் மந்திரிமொழிந்த சேதியைக் கேட்ட காவலனானவன் கொலுமண்டபத்தைக் கடந்து ஓடோடியுஞ் சென்றுவேதியரின் வீதிக்குவந்து சொக்கலிங்க சாஸ்திரியாரின் அரண்மனைக்குள்ளாகப் புகுந்து,முக்காலக்கியானியாகிய சொக்கலிங்க சாஸ்திரியைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்து கேளுமையா சாஸ்திரியாரே எமது மகாராஜனின் முதல்மந்திரியானவர் உம்மைக் கையுடன் அழைத்துக்கொண்டு வரும்படியாக அடியேனை யேவினார் ஆதலால் ஓடிவந்து அறிவித்தனன். சுருக்காக எழுந்து வாரும் சுவாமி யென்று காவலனானவன் கூவி யுரைத்த மொழியைக் கேட்ட சாஸ்திரியானவர் காவலனை நோக்கிக்கேளாயப்பா அரசனரண்மனைக் காவலனே கேளும் இயாது காரியத்திற்காக முதல் மந்திரியானவர் என்னை யழைத்துக் கொண்டு வருகச் சொன்ன சேதியை யோதும் பிள்ளாயென்று சாஸ்திரியானவர் கேட்கும் போது காவலனானவன் கூறுகின்றான்.

கேளும் சுவாமி இயாதோ இராஜகாரியமாக மந்திரியானவர் உம்மை யழைத்துக்கொண்டு வருகச் சொன்ன சேதிதான் யெனக்குத் தெரியவருமே யன்றி, மற்றப்படிக்கி யாதொரு சேதியுந் தெரியாதாகையினாலே நீவிர் காலதாமதம் செய்யாமற் படிக்கு அதிக சுருக்காக வருக வேண்டியதால் எழுந்துவாரும் சுவாமியென்று காவலன் கூறிய மொழியைக்கேட்ட சாஸ்திரியானவர் இதோவருகின்றேனப்பா வென்று திடீரென்றெழுந்து கணிதநூற் கட்டகத்தைக்கையிலெடுத்து அக்குளில் வைத்துக் கொண்டு காவலனுடன் கூடி நடையாய் நடந்து கொலுமண்டபத்திற்கு வந்து மன்னவனைக்கண்டு இராஜாதிராஜ ராஜபரமேஸ்பரா ஆசீர்வாத மென்றுரைத்து நின்றுக்கொண்டிருக்கும்போது வேந்தனானவர் முதன் மந்திரியைநோக்கி அப்பா மந்திரி சோதிட வித்துவான் இதோவந்தாராகையினாலே இவர்க்கு ஆசனமளித்து அமரச்செய்து நமது குழந்தை பருவகால மடைந்த காலத்தைச் சொல்லி ஜாதகங்கணிக்கச் செய்து அந்த ஜாதகத்தின் பலாபலனை வெளிவிடும்படியாகக் கேளும் பிள்ளாயென்று ஐம்பத்தைந்து தேயங்கட்கும் அதிபதியாகிய கட்டழகு மகாராஜனானவரோதின சேதியைக்கேட்ட முதல்மந்திரியானவர் திடீரென்றெழுந்து அருகிலிருந்த தங்கத்தினாற் சமைத்த சிங்கமுக நாற்காலியை யெடுத்துப் போட்டு முக்காலக்கியானி

யாகிய சொக்கலிங்க சாஸ்திரியாரை அதில் அமரச்செய்து அமைச்சர் கோமாறனைவன் சாஸ்திரியை நோக்கி ஐயா பெரியவரே எமது மன்னவரின் மகளாகிய கருமத்தில் மிகுந்த கற்பகவல்லியம்மாள் இன்று காலையில் ஐந்து நாழிகைக்குப் புட்பவதியாகினள். அதற்காக ஜாதகங்கணிக்கவேண்டி உம்மை யிங்ஙனமழைப்பித்ததே யன்றி மற்றொன்றுக்கு மல்லவையனே யென்று அமைச்சர் தலைவனறைந்த மொழியைக்கேட்ட சொக்கலிங்க சாஸ்திரியானவர் கணிதக்சட்டை யவிழ்த்து கற்பகவல்லி யம்மாள் புட்பவதியாகியதைக் குறித்து ஆய்ந்து பார்த்து தனக்குள்ளாகத்தானறிந்துக்கொண்டு சாஸ்திரியானவர் முகவாட்டங்கொண்டு யாதொன்றும் பேசநாவெழாமல் மௌனமாக வீற்றிருக்கும்போது சக்ரவர்த்தியானவர் சாஸ்திரியை நோக்கி ஐயா சாஸ்திரியாரே கணித நூலையாராய்ந்து பார்த்துவிட்டு ஏன்மௌனமாக வீற்றிருக்கின்றீர் என்குழந்தைக்கு கிரகங்கள் நின்றநிலையையும் தற்காலம் நடந்தியங்குகின்ற திசாபலனையும் ஒன்று மொளியாமல் ஆதியோடந்தமாக எடுத்து ஓதுமையா வென்று அரசனைவர் கேட்கும்போது முக்காலக்கியானியாகிய சொக்கலிங்க சாஸ்திரியார் கூறுகின்றனர்.

கேளும் சுவாமி மகாராஜனே உமது புத்திரிக்கு சகலமும் நன்றாகத்தான் இருக்கின்றது அந்தக்குழந்தையின் கிரகநிலையின் பலாபலனை இங்ஙனம் விரித்து வெளிப்படையாகச் சொல்லுவேனானால் அஃதைப்பற்றி நீவிர் சஞ்சலங்கொள்வீராகையினாலே அந்தக்குழந்தையைப்பற்றி யாதொன்றுங் கேட்காமல் வேறு மார்க்கங்கள் ஏதாவது கேளுமையனே யென்று சாஸ்திரியானவர் ஓதியுரைத்தவுடனே இம்மொழியைக்கேட்ட மன்னனைவர் கணிதநூற் புலவராகிய பெரியவரை நோக்கி கேளுமையா பெரியவரே எனது புதல்வியின் ஜாதகத்தின் பலாபலனைக் கேட்பேனானால் மனது கலக்கங்கொள்ளுமேவென்று உரைத்தீரல்லவா நல்லது என்குமாரத்தியைப்பற்றி யான் கலங்கும்படியான மார்க்கம் துன்னமார்க்கமாக விருந்த போதிலும் எனையோனுக்குச் சம்மதமானதினாலே அந்த மார்க்கத்தை எள்ளளவேனுமொளிக்காமற்படிக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று வேந்தன் வினவிய வுறுதிமொழிகளைக்கேட்ட வித்வசிரோமணியாகிய முக்காலக்கியானி யென்னுஞ் சொக்கலிங்கசாஸ்திரியார் கூறத்தொடங்கினர்.

இராஜாதிராஜ ராஜபரமேஸ்பரா! கேளும் உமது புத்திரியாகிய கற்பகவல்லியம்மாள் புட்பவதியானது சித்திரைமாதம் பதினோராந்தேதி சனிவாரம் காலையில் ஐந்தேகால் நாழிகைக்கு அமரபட்சம் அஸ்த நட்சத்திரத்தில் நவமிதிதியில் பருவகாலமாகி யிருக்கின்றாளாதலால், இந்த லக்கினத்திற்கு அதிகாரியாகிய அங்காரகனைவர் ஐந்தாமிடத்திற் பகைவனாகவும், மேஷராசியில் அருணன் நீச்சனாகவும், இராகுகேது பகைவர்களாகவும்பு,தபகவான் உச்சனாகவும், வியாழபகவானைவர் பனிரெண்டாமிடத்தில் ஆட்சியாகவும், பத்தாமிடத்தில் சனி நண்பனாகவும், இரண்டாமிடத்தில் சுக்கிரன் ஆட்சியாகவும் அமர்ந்திருப்பதினாலே, மன்னாதிமன்னர்கள் பணிபுரிந் தேற்றும்படியான மண்டலேஸ்பரா கேளும். உமது குமாரத்தி புட்பவதியானகால முதற்கொண்டு ஆறாவது மாதம் அஸ்த நட்சத்திரத்தில் இந்த ஜாதகியின் தாயானவளுக்கு மரணகண்டமொன்றிருக்கின்றது. அந்த கண்டம் தவறிவிடுமானால், அன்று முதற்கொண்டு இராஜபத்தினியார் இருபது ஆண்டு வாழ்ந்துகொண்டிருந்து, புரட்டாசிமாதம் பூசநட்சத்திரத்தில் சதுர்த்தசியில் சிவலோகப் பதவியை யடைகுவார்கள். அதற்குமீறி அந்தம்மனுக்கு வயதில்லையாகையினாலே பிதாகாரகன் பத்தாமிடத்தில் உச்சம்பெற்றிருப்பதினாலே இந்தஜாதகியினுடைய தந்தைக்கு எந்தக்காலத்திலும் இயாதொருதீங்கும் நேரிடாதையயனே. அதிலும் கற்பகவல்லியம்மாளானவள் புட்பவதியானகாலம் அஸ்தநட்சத்திரம் இரண்டாம் பாதமாகையினாலே பருவமடைந்த பதினொன்றாம் மாதத்தில் அதிபதியாகிய சக்ரவர்த்தியின் குமாரனைத் திருமணம்முடித்துப்பின்வருகின்ற பதினொன்றாம் மாதமாகிய மறுவருடத்தில் விதவையாகிவிடுவாள். சுக்கிரபகவானைவர் இரண்டாமிடத்தில் ஆட்சியாக வமர்ந்திருப்பதினாலே இந்த ஜாதகியானவள் இறப்பளவும் நவரத்தினப் பொற்றும்பாளத்தின்மீது அமர்ந்துகுபேர சம்பத்தாக வீற்றிருப்பாள். அதற்கு யாதொரு தடையுமில்லையயனே. தற்காலம் உமது புத்திரிக்கு நடப்பது சுக்கிரதிசை பரிபூரணமென் றறிவீரையனே யென்று சாஸ்திரியானவருரைத் தருளினார்.

முக்காலக் கியானியாகிய சொக்கலிங்க சாஸ்திரியார் மொழிந்த மொழியைக் கேட்ட கட்டழகு மகாராஜாவானவர் சற்று நேரம் இடிவிழுந்த குடிமனையைப்போல் மௌனமாக வீற்றி

ருந்து முதல்மந்திரியை நோக்கி கேளாய் அமைச்சர் தலைவனே! இரவும் பகலுமாகப் பரமனடியை யுறவாகத் தொண்டுசெய்து முப்பத்திரண்டறமும் ஒப்புறநடாத்தி யீன்றகண்மணியானவள் மணம்புரிந்த பதினோராவது திங்கள் மணமகனையிழந்து அமங்கலியாகிவிடுவாளென்று ஐயாநுரைத்தனரே. ஐயையோ! மந்திரி யானென்னசெய்குவேன். இந்த ஐம்பத்தைந்து தேயத்தையும் தாங்குவதற்காக புத்திரப்பேறில்லையென்று கடவுளைக் குறித்துத் தவஞ்செய்ததற்கு, அந்தக் கடவுளானவர் ஆண்மகவை யளிக்காமல் பெண்மகவை யளித்தனர். அந்தோ மந்திரி ஐயையோ எனது பெண்குழந்தை வயற்றிலாகிலும் ஏதேனும் ஆண்குழந்தை பிறந்தால், அந்தக்குழந்தைக்காகிலும் எனது இராச்சியபாரத் திருமுடியைச் சூட்டிக் கண்குளிரக் கண்டுகளிப்படையலாமென் றெண்ணியிருந்தேனே, இந்தச் சொக்கலிங்க சாஸ்திரியார் சொன்ன வாக்கியத்தைக்கேட்டு எனது மனதானது திக்குதிக்கென்று தீப்பிடித்தெரிகின்றதே. அப்பாமந்திரி எனது நாடுநகரங்களெல்லாம் காடாகிப் பாழாய்ப்போனாலும் போகட்டும், எனக்குக் கருமம் முடிப்பதற்கு ஒரு புத்திரன்கூட இல்லையே. ஐயையோ யானென்ன செய்குவேனென்று ஐம்பத்தைந்து தேயங்கட்கும் அதிபதியாகிய கட்டழகுமகாராஜனனவர் மேல்மூச்செறிந்து ஓவென்றலறிக் கூக்குரலிட்டு ஏங்கிப் புலம்பி துயரமூர்ச்சிகொண்டு கண்களைமூடி அயர்ந்து சிம்மாதனத்திற் சார்ந்திருந்தனர்.

தவங்களும் தானங்களும் புரிந்தீன்ற குமரியானவள் விதவையாவாளென்று சாஸ்திரியானவர் உரைத்தமொழியைக் கேட்ட வேந்தனனவர், மரணத்திற்குச் சமானமான மூர்ச்சையாகச் சிம்மாதனத்தில் வீழ்ந்து சாய்ந்துகொண்டிருக்கும்போது, முதல்மந்திரியானவர் திடீரென்றெழுந்து மன்னவனின் சிரசைத் தூக்கித், தனது மடியின்மீது வைத்துக்கொண்டு அருகிலிருந்த காவலரையேவி புட்பகவிசிறியும், வெண்சாமரமும், பனிநீருங் கொண்டுவந்து சிறுதுளியாக அரசனது முகத்திற் றெளித்து மயில்விசிறிகொண்டு விசிறி, அரசன்கொண்ட களைப்பை நீக்கினவுடனே வேந்தனனவர் துயில்செய்து விழித்த பாவனையாக இரண்டு கண்களையும் விழித்து, முதல் மந்திரியை நோக்கி கேளாயென தன்பிற்குகந்த அமைச்சனே! கேளும். எனது புத்

திரியானவள் இளம்பிராயத்திற்றானே விதவையாவாளென்று சாஸ்திரியார் உரைத்தருளிய வாக்கியத்திற்கு யானென்னசெய்குவேனப்பா வென்று கட்டழகுமகாராஜனானவர் கழன்றமொழியைக்கேட்டு அமைச்சர் பெருமானறைகின்றார்.

கேளுமையாசுவாமி மன்னாதிமன்னனே! கேளும் பிரமன் விதித்த விதிக்கு அழுதும்தொழுதாலென்ன பலனுண்டு. உம்மைப்போன்ற அரசர்களில் அயோத்தியாபுரிப் பட்டணத்தையரசாண்ட அரிச்சந்திர மகாராஜன் பட்டதுன்பமும், நிஷதாபுரியை யாண்ட நளச்சக்ரவர்த்தி பட்டகஷ்டமும், தசரதமகாராஜனின் புத்திரனாகிய ஸ்ரீராமன்பட்ட துன்பத்திற்கும மேலாகிய துன்பமா நீவிர் அனுபவிக்கின்றீர். ஐயா சக்ரவர்த்தியாரே! இம்மண்ணுலகில் மானிடராகப் பிறந்த பேர்கட்கு சிலகாலம் வறுமையும் சிலகாலம் பெருமையு மாகையினாலே, இந்நூலாசிரியரும் எமது புலவருமாகிய கதாரத்னாகரம் காமனெரித்த கட்சி உபாத்தியாயர் சி-நா-குப்புசாமி முதலியாரவர்களால் வரிவடிவாக வெழுதிய உல்லாசவல்லி யென்னும் பாதள புவனராணிக் கதையிலும், கலாவல்லபி யென்னுந் தலைவாங்கி அபூர்வசிந்தாமணிக் கதையிலும், அபூர்வ மனோவுல்லாசனி யென்னும் விநோதகாநந்தக கதையிலும, சுகமின்னதென்றும், துக்கமின்னதென்றும், நன்மையின்னதென்றும், துன்மையின்னதென்றும், பாவமின்னதென்றும் புண்ணியமின்னதென்றும் கரதலாமலகம்போலக் காட்டியிருக்கின்றாராதலால், அந்நூற்களையும் வாங்கி வாசித்துணர்ந்தா லல்லவோ இகபரசாதன மின்னதென்று விளங்கும். இம் மானிலத்தின் வாழ்க்கையானது நீர்மேற் குமிழியென்றும், கானல்நீருக்கொப்பானதென்றும், இன்னும் கிளிஞ்சல்வெள்ளிக்கும் பழுதுபாம்பிற்கும் இணையாகிய காலம்தகமாகையினாலே, இவைகளைப்பற்றித் தாங்கள் தங்களின் குமாரத்திக்காக நீவிர் மனச்சஞ்சலங் கொண்டால் உமக்கு விவேகமுரைப்பதற்கு அடியேனாலாகுமோ! அகிலதத்திலுள்ள வேதநூற்களையெல்லா மோதியுணர்ந்த புண்ணியவானே. யென்று தனது வலது கரத்தினால் அரசனது முகத்தைத்துடைத்து அரசனைநோக்கி முதல்மந்திரியானவர் கூறுகின்றார்.

ஐம்பத்தைந்து தேசத்திற்கும் அதிபதியாகிய அரசே! கேட்டருளும் சாஸ்திரியார் உரைத்தசெய்வானது இன்னுமொரு

நாளிருக்கிறபடியினாலே, நாளாக நாளாகப் பார்த்துக்கொள்ளலாம் எல்லா நன்மை தின்மைக்கும் மேலாகிய கடவுளானவர் ஒருவரிருக்கும்போது நமக்குள்ள அஞ்சுதலையைத்தீர்ப்பவனவனே. நீர் இயாதொன்றுக்கும் சஞ்சலப்படாமல் திடங்கொண்டு தீரமாக வீற்றிருமையனென்று மொழிந்த மொழியைக் கேட்ட அரையர் கோமானவர், அமைச்சர்தலைவனைநோக்கி கேளாயப்பா மந்திரி! வாராததை வாவென்றழைத்தாலும் வாராது, வந்ததைப் போவென்றாலும் போகாது, வருவது வந்தேதீருமாதலால் இந்த சொக்கலிங்க சாஸ்திரியாருக்கு வேண்டிய பொன் பொருள்கள் கொடுத்தனுப்புவாயப்பா வென்று வேந்தனானவர் ஒருவாறு திடங்கொண்டோதிய சேதியைக்கேட்ட, முதல் மந்திரியானவர் திடீரெனவெழுந்து சாஸ்திரியாருக்கு வேண்டிய பொன்பொருள் பட்டுப் பட்டாடை முதலியவைகள் பரிசுகொடுத்தனுப்பிவிட்டு அரசனுடன் கலந்து தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தனர்.

பட்டாமபுரி யென்னும் பட்டணத்தரசனின் அருந்தவப் புதல்வியாகியும், குமாரத்தியுமான கற்பகவல்லியம்மாள் புட்பவதியான அதிசயத்தைப்பற்றி முக்காலக்கியானியாகிய சொக்கலிங்க சாஸ்திரியார் புகன்றுவிட்டுப்போனது முதற்கொண்டு, யாதொரு இராச்சியபரிபாலன விஷயங்களில் இருசித்தும் மனமில்லாதவராய்த் தன்புத்திரியின் ஏக்கமே பெருந்தூக்கமாகக்கொண்டவராய், எவ்விஷயத்திலும் புத்தி செல்லாதவராய் உண்பது அன்னமாகவும், உடுப்பது ஆடையாகவும், காண்பது காட்சியாகவும் இல்லாமல் பைத்தியம் பிடித்தவர்போல, கொலுக்கூடத்தைவிட்டு அரண்மனைக்குள் வந்ததும், தன்தேவியுடனும், அருந்தவப்புதல்வியாகிய கற்பகவல்லியம்மாளுடனும் முகமலர்ச்சியாய் வார்த்தையாடிக்கொண்டிராமலும், மூன்றுநாளாக ஒரேமௌனமாக வருவதும் போவதுமன்றி பள்ளியறைக்குச் சென்றாலும், அரசியிடம் ஓர்வார்த்தையேனும் வாய்திறந்து பேசாமலிருந்ததனால் அரசிக்குச் சந்தேகம் உண்டாகி, நமதரசன் எப்பொழுதும் இவ்வாறு ஓர் வார்த்தையேனும் பேசாமலும், பள்ளியறைக்கு வந்தாலும் தானொரு புறமாகத் திரும்பிப் படுத்துக்கொண்டு தூங்காமல் விழித்துக்கொண்டே யிருக்கிறரென்று அதிக சஞ்சலமுடையவளாய், நமதரசன் இவ்வாறு

தினம் பள்ளியறைக்குவந்து தாம்பூலந் தரித்தபிறகாயினும்! இத மான வார்த்தையாகப் பேசி அவர்மனதிலிருக்குங் குறையை நாம் தெரிந்துக்கொள்ள வேண்டியதென்று உறுதிகொண்டவளாய் இரவு எப்பொழுது சமீபிக்கப் போகிறதென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.

நான்காநாள் கட்டழகுமகாராஜன் நாடோறுங் காலைக்கடன்களை முடிப்பதுபோல் முடித்துக்கொண்டு ஜபதபங்கள் புரிந்து அறுசுவை பாராது அசனமருந்தி கொலுக்கூடத்திற்குச் சென்று மந்திரிபிரதானிகள் புடைசூழத் தேசவிசாரணை புரிந்து நீதி வழுவாது செங்கோல் நடாத்தி, மந்திரிபிரதானிகள் அவரவர்களில்லம் போகும்படி உத்தரவளித்து கொலுகலைந்தவுடனே மாலைக்கடன் முடித்துக்கொண்டு சிவாலயத்திற்குச்சென்று வழிபடுங் கடவுளைத்தொழுது, அரண்மனைக்கேகி போஜனமருந்தி பள்ளியறைக்குச்சென்று பஞ்சணைமீது படுத்து நித்திரைபுரியாமல் விழித்துக்கொண்டிருக்கும்பொழுது, இராஜமகிஷியும் அரசன் உண்ட இலையில்போஜன மருந்தித் தாதிமார்களிருபுறத்திலும் தங்கத் தாம்பாளத்தில் தாம்பூலமும், பாலும் கொண்டுவர பள்ளியறைக் குட்சென்று தாதிமார்கள் கொண்டுவந்த தாம்பூலத் தாம்பாளத்தையும் பாலையும் வெள்ளிமேஜையின்மீது வழக்கம்போல் வைக்கும்படி உத்தரவளிக்க, அவ்வாறே அவர்கள் வைத்துச் சென்றதின் பின்னர் பள்ளியறையைக் கபாடமிட்டுத் தாள்போட்டு இராஜமகிஷி அரசனருகிலுட்கார்ந்து பால் தந்து சுருள்மடித்துக் கொடுத்துக்கொண்டே கட்டழக மகாராஜனை நோக்கி, சுவாமி தாங்கள் நான்குநாளாக மனதில் இயாதோ ஒன்றை மர்மமாக வைத்துக்கொண்டே ஒருவார்த்தையும் புகலாமல் மௌனமாயிருக்கும விபரத்தை அடியாளுக்குத் தெரியப்படுத்தவேண்டுமென்று மிகவும பயபகதியுடனே புன்சிரிப்புடன் கேட்கலுற்றாள்.

அப்பொழுது கட்டழகு மகாராஜன் தன் தேவியை ஏற இறங்கப்பார்த்து பெண்மணி! நாம் பூர்வஜன்மத்தில் புரிந்த நல்வினை தீவினைகட்கு அறிகுறியாக இச்செனமத்தில் இராஜவம்சத்திலுற்பவித்தும பூமிக்குப் பாரமாகப் பிள்ளையாய்ப்பிறந்தேனேயொழிய மற்றொன்றுமில்லை ஏனெனில் நமதரசுரிமையை ஏந்திக்கொள்ள நற்சுதன உற்பத்தியாகாவிட்டாலும், கண்ணுக்கினி

டைய கருணாகடாக்ஷத்தினால் ஓர் பெண்மகவுண்டாயிற்று. அதன்வயிற்றிலாகிலும் புத்திரப் பேறுண்டானால் அதனாலேயாகிலும் நற்கதி யடையலாமென எண்ணங்கொண்டிருந்த எண்ணமானது, நீ புட்பவதியான தினத்தின் பலாபலன் விசேடத்தினால் நிராசையாகிவிட்டது. அஃதெப்படியென்றால் நீ புட்பவதியான தினத்தினின்று நட்சத்திரமும் கோள்களும் சரியாயிராததால் ஆறுமாதத்தில் தாயை இழப்பாயென்றும், உனக்கு விவாகம் நேரிட்ட பதினோராமாதத்தில் மாங்கல்ய மிழப்பா யென்றும், திரிகால க்யானியாகிய சொக்கலிங்கசாஸ்திரியார் சொல்லியிருப்பதால் அது எங்கள் நினைவை அடிக்கடித் தூண்டுகோலிடுவதினால், உன்னைப்பார்க்கப்பார்க்க எங்கள் மனம் பொறாமல் துக்கம் மேலிடுகின்றது என்கண்மணியாகிய கற்பகவல்லியே என்று தாய்சொன்னதைக்கேட்டு கற்பகவல்லி மறுமொழி கூறலுற்றனள்.

அம்மா என்னை பருந்தவஞ்செய்து பெற்ற என்னம்மணி! யான் ஒன்று சொல்லத்துணிவதைச் சிறிது மனம்பொறுத்து செவிசாய்க்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். அதாவது என்னவெனில்,

"இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி
விட்டசிவனுஞ் செத்துவிட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ."

என்னும் வெண்பாவின் கருத்துக் கியைந்தவாறு, அன்று எழுதினவன் மறுபடியும் அழித்து எழுதப்போகிறானா? வருவது வந்தேதீரும் நீங்கள்யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். யாதாமொரு மார்க்கண்டேய மகரிஷி உண்டே, அவர்தனக்கு அயனால் ஏற்பட்ட பதினாறுவயதையும் அநேக ஸ்தலங்கடோறுந் திரிந்து ஆங்காங்குள்ள சிவபெருமானைப் பலவாறு பணிந்தேத்திக் கடையில் திருக்கடையூர் அமுர்தலிங்கேசரைத் தொழுது கொண்டிருக்கும்பொழுது மார்க்கண்டேய மகரிஷிக்கு பதினாறுண்டு சப்பூரணமாகவும், சித்திரபுத்திரன் கணக்கு பார்த்து இன்றுதான் மிருகண்ட மகரிஷியின் புத்திரனை மார்க்கண்டனுக்கு ஆயுள் முடிவாய்விட்டதால் இயமதருமராஜனிடத்திற்

புகல அவன் தன் ஏவாலாளிகளாகிய தன் தூதர்களையனுப்ப, அன்னவர்கள் தங்களால் மார்க்கண்டனது உயிரை அகிலப மாய் பெறமுடியாதென்று இயமதருமராஜனிடம்முறையிட, உடனே இயமதருமராஜன் எருமைக்கடாமீதேறி பாசக்கயிற்றை கையிலேந்தி ஓடோடியும்வந்து அப்பாசக்கயற்றை மார்க்கண்ட மகரிஷியின்மீது வீசவும் அது அமர்ககன் டிஸ்வாயின் மீது மாலைபோல் விழுந்ததால், மார்க்கண்டேயர் அனுஷ்டித்துக்கொண்ட பூஜாமகத்துவத்தால் சிவலிங்கத்தினுள்ளிருந்த சிவபெருமான் தன்மீது விழுந்த இயமனது பாசக்கயற்றின் உபத்திரவம் பொறாதாகி, இயமனை உதைத்து மார்க்கண்டேய மகரிஷிக்கு என்றும் பதினாறுகச் சிரஞ்சீவிப்பட்டமளித்து, அன்னோன் உயிரைக் காக்கவில்லையா? அஃதன்றி நளமகாராஜாவின் பேரனது மனைவி, தனக்கு நேரிட்டிருந்த வைதவ்யத்தை சோமவார விரதத்தை யனுஷ்டித்து, தனது மங்கல்யத்தைக் காப்பாற்றிக் கொள்ளவில்லையா, இவ்வாறெலாம் இருக்க இதற்கு நீயாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம், ஆனல் எனது தந்தையிடத்தில் இவைகளையெல்லாம் சொல்லி நமது குலகுருவாகிய அப்பண்ண தீக்ஷதரை அதிசீக்கிரத்தில் வரவழைக்கச்செய்வாய் எனையீன்ற என்னருமைத்தாயே என்று கற்பகவல்லிசொல்லிமுடித்தனள்.

உடனே இராஜமகிஷியானவள் நாயகனை அதிசீக்கிரத்தில் கொலுக்கூடத்தை விட்டு வரும்படி பணியாளரிடம் சொல்லியனுப்பவும், அவர்கள் அரசியின் வாக்கைத் தட்டாமல் ஓடோடியும் அரசனிடஞ்சென்று ஐம்பத்தைந்து தேசத்தையும் அரசு புரியும் இராஜமார்த்தாண்ட, இராஜகெம்பீர, இராஜகோலாகல, இராஜபூபதியே பராக் எச்சரிக்கை எனக் கூறி பின்பு அரசிதங்களை அதிசீக்கிரத்தில் அரண்மனைக்கு வரும்படி கேட்டுக்கொண்டார்களெனப் புகன்றமாத்திரத்தில், உடனே சிம்மாசனத்தை விட்டிறங்கி கொலுக்கூடத்தைவிட்டு அரசியிருக்குமிடத்திற்கு வந்து யாதுசேதியென வினவ. அதற்கு அரசி நமது புத்திரியாகிய கற்பகவல்லியம்மாள் நமது குலகுருவாகிய அப்பண்ண தீக்ஷதரை இவ்விடம் சீக்கிரம் வரவழைக்கவேண்டுமென்று கூறுகின்றனள். ஆகையால் தாங்கள் மந்திரியிடம் இச்சேதி சொல்லி நமது குலகுருவாகிய அப்பண்ண தீக்ஷதரை வரவழைக்கவேண்டுஞ் சுவாமி என்றனன்.

தக்ஷணமே மந்திரியை வரவழைத்து அப்பா மந்திரி! நமது குலகுருவாகிய அப்பண்ணா தீக்ஷதரை சீக்கிரம் வரவழைக்க வேண்டுமென, உடனே மந்திரி ஏவலாளரைவிட்டு வரவழைக்கச் செய்தனர். அப்பண்ணா தீக்ஷதர் வந்தவுடன் கற்பகவல்லியம்மாள் அவரது திருவடிகளைத் தொழுது பணியவும், குலகுருவானவர் ஆசீர்வாதஞ்செய்து கற்பகவல்லியைத் தூக்கி, யாதுகாரணமாக வரவழைக்கும்படி செய்வித்தனை யம்மா என்று வினவவும், சுவாமி சகல ஆகம வேத புராணங்களோதும் அந்தணராதலால் தங்களுக்குத் தெரியாதது உலகத்தில் ஒன்றுமில்லை யாகையால் அடியாளுக்கு விவாகமான ஞான்றிற்குள் வைதவ்யம் நேரிடுமென திரிகாலஞ்ஞானியாகிய சொக்கலிங்க ஜோதிடரால் சொல்லக் கேள்விப்பட்டது முதற்கொண்டு துக்கமெனும் சாகரத்தினாழ்ந்து இருக்கிறேம். ஆகையால் அந்த வைதவ்யத்தினின்று மீளும் மார்க்கம் எவ்வாறோ அதைத் தெரிவிக்க வேண்டும் சுவாமி என்று அடிபணிந்து தொழுது நின்றனள்.

அவ்வாறு தொழுது நின்ற கற்பகவல்லியைக் குலகுருவாகிய அப்பண்ணா தீக்ஷதர் பார்த்து அம்மணி, குழந்தாய்! யான் உபதேசிக்கும் மந்திரங்களை விடாது ஜெபித்துக்கொண்டு சோமவாரவிரதம் அனுஷ்டித்துக்கொண்டே வருவாயானால், நீ மாங்கல்ய மிழந்தபோதிலும் பரமேஸ்வரனது திருவருளால் உன் கணவனது உயிரைமீளப்பெற்று மாங்கல்யம் இழந்துவிடாமல் எந்நாளுந்தீர்க்க சுமங்கலியாகவேயிருந்து உயிர் துறப்பாய். ஆகலால் சோமவாரவிரதத்திற்கு மிஞ்சியது இப்பூவுலகில் வேறொன்றுமில்லை யென்று சொன்னதைச் சிரசின்மேலேந்திக்கொண்டு அதுமுதல் சோமவாரவிரதம் தமது குலகுரு கற்பித்தமுறைமைப்படி கற்பகவல்லி யம்மாள் அனுஷ்டித்துக்கொண்டு வந்தனள்.

பட்டாம்புரி யென்னும் பட்டணத்தரசனின் அருந்தவப் புதல்வியாகியும் கதாநாயகமுமான கற்பகவல்லியம்மாள் சோமவாரவிரதம் இடைவிடாது அனுஷ்டித்துக்கொண்டு இங்கிவ்வாறிருக்க, ஞானபுரியென்னும் பட்டணத்தை யாளப்பட்ட அறத்தான மகாராஜனவர் நாள்தோறும் முப்பத்திரெண்டறமுங் குறைவிலாமல் நிறைவேற்றிக்கொண்டு வருகின்ற நாளையில், கதிரைவேற் பண்டாரமென்னும் ஆண்டியானவர் பட்டாம்புரிக்குச்சென்று கற்பகவல்லி யம்மாளின் தருமக் கோட்டைக்குச்

சென்று, அம்மனின் பிரதாபங்களைக் கேள்விப்பட்டு, அனேக பொன்பொருள்களும் முத்துகண்டி, மோகனகண்டி, வைரகண்டி, வச்சிரகண்டி முதலாகிய கண்டசரங்களும், முத்துமாலை மோகனமாலை, வைரமாலை, வச்சிரமாலை முதலாகிய மாலைகளும் பட்டுப் பட்டாடை முதலாகிய தெல்லாம் தனக்கு வேண்டுமளவும் பெற்றுக்கொண்டு, அறுசுவையோடுங்கூடிய அசனம் புசித்துக் களிப்படைந்து, பட்டாம்புரியைக்கடந்து காடு கானகங்களில் நடந்து ஞானபுரிக்கு அருகாமையில்வந்து அறத்தாள மகாராஜனின் தருமப் பிரதாபத்தைக் கேட்டுப், பட்டணத்திற்குள்ளாகப்புகுந்து கிழக்குதிசையிலிருக்கின்ற தருமக் கோட்டைக்கு கதிரைவேற் பண்டாரம் வந்து சேர்ந்தார்.

ஆண்டிப் பெரியோரானவர் கீழ்த்திசைக்கோட்டை முதல் வாயிலுக்குச் சென்றவுடனே, ஆங்கிருக்கப்பட்ட பணியாளர்கள் திடீரென்றெழுந்து பொற்பீடம் கொடுத்துப்போட்டு பண்டாரத்தை யதிலமர்த்தி வெள்ளிச்சொம்பில் ஜலங்கொண்டுவந்து பண்டாரத்தினது பாதகமலத்தையலம்பிப் பட்டால் துவட்டி நடந்துவந்த ஆயாசந் தீர்வதற்காகப் பாயாசங்கொண்டுவந்து பண்டாரத்தின் கரத்திற்கொடுத் துண்ணச்செய்து, வெட்டிவேரிற் சமைத்த விசிறியாலும், மயிலிறகினுற் சமைத்த விசிறியாலும் பண்டாரங்கொண்ட களையைத்தெளிவிரத்து காத்தைப்பிடித்து அழைத்துக்கொண்டு இரண்டாவது வாயிலுக்குச்சென்று, பண்டார முடுத்துக்கொண்டிருந்த ஆடையாபரணங்களை யெல்லாங் களையும்படிச்செய்து, களைந்து வைத்தவுடனே பொன்னாசனம் போட்டு அவ்வாசனத்தில் பண்டாரத்தையமர்த்தி, வெள்ளிக் கிண்ணத்தில் எள் எண்ணெய் கொண்டுவந்து ஆண்டியின் சிரசிலும் உடல் முழுவதுந் தேய்த்து எழுப்பிப் புனலாடும் மனைக்கு அழைத்துக்கொண்டுபோய் நாற்காலியின்மீதி லமர்த்தி அப்யங்கஸ்நானஞ் செய்துவைத்து அரண்மனைக் கழைத்துக்கொண்டு போய்ப் பட்டாடையினுல் பண்டாரத்தின் உடல் முழுவதுந் துடைத்து, வேறுபட்டுப் பீதாம்பரமெடுத்துக்கொடுத்து உடுத்திக்கொள்ளச்செய்து பெரியோரானவர் உடுத்திக்கொண்டு சிவபூசையைக் கவலமுடன் செய்து முடித்தவுடன் பொற்பீடத்தில் பண்டாரத்தை யமர்த்தி, முக்கனி சருக்கரையோடு அறுசுவையுங்கூடிய பதார்த்த வகைகளோடு அசனம்படைத்து உண்

னசெய்து, பெரியோரானவர் அருந்தி யெழுந்ததின்பின்பு, புனல்கொண்டுவந்து வாக்கு கால் கரங்களை அலம்பச்செய்து பள்ளியறைக்கு அழைத்துக்கொண்டுபோய், பசும்பொன்னா லியற்றிய பஞ்சணை மஞ்சத்தில் பெரியவரைப் படுக்கவைத்து, வலது புறமும் இடதுபுறமும் எட்டுப்பணியாளர்களமர்ந்து, காற்கரங்களைப் பிடித்துக்கொண் டிருக்கும்போது, தாளமேளக்கீத நாதமாகிய கருவிகளை யெடுத்துக்கொண்டு நான்கு மாதர்கள் அந்த பள்ளி யறைக்குள்ளாக வந்து முப்பத்திரண்டு இராகங்களையும் அமைத்து இசைகூட்டி சுதிகூட்டி அனேக விதமாகியபாடல்களைப் பாடிக்கொண்டிருக்கும்போது கதிரைவேற் பண்டாரமானவர் அயர்ந்து துயின்றுவிட்டார்.

சகோதரேய நண்பர்களே கேளுங்கள்! கதிரைவேற் பண்டாரமானவர் சதுர்வேத போதகரானபடியினாலே இந்த மகானானவர் மண்ணாசை பொருளாசை மங்கையராசை யென்னும் மூவாசையையும் பற்றறுத்தவராகையினாலே, மானிடருக்குச் சோதனைக் கர்த்தாவாக தருமசிந்தையுடைய அரசர்களை சோதித்தறிய வேண்டுமென்று வெளிப்பட்டாரேயன்றி வேறொன்றுக்கும் வெளிப்பட்டவரல்ல. இந்தப் பெரியவரானவர், இந்த தன்மையாக அந்தப் பட்டணத்தில் நான்கு திக்குகளிலு மிருக்கின்ற தருமக்கோட்டைகட்குஞ் சென்று ஆங்காங்கு நடக்கின்ற பணிவிடைகளைக்கண்டறிந்து அங்கே யிருக்கின்றப் பணியாளரில் ஒருவனையழைத்து கேளாயப்பா பணியாளனே உங்கள் வேந்தனானவர் இந்தத் தருமக்கோட்டைக்கு எப்பொழுது வருகுவார் கூறுபிள்ளாயென்று பண்டாரமானவர் கூறின மொழியைக் கேட்ட பணியாளனானவன் பண்டாரத்தை நோக்கி சுவாமிபெரியவரே எங்கள் மகாராஜாவானவர் தினமொன்றுக்கு ஓர் கோட்டைக்குச்சென்று சோதனை செய்துகொண்டு வருகின்றவழக்கமாகையினாலே, இன்றையதினம் மாலையில் இருபத்திரண்டரை நாழிகைக்கு இந்தக் கோட்டைக்கு வருகுவாரையனே யென்று தருமக்கோட்டை ஊழியனான பணியாளன் பகர்ந்த வாக்கியத்தைக்கேட்ட பண்டாரமானவர் நலமென்று தலையையசைத்து இந்தத் தருமக்கோட்டைக்கு அதிபதியாகிய அரசனை நேரில் சந்தித்து அவனது சிந்தையை சோதிக்கவேண்டு மென்று வேறொன்றும் பேசாமல் மௌனமாக அங்கே பண்டாரமானவர் வீற்

திருக்கும்போது, இருபத்திரண்டரை நாழிகைக்குக் கோட்டை முதல்வாயற்படி யண்டையில் அரசனானவர் வந்து புரவியை விட்டுத் தரைதனிலிறங்கினார்.

அரசன் இறங்கினவுடனே அங்ஙனமிருந்த பணியாளனொருவனோடியும் வந்து அரசனது புரவியைப் பிடித்துக்கொண்டு போய் புரவிச் சாவடியில் கட்டிவிட்டு தனது காரியத்தில் வீற்றிருக்கும்போது, மன்னனானவர் தருமமாளிகைக்குள்ளாகப் புகுந்து பொக்கிஷசாலையைச் சோதித்தறிந்து திரும்பும்போது, கதிரைமேற் பண்டாரமானவர் மன்னனைக்கண்டு தடீரெனவெழுந்து. இருகரத்தையுங் கூப்பி ஏ-இராஜாதி ராஜராஜபரமேஸ்பரா ஆசீர்வாதம் சுபம் சுபமென்றுரைத்த மொழியைக்கேட்ட அரசனானவர், இருகரத்தையும் சிரசின்மேற்கூப்பி வந்தனம் வந்தனம் சுவாமியென்று உரத்தசத்தமாக வுரைத்துப் பணிந்து வந்தனம் செய்து நின்றுகொண்டிருக்கின்ற மன்னாதிமன்னவன் முகத்தைப் பண்டாரப் பெரியோரானவர் கண்டு, இந்த வேந்தனைச் சோதிப்பதற்கு இதுதான் தருணமென்று நினைந்து, பாரமன்னனை நோக்கி ஐயா மகாராஜனே! இந்த ஞானபுரி பட்டணத்தில் நான்குமூலைகட்கும் இருக்கின்ற தருமக்கோட்டையானது யாருடையது? இந்த நான்கு கோட்டைகளிலும் விரையமாகும் பொருளுக்கு அதிகாரியார்? நீயார்? உனது நாமதேயமென்னவென்று பெரியவர் வினவிய வாக்கியங்களைக் கேட்டசெம்மலானவன் பண்டாரத்தை நோக்கி, கேளுமையா சுவாமி பெரியவரே! இந்தப் பட்டணத்தின் நாமதேயமானது ஞானபுரியென்றுரைப்பார்கள். இந்தப் பட்டணத்தை யாளப்பட்டவன் அடியேன். யானேதான். எனது நாமதேயம் அறத்தாளனென்று கூறுவார்கள். இந்தப்பட்டணத்தில் நான்கு மூலைகளிலு மிருக்கின்ற தருமக்கோட்டையானது இந்த அடிமையதென்றேயுவாய இந்த நான்குகோட்டையிலும் விரையஞ்செய்து வருகின்ற பொருள்களெல்லாம் தங்கள் பாக்கியமேயல்லாமல் மற்றப்படிக்கு வேறொருவரொன்றும் உணரவேண்டாம் சுவாமியென்று ஐம்பத்தைந்து தேயங்கட்கும் அதிபதியாகிய அறத்தாள மகாராஜனுரைத்து நிறுத்தினர்.

இம்மொழியைக் கேட்ட ஆண்டிப்பெரியோரானவர் மன்னனை நோக்கி ஐயா! தருமத்திலுமிகுத்த தாராளகாரியாகிய அறத்தாள மகாராஜனே நானிந்த ஞானபுரிப் பட்டணத்து-

வந்து நான்கு தருமக்கோட்டைகளிலும் உமது கருணாகரகுணத்தினால் அனேகம் பொன்பொருள்களும் நவரத்தின ஆபரணங்களும் பட்டுப்பட்டாடைகளும் எனது மனதினளவாகப் பெற்றதுமல்லாமல், முப்பழமொடு பாலன்னத்தோடுங்கூடிய அசனமும் புசித்தேன். ஐயா சக்ரவர்த்தியாரே! கேளும் யானும் அனேக நாடுநகரங்களெல்லாஞ் சுற்றி இராஜாதி ராஜர்களிடத்திலும் உம்மைப்போன்ற மன்னாதி மன்னர்களிடத்திலும் ஏழையோனுக்கு வேண்டிய வளவும் விலைமதிக்க வொண்ணாத செல்வப்பொருள்களைப் பெற்றுவந்திருக்கின்றேன்.

ஐயா சக்ரவர்த்தியாரே கேளும்! சூரிய சந்திரர்கள் விளங்கும்படியான உலகங்களில் யானும் சிலது உலகங்களைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு வந்ததில், உன்னைப்போன்ற தருமவான்கள் உலகத்திலில்லையென்று எனது கருவிகரணாதிகளின் சாட்சியாகத் திரிகரண சத்தியாய்ச் சத்தியமாக நம்பினேன். ஐயா ஐம்பத்தைந்து தேயங்கட்கும் அதிபதியாகிய சீமானே கேளும்! அடியேனும்மிடத்தில் இன்னுமொருபொருள் வேண்டிக் கேட்க விருப்பங் கொண்டிருக்கின்றேன். தேவரீர் அருளுவீரானால் எனது மனதில் நினைத்த பொருளை வெளியிடுகின்றேனையா வென்று ஆண்டிப்பெரியோரறைந்த வாக்கியத்தைக்கேட்ட. அரசனானவர் குலுங்கநகைத்து ஐயா ஆண்டேரே! உமக்கென்னவேண்டும் போலாக விருந்தபோதிலும், அந்தப்பொருளை விபரமாகத் தெரிவிப்பீரானால் அஃது எப்போர்க்கொத்த பொருளாக இருந்தபோதிலும் அந்தப்பொருளை அந்தட்சணமே வருவித்துத்தருகின்றேன். உமது திருவாய் மொழிய வேண்டும் சுவாமியென்று மன்னவன் சொன்னசொற்களைக்கேட்ட மகானாகிய பண்டாரமானவர் அரசன் கரத்தைப்பிடித்துக் கொண்டு பகருகின்றார்.

கேளாய் மகாராஜனே நீயணிந்துகொண்டிருக்கின்ற ஆடையாபரணங்களை யெல்லாம் நின்ற நிலையில் இந்தக்ஷணத்தில் நானேகளைவேன். அவைகளை எனக்குக்கொடுக்க வேண்டியதென்று பெரியவரானவர் கேட்டவுடனே, இளவரசோனாகிய அறத்தாள மகாராஜனானவர் இதோ களைந்துத் தருகின்றேன் பெற்றுக்கொள்ளும் சுவாமி யென்று, தானணிந்துக்கொண்டிருக்கின்ற கிரீடமகுடமுடியும், கவசகுண்டலமும், இரத்தினமாலை, முத்துமாலை, மோகனமாலை, வைரமாலை, வஜ்ரமாலை முதலாகிய

விலைமதிக்க வொண்ணாத ஆபரணங்கள் நவரத்தின மயமாகிய ஆடைகள் முதலிய தெல்லாங் களைந்து ஆண்டியி னடியினிடத்தில் வைத்துவிட்டு நின்றுக்கொண்டிருக்கும்போது (கொலுமண்டபத்தில் முழுமதியென்னும் முதல்மந்திரியானவர்) இயாதுகாரணமோ இன்னும் மன்னவன் வருகவில்லையேயென்று சஞ்சலமுற்றவராகி சற்றுநேரம் ஒன்றும் தோன்றாமல் மௌனமாக ஓ-கோ ஆதிநாளில் நமதரசனுக்கு பதினைந்தாவது வயதில் இடதுகரமிழந்து நாடு நகரங்களைவிட்டு விட்டுப் பரதேசியாகப் போய்விடுவானென்று, ஆயுர்வேத பண்டிதராகிய ஆதிமூல உபாத்தியாயர் ஜாதகமெழுதி கொடுத்திருக்கின்றாரல்லவா நாமும் வெகுநாளாக அந்த ஜாதகத்தைப் பார்வையிடாம லிருக்கின்றோமே நல்லது இப்போது அதனையெடுத்துப்பார்க்கவேண்டுமென்று நினைவுகொண்டு திடீரென்று ஆசனத்தைவிட்டெழுந்துபோய், புத்தகசாலைக்குள்ளாகப் புகுந்து இளவரசனின் ஜாதகத்தையெடுத்து வாசித்துப்பார்த்து ஐயையோ! இன்னும் சிலது நாழிகைக்குள்ளாகநமதரசன் இடதுகரமிழந்துபோகப் போகின்றானே ஓ தெய்வமே யானென்னசெய்குவேனென்று கண்ணீர் ததும்பி இருகண்களிலும் முத்துதிர்த்து சற்றுநேரம் ஏங்கிப்புலம்பி அதன் பின்பு மனத்திடங்கொண்டு ஓ-கோ-நாமிவ்வாறாக இங்ஙனமே குந்தி யேங்கிக்கொண்டிருப்போமானால் வேந்தனுக் கேதாவது தீங்குவந்து விளையும். ஆகையினாலே நாமெழுந்து சென்று அரசனண்டைக்குப்போய் நம்மாயலின்றவரைக்கும் மன்னவனைப் பாதுகாக்கவேண்டிய பாரமானது நம்முடைய கடமையானதைப் பற்றி நாமிங்ஙன மிருக்கலாகாதென்று நினைத்து ஜாதகத்தை இருந்தவிடத்தில் தானே வைத்துவிட்டு கொலுவிற்கு வந்து காவலனையேவி தனது புரவியை யலங்கரித்துக்கொண்டு வரச்செய்து அதன்மீதி லாரோகணித்து ஒருவரிடத்திலும் இயாதொரு வார்த்தையும் பேசாமல் தேசியைத்தாண்டி அதிக வேகமாக நடத்திக்கொண்டு வடபாரிசத்தி லிருக்கின்ற தரும கோட்டைக்கு வந்து புரவியை விட்டிறங்கி அங்ஙனமிருக்கின்ற காவலனை யேவி புரவியைபிடித்துக்கொண்டுபோய்ச் சாவடியில் கட்டச்செய்து விட்டு முழுமதியென்னும் முதல் மந்திரியானவர் கோட்டைக்குள் சென்று அரசனிருக்கின்ற கோலத்தையும் ஆண்டிப் பண்டாரத்தையுங்கண்டு இருவர்கட்கும் வந்தனம் செய்து தானும் அங்ஙனமே நின்றுக்கொண்டிருந்தனர்.

ஆடையாபரணங்களொன்று மில்லாமல் பரதேசியைப்போல நின்றுகொண்டிருக்கின்ற சக்ரவர்த்தியை ஆண்டிப் பெரியோரானவர் நோக்கிப்பார்த்து, கேட்டதை யில்லையென்னமல் கொடுக்கின்ற துராங்காரியே கேளும், உன்னிடத்தில் இன்னுமொருபொருள் இருக்கின்றது. அந்தப் பொருளைப் பெற்றுக்கொண்டுபோவதற்கு விருப்பங்கொண் டிருக்கின்றேன். அதனை நீ தருவதானல் நான் தெரிவிக்கின்றேனென்று ஆண்டியானவரறைந்த வுரையைக்கேட்ட வேந்தனைவர் பண்டாரத்தை நோக்கி, கேளுமையா சுவாமி பெரியவரே இன்னும் உமக்குத் தேவையான பொருள்களென்ன பொருள்களாக விருந்தபோதிலும் அதனைத் தெரிவிப்பீரானல் இக்கட்சணமே வருவித்துத் தருகின்றேனென்று அரசனைவருரைத்தருளினர்.

அரையனறைந்த மொழியைக்கேட்ட பெரியோரானவர் மன்னனைநோக்கி, கேளாயப்பா அரசனே உனது பட்டணத்திலிருக்கப்பட்ட நான்கு தருமக்கோட்டைகளிலும் சென்று என் மனதைப்போலவே யெனக்கு வேண்டுமான பொருள்களை யெல்லாம் இதோ பெற்றுக்கொண்டு வந்திருக்கின்றேன். இதுவுமல்லாமல் நீ அணிந்துகொண்டிருந்த பணிகளையும் பெற்றுக்கொண்டேன், நல்லது உன்னுடைய ஆடையாபரணங்களை யானணிந்துக்கொண்டு யெங்கேனுஞ் செல்லுவேனுனல் அடே ஞானபுத்தரசன் அணியும்படியான ஆடையாபரணங்களுனக்கு எவ்விதங்கிடைத்தது சொல்லடாவென்று என்னைக்கேட்பார்களேயாமானல் நீவிர் கொடுத்ததாகக் கூறப்போகின்றேனல்லவா ஆகையினலே கேட்போருக்குத் தங்களடையாளங் காண்பிக்கும் பொருட்டாகத் தாங்கள் தருமம் செய்யும்படியான கரங்களில் இடது கரத்தை வெட்டிக்கொடுப்பீர்களானல், இவ்வளவெல்லாங் கொடுத்ததற்கு அது ஒன்றுதா னெனக்குப் போதுமானதென்றுபண்டாரமானவருரைத்தருளினர்.

ஆண்டிப் பெரியோனறைந்த மொழியை யரசன்கேட்டு இதோ தருகின்றேனென்று முதல்மந்திரியானவர் தனது இடையிலணிந்துகொண் டிருக்கின்ற உரையிலிருந்துங் கத்தியை அரசனுநன் வலது கரத்திற் பிடித்துத் தனது இடது கரத்தை புஜத்தளவில் வெட்டிக் கீழேவிழுத்தி வலதுகரத்திலிருந்த கத்தியை மந்திரியிடத்தில் கொடுத்துவிட்டு மண்மீது துடித்துக்

புஜத்தளவில் வெட்டிக் கீழே வீழ்த்தி வலது கரத்திலிருந்த கத்தியை மந்திரியிடத்திற் கொடுத்துவிட்டு மண்மீது துடித்துக்கொண்டிருக்கின்ற தனது கரத்தை வலதுகரத்தால் பிடித்தெடுத்து இந்தாரும் சுவாமி யென்று பண்டாரத்தின் பாதத்தடியண்டையில் வைத்துவிட்டு கேளும்சுவாமி மகானுபாவரே இன்னும் உமக்கேதாகிலும் வேண்டுவதாயிருந்தாலும் வெளியிடுமையாவென்று இடதுகரம் அறுப்புண்டு தாரைதாரையா யுதிரம் வடிந்துக்கொண்டிருக்கின்ற சக்ரவர்த்தியானவர் மொழிந்தமொழியைக் கேட்ட பண்டாரப் பெரியோரானவர் மன்னனைநோக்கி கேளாயப்பா மகாராஜனே சத்தியத்தில் உனக்கு நிகரானவர்கள் ஒருவரு மில்லையென்றுணர்ந்தேன் ஆகையினாலே இன்னு மொருபொருள் வேண்டியிருக்கின்றேன். அந்தப்பொருளைக் கொடுப்பாயானால் பெற்றுக்கொண்டு அந்தட்சணமே போய்விடுகின்றேன் என்று ஆண்டியறைந்த உரையைக்கேட்ட அரசனானவர் கூறுகின்றார்.

ஐயா பெரியவரே உமக்குவேண்டிய பொருளை வெளியிடுவீரானால் இந்தட்சணமே கொடுக்கின்றேனையா வென்ற அண்ணலின் மொழியைக்கேட்ட ஆண்டியானவர் மன்னனைநோக்கி கேளாயப்பா அரசனே, உனது இடது கரத்தை யானெடுத்துக்கொண்டுபோவேனானால் இயாவராகிலும் மனிதர்கள் கண்டால் தருமதுரையாகிய அறத்தாள மகாராஜனின் கரத்தை நித்திரையில் வெட்டியெடுத்துக்கொண்டு வந்து விட்டானென்று என்னைப் புடைத்து இடித்து அடிப்பார்கள். ஆகையினாலே உமது வலது கரத்தையும் வெட்டிக் கொடுப்பீரானால் கேட்போர்களுக்கு உமது இரண்டு கரத்தையும் இந்தப் பொருள்களுக்குச் சாட்சியாகக் காண்பிப்பேன். பார்ப்பவர்களும் உண்மையென்றெண்ணுவார்கள். ஆகையினால் அதையொன்றைமாத்திரம் எனக்குக் கொடுத்தாலாயிற்று. இல்லாமற்போனால் நீவிர் கொடுத்தபொருள்களையும் உமது இடதுகரத்தையும் எடுத்துக்கொள்ளும் பிள்ளாயென்று தனது கரத்தில் வைத்துக்கொண்டிருந்த பொருள்களை யெல்லாம் தரையிலெறிந்துவிட்டுப் பெரியோரானவர் நின்றுக்கொண்டிருந்தார்.

பண்டாரமுரைத்த வாக்கியத்தைக்கேட்ட பார்மன்னனானவர் மந்திரி உரையிலிட்டிருக்கின்ற கத்தியை மன்னவன் வலதுகரத்தாலுருவியெடுத்து ஐயா முதல் மந்திரியாரே இதோ இந்தக்கத்தியினால் எனது வலதுகரத்தை புஜத்தளவில் வெட்டி இதோ இந்தப் புண்ணியவானுக்குக் கொடுத்தனுப்புமையா இந்தாரும் இதைப்பிடி

யுமையா வென்று அரசன் சயுக்குறியாக வுரைக்கும்போது, முதல்
மந்திரியாகிய பெரியவர் கேட்டு அரசனைநோக்கி கேளும் சுவாமி
மகாராஜனே! தருமத்திற்காக ஏதோ ஒருகரத்தை வெட்டிக்கொடுக்
கும்படியாகக் கேட்டான் தாங்களும தடைசெய்யாமல் வெட்டிக்
கொடுத்தது தருமநீதிதான் அந்தக்கிழவனானவன் பேராசையுடை
யோனாகையினாலே உம்மைக்கொன்று விடுவதற்கு நினைவுகொண்டு
வலது கரத்தையும் வெட்டிக்கொடுக்கச் சொல்லுகின்றான். ஆனதி
னாலே அந்தக்கிழவனை கழுத்தைப்பிடித்து தெட்டி வெளியில் தள்
ளாமற்படிக்கு உமது கரத்தை என்னை வெட்டும்படியாகச் சொல்
வது நீதிதானோ வென்ற அமைச்சர்தலைவராகிய முழுமதியென்
னும் முதல் மந்திரியாருரைத்த வாக்கியத்தைக்கேட்ட அரசனானவர்
மந்திரியை நோக்கி கேளுமையா அமைச்சர கோமானே! அந்த
மகானுபாவரை இயாதொன்றுந் தூஷிக்கவேண்டாம். இதோ இந்
தக் கத்தியினால் எனது வலதுகரத்தை வெட்டினால் வெட்டும் இல்
லாமற்போனால் இந்த தரும கோட்டையைக் கடந்து கொலுமுகத்
திற்குப் போமையாவென்று மொழிந்து மந்திரியை யனுப்பிவிட்டு
அருகிலிருந்த காவலனையழைத்து அடேயப்பா காவலதிகாரியே,
இதோ இந்தக் கத்தியினால் எனது வலது கரத்தை புஜத்தனையில்
வெட்டிவிடும் பிள்ளாயென்று வேந்தனானவர் மொழிந்தமொழியைக்
கேட்ட காவலனானவன் தனது இருகரத்தையும் சிரசின்மீது கை
கூப்பி வந்தனஞ்செய்து அந்தோ எங்களண்ணலே கேட்டருளும்.
அமைச்சர் கோமானாகிய முதல் மந்திரியாரே உமதுகரத்தை வெட்டு
வதற்கு மனதில்லாமல் அகன்று வெளியிற் சென்றுவிட்டாரே. ஊழி
யனாகிய யான் வெட்டுவதற் கெவ்வாறு மனங்கொள்வேன் சுவாமி
யென்று காவலனானவன் அஞ்சுதலைகொண்டு நின்றுக்கொண்டிருந்
தனன். இங்ஙனமிருந்துசென்ற முதல் மந்திரியானவர் கோட்
டைக்கு வெளியில் நின்றுக்கொண்டு மன்னவன் வரவையெதிர்ப்பார்
த்துக்கொண்டிருந்தனர்.

இங்ஙனம் நிற்க தருமக்கோட்டை மூன்றாவது வாயலில் இட
து கரமிழந்து வலது கரத்தில் கத்தியைப் பிடித்து நின்றுக்கொண்
டிருக்கின்ற இளவேந்தனை நோக்கி கேளுமையா மகாராஜனே! தரு
மம்புரியவதிலே நீ தான் கருணாவதாரனென்று யான் நினைத்து உமது
வலதுகரத்தைக் கேட்டால், அவனையும் இவனையும் அழைத்து நீ
வெட்டும் நீ வெட்டுமென் றென்னைப் பரிகாசமா செய்கின்றாய்
சொல்லும்பிள்ளாய். நீ இத்தகையவாகிய வாக்கியங்களைச் சொல

னும்போது என்னுடைய மனதானது சந்தேகங் கொள்ளுகின்றது அரசே கவனமாகக் கேளும் அதென்ன சந்தேகமென்றால் நீ இப்பேர்க்கொத்த ஏளனம் செய்யப்பட்டவன் உனது ஆட்களையேவி இந்தக்கிழவனை யடித்துப்புடையுங்களடா வென்று சொன்னாலும் சொல்லுவாய்போல் காண்கின்றதப்பா ஆகையினால் இதோ நானோடிப்போகின்றேன் எனக்கொன்றும் வேண்டமையா வென்று ஆண்டியானவர் அலறி கூக்குரலிட்டோடலுற்றார். அரசனானவர் ஆட்களையேவி அடே அதோ அந்த மகானுபாவரை யாதொன்றும் செய்யாமல் புட்பச் செண்டைப்போல தூக்கிக்கொண்டு வாருங்களப்பாவென்று அரசனானவர் ஆட்களை ஏவினர்.

மன்னன் மொழியைக்கேட்ட காவலர்களெல்லோரும் ஓடோடியுஞ்சென்று ஆண்டிக்கிழவனை மறித்து அணைத்து பந்தைப்போலதூக்கி யெடுத்துக்கொண்டு வந்து கரமிழந்த வேந்தன் முன்னிலையில் நிறுத்தினார்கள். காவலர்களெல்லோரும் கிழவனைச் சூழ்ந்துகொண்டிருக்கும்போது கிழவனானவன் அறத்தாளனை நோக்கி மன்னாதி மன்னர்போற்றும் புண்ணியவானே! கேளும் யான் அனேக தேயங்கள் சென்று உன்னைப்போன்ற மன்னாதி மன்னர்களிடத்திலெல்லாம் விலைமதிக்க வொண்ணாத பொருள்களெல்லாம் பெற்றுக்கொண்டுவந்திருக்கின்றேன். ஆகிலும் உன்னைப்போன்ற புண்ணியவான்கள் உலகத்திலொருவருமில்லை. என்னையுயிர்வதை செய்ய வேண்டுமென்று எண்ணங் கொண்டிருக்கின்றாய் அதையாகிலுஞ் சொல்லும்பிள்ளாய் எனக்கொன்றும் வேண்டாமென்று எல்லாமுதறிவிட்டு யான்தானோடிப்போய்விட்டேனே, ஆட்களையேவி வன் என்னைத் தூக்கிக்கொண்டு வருகச்செய்தாய். நல்லது என்னைக்கொன்றுவிடமனதிருக்குமானால் உனது கரத்திலிருக்கின்ற கத்தியினால் எனது சிரசை வெட்டிவிடும் பிள்ளாயென்று மதியில் மிகுந்த சதிரைவேற்பண்டாரமானவர் கழன்ற மொழியைக்கேட்ட ஆனைபுரத்தரசனாகிய அறத்தாளமகாராஜன் உடல் முழுவதும் கிடுகிடென்று நடுநடுங்கி இருவிழிகளிலும் தாரை தாரையாக முத்துதிர்த்து கேளுமையா பெரியவரே! உம்மை ஏசவும் பேசவும் இடிக்கவும் அடிக்கவும் அடியேன் மனதுகொண்டவனல்லவேபல்ல. எனக்கு இரண்டு கரங்களிருக்கும்போது தேவரீர் இடதுகரம் வேண்டுமென்று கேட்டீர். வலதுகரத்தினால் இடது கரத்தை வெட்டிக் கொடுத்துவிட்டேன் பின்னும் வலதுகரம் வேண்டுமென்றுகேட்டீர். இந்த வலதுகரத்தை அடியேன் எவ்வாறுவெட்டுவேன். பிறரைவெட்டும்படி

யாகச் சொன்னாலும் யாரும்வெட்ட மாட்டேனென்கின்றார்களே. ஐயனே யானென்ன செய்குவேன். பெரியோரானவர்காள் இவ்வடிமையின்மீது கருணைகூர்ந்து வலதுகரங் கேட்டதைப் போலாகவே எனது கால்களைக் கேட்டபோதிலும் வெட்டிக்கொடுக்கின்றேன். இன்னும் எனது கழுத்தைக்கேட்டாலும் இக்ஷணமே வெட்டித்தருகின்றேன். அல்லது என்னுடல் மாமிசத்தைக் கேட்டாலும் அறுத்துத்தருகின்றேன். மற்றப்படிக்கு எனது வலது கரத்தை அடியேனால் வெட்டிக்கொடுக்க முடியவில்லையே வேண்டுமானால் இதோ இந்தகத்தியினாலே என்னுடைய உடலில் உனக்கு எந்தப் பொருள் வேண்டியிருந்தபோதிலும் வெட்டியெடுத்துக்கொள்ளும். சுவாமி இந்தாருங் கத்தி இதனைப் பிடியுமையா வென்று வேந்தன் விளம்பினர்.

அரசனறைந்த வுரையைக்கேட்ட ஆண்டிப் பெரியோரானவர் மன்னுதி மன்னனை நோக்கி கேளும் நீவிர் மென்மேலுந் தருமவானென்றுணர்ந்து உமது வலது கரத்தைக்கேட்டால் ஏதேதோ சாக்குபோக்குகளைக் காட்டிப் பாசாங்கு செய்து வாசாகைங்கரியத்தில் காலத்தைப் போக்கிக்கொண்டிருக்கின்றாயல்லவா? நல்லது நீ தருமத்தில் மிகுந்தவனென்றுனக்கு அறத்தாளனென்கின்ற பட்டப்பெயருண்டாயிருக்கின்றதே. அந்தப்பெயரானது உனக்குத் தகாத பெயரப்பா வென்று பெரியோரறைந்த வாக்கியத்தைக் கேட்ட அரசனவர் கிழவனை நோக்கி கேளுமையா பெரியவரே! எளியோனுக்கு தருமப்பெயராகிய அறத்தாளனென்னும் நாமமானது எனக்குப் பொருந்தா நாமமென்பதற்குக் குறிகளும் அடையாளங்களுங் கண்டுணர்ந்த மகானுபாவரே! அடியேன் ஏதாகிலும் பிழைகள் செய்திருந்தபோதிலும் மன்னிப்பு செய்து அடிமையை யாட்கொண்டு ஆதரித்தருளவேண்டுமையனே யென்று அரசனவருரைத்துவிட்டு நின்றுக்கொண்டிருந்தார்.

அரசனது திருமுகத்தை ஆண்டிப்பெரியோர்கண்டு ஓகோ இவன்மகா உத்தமபுருடனென்று தனது உள்ளத்தில் திடங்கொண்டு இன்னுமிவனை சோதித்தறிய வேண்டுமென் றெண்ணங்கொண்டவராகி அரசனை நோக்கி கேளாயப்பா ஐம்பத்தைந்து தேசத்திற்கும் அதிபதியாகிய மன்னனே! இதுகாலபரியந்தம் நீபுரிந்துவந்ததெல்லாம் தருமமென்று நினையாதே அஃது கருமமேயன்றி தருமமல்லவேயல்ல, அதேதென்றால், இந்த ஞானபுரியென்னும்

பட்டணத்திற்குத் தென்மேற்குதிசையில் ஐந்நூறுகாதத்திற்கு அப்புறம் திருமகளுலாவாநின்ற அளகாபுரி பட்டணத்திற்கும் அதிகமாகிய பட்டாம்புரியென்றொருபட்டணமுண்டு. அந்தப் பட்டணமானது இந்தப்பட்டணத்தைப்போலவே ஐம்பத்தைந்து தேயங்களுக்கும் தாயாகாரமானது, அந்தப் பட்டணத்தை யாளப்பட்ட கட்டழகனென்னுஞ் சக்ரவர்த்திக்கு தவப்புதல்வியாகிய கற்பகவல்லியம்மாளென்றொரு பெண்ணுண்டு. அந்தப் பெண்மணியானவள் பருவகாலமடைந்து மூன்றுத்திங்களாகின்றது. இன்னும் மணமாகவில்லை. அந்த உத்தமப்பெண்ணானவள் ஒருகாத அகல நீளத்திலும் இரண்டு பனைமரவுயரத்திலும் தருமக்கோட்டையொன்று கட்டிமுடித்து, அந்தக் கோட்டைக்கு தொண்ணூற்றாறு வாயல்கள் வைத்து, அந்தக் கோட்டைக்குள்ளாகக் கற்பகவல்லியம்மாள் சதாகாலமும் அன்னமே வீற்றிருந்து இயாவர்வந்து என்னவிரும்பிக் கேட்டபோதிலும் இல்லையென்னாமல் இதுவரையிலுங் கொடுத்துக் கொண்டு வருகின்றாள். இன்னமும் அவள் உயிருடனிருக்கும் பரியந்தமும் நாளுக்குநாள் அதிகமாகிய அறம்புரிவாளேயன்றி உன்னைப்போல இல்லையென்று சொல்லாதவள். அந்த மாதுசிரோன்மணியானவள் புரிகின்ற தருமத்தில் இலட்சத்தில் ஒருபங்காகிலும் நீ செய்யமாட்டாயென்று உணரும்பிள்ளாயென்று, பெரியவருரைத்த மொழியை அறத்தாள மகாராஜன் கேட்டு மனது கலங்கி காத்திலிருந்தகத்தியை தரையிலெறிந்துவிட்டு திடீரென்று பண்டாரத்தின் அடியில் விழுந்து, தனது ஒருகரத்தினாலே பெரியவரின் இருகழலையும் அணைத்துப்பிடித்துக்கொண்டு கேளுஞ்சுவாமி மகானுபாவரே! என்னிலும் மீறி தருமம் செய்யும்படியான பெண்மணியாரோ இருக்கின்றதாகப் பேசினீரே அந்த மாதரசியின் ரூபலாவண்யத்தையும் அடியேனுக்கு நன்கு விளங்கும்பொருட்டாகக் கிஞ்சித் தோதவேண்டுஞ் சுவாமியென்று வேந்தனானவர் வினவிய வுரையைக்கேட்ட பெரியோரானவர் மன்னனைத் தூக்கி நிற்கவைத்துக் கூறுகின்றார்.

கேளாயப்பா மகாராஜனே! திட்டவேணியென்னு மிராஜபத்தினிக்கும் கட்டழகுமகாராஜனுக்கும் தவப்புதல்வியாகப் பிறந்த கற்பகவல்லியம்மாளின் ரூபலாவண்யங்களையும் குணாதிசயங்களையும் சரிவர எடுத்துச் சொல்லவேண்டுமானால் ஆயிரம்நாவைப்படைத்த ஆதிசேடனாலும் முடியாதாகையினாலே என்னுடைய ஒரு நாவினால் அந்த வுத்தமியை வர்ணித்துச்சொல்ல வல்லமையுடையோனாவே

னே? ஆனதினால் தாங்கள் கேட்ட விஷயத்தைப்பற்றி ஐயா சக்ரவர்த்தியாரே! என்னாலியன்றவரையிலு மெடுத்தோதுகின்றேன் கவனமாகக்கேட்டருளுமையா மன்னர் பெருமானே. கற்பகவல்லியம்மாள் ரூபலாவண்யத்தில் முப்பத்திரண்டு லட்சணமும் பொருந்தி வடிவத்தில் பரமனின்தேவி பார்வதியாளுக்கும், விண்டுவின் தேவி திருமகளுக்கும், பிரமன் மனையாளாகிய கலைமகளுக்கும், வள்ளிதெய்வானையர்க்கும், காமன் பெண்டாகிய இரதியின்னாளின் வடிவத்திற்கும் இணையாகவும், இன்னும் ஊர்வசி அரம்பை மேனகை திலோத்தமையென்னும் தேவதாஸிகளின் வடிவத்திற்கும் பதின்மடங்கு அதிகமாகிய புண்ணியவதியின் உடலில் கோமேதகம் நீலம் பவளம் ராகம் மரகதம் மாணிக்கம் முத்து வைடூரியம் வைரம் முதலாகிய புட்பநவரத்தினங்களால் செய்து முடித்த ஜடைபில்லையும் ஜடைநாகமும் ஜடை குச்சியும் மூன்றாம்பிறைக்கிணங்கிய முகத்தில் நெற்றிச்சுட்டியும் சந்திரபிறை சூரியபிறையும் மூவுலகத்திலும் விலைமதிக்கவொண்ணாத முகஜம்புலும், சேடனுலகத்திற்கிணையாகிய பச்சைக்கல் முருகும், எத்திசைகளிலும் ஒளிவீசாநின்ற கத்திரிப்பாவல்களும், சிறு கன்னப்பூவும் ஒப்பற்றபிரகாசமான கொப்புகளினழகும், நவரத்தினங்களாற் சமைத்த மயிர் மாட்டியும், சூரியப்பிரகாசம்போன்ற கம்மலின்னொளிவும், கிள்ளை மூக்கைப்போன்ற நாசியில் இளஞ்சந்திரனுக்கொப்பாகிய மூக்குத்தியும், வியாபாரிகளால் விலைமதிக்க வொண்ணாத புலாக்கின்னொளிவும், இளங்கழுத்தினில் கண்டசரம் முத்துமாலை, மோகனமாலை, இரத்தினமாலை, வைரமாலை, வச்சிரமாலை, பச்சைமாலை, பவழமாலை, முதலாகிய மாலைகளும், மார்பின்மீது சரப்பளி பதக்கங்களும், சிங்கத்திடை போன்ற இடையில் தங்கச்சிலங்கையுடனே ஒட்டியாணமும், இருகரங்களிலும் கங்கணத்தோடா காப்பு கொலுசுகளின் னொளிவும், கோடிசூரியப்பிரகாசம்போன்ற கணையாழிகளினழகும், செந்தாமரைக்கமலம்போன்ற பாதங்களில் கிண்கிணித்தண்டையும், பாதசரம் வெண்மணி கொலுசுகளும், பீலிக்காலாழி மெட்டுகளும் தரித்து, நூறுபாங்கிமார்களை இரவும் பகலும் அருகிலிருந்தே ஏவற்பணிசெய்யும்படியாக நடுவில் வீற்றிருக்கின்ற நாதாநாயகமாகிய கற்பகவல்லியம்மாளின் குணாதிசயங்களெவ்வாறென்னில் தருமகுணத்தில் சந்திரவதியம்மனுக்கும் தமயந்தி தேவிக்கும் சீதாபிராட்டியாருக்கும் துரோபதாதேவிக்கும் அதிகமென்றே சொல்லலாகுந் தவிர, அந்தப்பெண்மணியானவள் புரிகின்ற தருமத்தில் ஆயிரத்தில் ஒருபங்காகிலும் செய்யப்

பட்டவர்கள் அகிலத்திலொருவரு மில்லையென்று சத்தியமாகச் சொல்லுவேன் ஆனதினாலே நீயென்ன தருமவானென் றெண்ணிக் கொண்டாய். போம்போம் பிள்ளாய்! இதோ இந்தப் பொருள்களையும் உனது இடது கரத்தையுமெடுத்துக்கொண்டு போமையாமகாராஜனே யென்று பெரியவருரைத்த உரையைக்கேட்ட இறைவனானவன் பண்டாரத்தை நோக்கிப்பார்த்து, அவரின் வலது கரத்தை இவரின் வலது கரததாற் பிடித்துககொண்டு கேளுமையா பெரியவரே! நீவிருரைத்த அறத்தில்மிதந்த கற்பகவல்லியம்மாளை என்னைப் போன்ற ஆண்பிள்ளைகள் தரிசிக்கவேண்டுமானால் அந்தமாதுசிரோன்மணியின் திருமுகத்தைப்பார்க்கக்கூடுமோ பார்க்கமுடியாதா சொல்லுமையாவென்று அறத்தாள மகாராஜன்கேட்கும்போது ஆண்டிப்பெரியோர் அறைகின்றார்.

கேளாயப்பா மகாராஜனே உன்னைப்போன்ற மன்னாதிமன்னர்களானாலும் சரி, தேவர்களானாலும் சரி, இன்னும் என்னைப்போன்ற ஆண்டிப்பரதேசி, சோகி, ஜங்கமர்களானாலும் சரி, அந்த உத்தமியின் கோட்டையின் வாயில்கள் தொண்ணூற்று ருகையினாலே, அந்தக்கோட்டைக்குள் யாராவது சென்றால் தொண்ணூறு வாயில் வரைக்குந்தான் போகலாமல்லாமல் இன்னும் தேவர், முனிவர், அரக்கர், மானிடர்கள் முதலாகிய யாவராக இருந்தபோதிலும் தொண்ணூற்றொன்றாவது வாயிலுக்குப்போனவர்கள் ஒருவரு மில்லை இனிமேலும் போகப்பட்ட ஆண்பிள்ளைகளுமில்லை. அந்தப்பெண்மணியானவள் தொண்ணூற்றொருவது மாளிகையின் வாசலில் வீற்றிருக்கின்றாள். அவளைப்பார்ப்பதற்கு உன்னாலும் என்னாலும் இன்னும் மற்றவர்களாலும் அசாத்தியமான காரியமாகையினாலே, அதனை விட்டுவிட்டு இவைகளை யெல்லாமெடுத்துக்கொண்டு போமப்பா எனக்கொன்றும் வேண்டாம் என் கரத்தைவிடும் பிள்ளாய் நான் போகின்றேனென்று பண்டாரமானவர் பகர்ந்த வாக்கியத்தைக் கேட்ட வேந்தனானவன் பண்டாரத்தின் கரத்தைத் தனதிரண்டு கண்களிலும் ரோஜாமலரைப்போல ஒத்திக்கொண்டு ஐயா பெரியவரே! உம்மையன்றி அடியேனுக்கு ஆன்றோ ரொருவருமில்லை உமது பாதமேயெனக்குக் கதியல்லால் வேறொன்றும் விரும்பேன். எனது நாடுநகரங்களை யெல்லாம் துரும்பாகநினைத்தேன் உமது பாததூளிதமே அடியேனுக்குக் கரும்பாக வெண்ணங்கொண்டேனாதினாலே இவ்வடிமையை யழைத்துக்கொண்டுபோய் பட்டாம்புரியில் தருமம்புரிகின்ற கற்பகவல்லியம்மாளின் திருமுகத்தை இந்

தச் சேவனுக்குக்காண்பிக்கவேண்டிய கடமை உம்முடைய கடனாகையினாலே இதோ இந்த வேடமாகவே நானுமும்முடன் கூட வந்து விடுகின்றேனையவே யென்னை யழைத்துச்செல்லுஞ் சுவாமி யென்று மன்னவன்கூறிய சொற்களைக்கேட்ட மகா பெரியோராய சத்திரவேற் பண்டாரங் கழறுகின்றார்.

கேளாயப்பா இளவரசனே நீயோ இளமைப்பருவமுடையவன் அதிலும் இன்னும் திருமணமாகாதவன் நீ என்னுடன்கூட வரத்தகாது ஏனென்றால் நீயோ ஐம்பத்தாறு தேசங்கட்கும் அதிபதியாமே பாசனஞ்செய்து வதிறவளர்க்கப் பட்டவனாகையினாலே நீ என்னுடன் கூடவரப்போகாதப்பா வென்று ஆன்றோரறைந்த மொழியைக்கேட்ட அரசனவன் மகானைநோக்கி சுவாமி அடியேனை யாட்கொள்ள வந்த தெய்வமே கேட்டருளும் யானித்தப் பிரபஞ்சவாழ்க்கை விரும்பேனென்று முன்னமே யுரைத்திருக்கின்றேனே அதனை மறந்தவர்போல பின்னும் அடியேனைச் சோதிப்பது உமக்கு அழகாக இருக்கின்றதோ சொல்லுஞ்சுவாமியென்று அரசன் பரிபாவத்தோடுரைப்பதையும அவரது வாக்குசாதுர்யத்தையும் மகானாகிய பெரியவர்கண்டு களிப்படைந்து அரசனை நோக்கிக் கூறுகின்றார்.

கேளும் பிள்ளாய் மகாராஜனே உண்மையாகிய சேதியொன்றோதுகின்றேன் என்னுடன்கூட நீவிர்வருவீரானால் உம்மையழைத்துக்கொண்டுபோய் கற்பகவல்லியம்மாளின் தருமக்கோட்டைக்குள் அழைத்துக்கொண்டுபோய் விட்டுவிடுகின்றேன் உனக்கு சாமர்த்தியமிருக்குமானால் அந்தப் பெண்மணியை நீ காணலாகுமல்லாமற்போனால் திரும்பி வந்துவிடவேண்டியது இதற்குச் சம்மதமானால் நாளைகாலையில் பிரயாணப்பட்டு என்னுடன்கூட வாரும்பிள்ளாய் இல்லாமற்போனால் இங்கனமே இரும்பிள்ளாயென்று ஆண்டித்தலைவருரைத்த மொழியைக்கேட்ட அரசனவர் கேளும் சுவாமி உமது வாக்கியத்தைப்போலவே நாளையதினங் காலையிலும்முடன்கூட இதுவே வேடமாகவந்து விடுகின்றேன் வாரும்மையா நாங்கள் சுத்திசெய்துக்கொண்டு அசனம்புசிக்கலாமென்று பெரியவரையழைத்துக்கொண்டு புனலாடும்மனைக்குச்சென்று ஜலத்தை மொண்டு பெரியவரின் பாதத்தில் கொட்டி செம்பை பூமியில் வைத்துவிட்டு ஒற்றைக்கரத்தினால் பண்டாரத்தின் பாதாரவிந்தங்களைத்தேய்த்து அலம்பி ஜலத்தைகொட்டி சுத்திசெய்து மிகுந்த ஜலத்தை கரத்திற் கொடுத்துவிட்டு தானும் ஒற்றைக் கரத்தை

யிட்டவுடனே, தூதுவர்கள் நான்குபுறங்களிலும் ஓடோடியுஞ் சென்று அரசனுக்கு நேர்ந்த கதியைத் தெரிவித்து, அந்தட்சணமே சகலரையும் அழைத்துக்கொண்டு தருமக்கோட்டைக்கு வந்து எல்லோரும் சேர்ந்தவுடனே அறத்தான மகாராஜாவானவ ரெழுந்து கொலுமுகத்தில் வந்தமர்ந்திருக்கின்ற மந்திரிபிரதானிகளையுங்குடிப் படைகளையும் மற்றுமுள்ளோர்களையும் நோக்கிப் பார்த்துக் கூறுகின்றார்.

கேளுங்களையா இந்த சபையில் வந்தமர்ந்திருக்கின்ற மந்திரி பிரதானிகளே அப்பா குடிமக்களே மற்றுமுள்ள பெரியோர்களே எல்லோரும் கவனமாகக் கேளுங்கள் என்னிலும் அதிகமாக யாரோ வொரு பெண்மணியானவள் தருமம் புரிகின்றாளாம். அந்த மாதரசியைக் கண்டுவருவதற்காக நாளைக்காலையில் இதோ இந்த மகானுபாவருடன் கூட யான் பிரயாணப்பட்டுப் போகப்போகின்றேன் ஆகையினாலே நான் போய்வருமளவும் எனது இராச்சியபாரத்தை இதோ இந்த முதல்மந்திரியாருக்குக் கொடுத்தேன் கொடுத்தேன் கொடுத்தேனென்று அருகிலிருந்த திருமுடியையெடுத்து அருகிலிருந்த முழுமதியென்னும் பெரியவராகிய முதல் மந்திரியின் சிரசில் சூட்டி விட்டு, செங்கோலைக் கரத்தில் கொடுத்து அங்ஙனம் வந்திருக்கப் பட்டவர்கட்கெல்லாம் சந்தனபுட்ப தாம்பூலாதிகள் வழங்கி விடை கொடுத்து அனுப்பிவிட்டு முதல்மந்திரியாரும் பண்டாரப் பெரியோரும் தானுமாக பள்ளிமனைக்குச் சென்று மூவர்களும் மூன்று மஞ்சத்தில் சயனித்து நித்திரைபோய்விட்டார்கள்

கேளீர் அன்பர்களே! ஞானபுரியின் சரித்திரமானது இங்ஙனம் நிற்க பட்டாம்புரியில் பருவகாலமடைந்த கதாநாயகியாகிய கற்பகவல்லியம்மாள் திரண்டபதினொன்றாந் தினங்களில் தாயானவள் உருண்டுவிட்ட வுடனே கட்டழகு மகாராஜாவானவர் கண்டு தேவியின் சவத்தை பனிநீரால் குளிப்பாட்டி மயானத்திற்குக் கொண்டுபோய் அடக்கஞ் செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்டிருந்த அரசனானவர் தனிமையா அரண்மனையிலுலாவிக் கொண்டிருக்கும்போது செவியில் நாராசங் காய்ச்சியூற்றினதைப் போலாக ஆகாயவாணியானவள் கட்டழகு மகாராஜனை நோக்கி ஓ அரசே அரசே சற்றே நிதானி உனது தேவியின் சவத்தை மயானத்திற்குக் கொண்டுபோய் தகனஞ்செய்ய வேண்டாம். அந்தச் சவத்திற்கு வாசனைப்பண்டங்கள் [illegible] பெட்டியில் அடக்கஞ்செய்து

உன்குமாரத்தியின் படுக்கைமனையில் அந்த சவத்தைப் பேழை யுடனே பதனமாக வைத்துக் கொண்டிருப்பாயானால். ஞானபுரி யென்னும் பட்டணத்தை யாளப்பட்ட இளவரசு சக்ரவர்த்தி யாகிய அறத்தாள மகாராஜன் பரதேசிவேடங்கொண்டு இடது காலிழந்து உனது மகளின் தருமக்கோட்டைக்குள் இன்னுஞ் சில நாளைக்குள்ளாக வருகுவார். அந்தப் புண்ணிய சீலனானவர் வந்து திட்டவேணியின் சவத்தைத தனது வலது கரத்தினால் தொடுவார். அந்த மன்னாதிமன்னன் தொட்டவுடனே உன்தேவியானவள் உயிர் பெற்று விழித்து பழையபடியாக எழுந்திருப்பா ளென்று ஆகாய வாணித்தாயானவள் அசரீரி வாக்கியமாகச் சொன்ன மொழியை அரசன் செவியாரக்கேட்டு, போற்றி போற்றியம்மா ஆகாயவாணித் தாயே போற்றியென்று வேந்தனானவன் அண்டத்தைநோக்கி வந்தனஞ்செய்துவிட்டு புத்திரியின் தருமக்கோட்டைக்குச் செல்லும் பொருட்டாகத் தனது அரண்மனையைக்கடந்து நடக்கலாயினர்.

இங்ஙனம் நிற்க திட்டவேணி யென்னும் இராஜ பத்தினி யானவள் இறந்து விடுவதற்குமுன் தினந் தினம் இரவில் நித்திரை புரியுந்தருணத்தில் நடுச்சாமவேளையில் கற்பகவல்லியம்மாளானவள் சொற்பனங்கண்டு மௌனமாக வீற்றிருக்கும்போது, தாயின் சவத்தைச்சுற்றி அனேக பாங்கிப்பெண்கள் அமர்ந்து ஏங்கிக்கொண்டிருக்கும்போது, கட்டழகு மகாராஜனானவர்வந்து, மனையாளின் சவத்தைக்கண்டு மனதுகலங்கி மாளிகைக்குள்ளாகப் புகுந்துப் போகும்போது, புத்திரியாகிய கற்பகவல்லியம்மாள்; தந்தையைக் கண்டு வந்தனஞ்செய்து இரண்டு கரத்தையும் பிடித்தழைத்துக் கொண்டு பள்ளிமனைக்கிட்டுக் கொண்டுபோய் தந்தையை மஞ்சத்திலமர்த்தித் தவச்சீலியானவள் கூறுகின்றாள்.

கேளுமென்னை யருந்தவஞ்செய்துபெற்ற அண்ணலே கேட்டருள் வீராக. நேற்றையதின மிரவுபதினைந்து நாழிகைக்கு யானொரு கனவுகண்டேன் அந்தக் கனவின் சந்தேகமானதெனக் கொன்றுந் தோன்றவில்லை. அதனை யிப்போதெடுத் தோதுகின்றேன் செவி கொடுத்துக்கேட்டு அதனது பலாபலனைத் தெரிவிக்க வேண்டுமையனே யென்று கதா நாயகமாகிய கற்பகவல்லியம்மாள் பிதாவை நோக்கி கேளுமையா தந்தையே! எனது நித்திரைவேளையில் ஆதி ஜெகதீசனைப்போல யாரோவொருபண்டாரப் பெரியோரானவர் சிவச்சின்னங்களை யணிந்துகொண்டு ஜடாமகுடதாரியாக வனது

சிரத்தின் புறத்தில் வந்து நின்று, அந்த மகானுனவர் சொன்னசேதி யாவதென்னவென்றால். கேளும்மோதயே கற்பகவல்லியே நாளையகாலையில் உனது தாயானவள மரித்துப்போய்விடுவாள். அவளிறந்ததின் பின்பு அவளின் சவத்தை பொரிவனத்திற் கொண்டு போகாமலும், புதைக்காமலும், தகனம் செய்யாமலும். அந்தச்சவத்திற்கு மணப்பொடிகள் தூவி பேழையில் அடக்கஞ்செய்து உனது பள்ளிமனையில் பதனமாகவைத்து வைப்பாயானால் ஞானபுரியெனனும் பட்டணத்தையாளப்பட்ட இளவரசோனுகிய அறத்தாளமகாராஜனென்பவர் இன்னுஞ் சிலநாளைக்குள்ளாக இவ்வனம் வருகுவர் அன்னவர்வந்து உனது தாயின் சவத்தைத் தனது வலது கரத்தால்தொடுவாரானால் அந்தக்ஷணமே உன் தாயானவள் உயிர்பெற்றுவிழித்தெழுந்திருப்பாள். அதிலும் உன்னுடைய தாயாருக்கு உயிர்கொடுத் தெழுப்பப்பட்டவன் எவனாக இருந்தபோதிலும் அன்னவனையே நீ திருமணம் புரியவேண்டியதென்று, ஆதிபாமேசுரன் சொன்னதைப்போல் சொற்பனங்கண்டு விழித்துத் திடுக்கென்றெழுந்து பார்க்கும்போது, எனது பள்ளிமனையிலொருவரையுங் காணுததினுலே மௌனமாக மஞ்சத்திலமர்ந்துகொண்டிருந்து, பொழுது விடிந்தவுடனே எழுந்து வெளியில்வந்து பார்க்கும்போது, என் தயாரானவள் மரணமாகி விழுந்துகிடக்கவும், பாங்கிப்பெண்களெல்லாம் எனதன்னையைச் சூழ்ந்துகொண்டு ஏங்கிப் புலம்பிக் கொண்டிருப்பதைக்கண்டு உமக்கு சேதியனுப்பினேன். தாங்களும் வந்து சேர்ந்தீராகையினாலே யான் கண்ட சொற்பனத்திற்கு என்னசொல்லுகின்றீர் சொல்லுமையா பிதாவே யென்று கதாநாயகமாகிய கற்பகவல்லியம்மா ளோதிநின்றனள்.

மகனுரைத்த சேதியைக்கேட்ட மன்னனானவர், தனக்கு ஆகாயவாணியுரைத்த சேதியையும் குமாரத்தி கனவுகண்டதையும் நினைந்து இது வென்னமோ புதுமையாக இருக்கின்றது. நமது மனைவியின் சவத்தையெடுத்துத் தகனஞ்செய்ய வேண்டாமென்று நமக்கும் ஆகாயவாணிக் கூறாநுரைத்ததைப்போலவே, நமது புத்திரியும் சொற்பனங் கண்டதாகக்கூறுகின்றாள் நல்லது இந்தசவத்தை அழும்புசெய்யாமல் மணப்பண்டங்களினல் இதனைச் சுசிகரஞ்செய்துபேழையிலடைத்துப் பள்ளிமனையில் தானே வைத்துவிடவேண்டுமென்று நினைவுகொண்டு சற்றுநேரம் மௌனமாக வீற்றிருந்து தொன்னுறுமது வாரிதிக்கு வந்து, அவ்வனமிருக்கப்பட்ட காலனிடேயன் அப்பாவாவனே நீ அதிக சுருக்காகச்சென்று நமது

முதல்மந்திரியாரை யானழைப்பதாக அழைத்துக்கொண்டு வாரும் பிள்ளாயென்று கட்டளையிட்டருளின வுடனே, தூதுவனானவன் தருமக்கோட்டையைக்கடந்து ஓடோடியுஞ்சென்று கொலுமுகத்திற்குவந்து முதல்மந்திரியைக்கண்டு வந்தனஞ்செய்து கேளுமையா சுவாமி மந்திரிபெருமானே! நமது மகாராஜாவானவர் தருமக்கோட்டையில் தொண்ணூறாவது வாயிலில் நின்றுக்கொண்டிருக்கின்றார். உம்மையதிக சுருக்காக அழைத்துக்கொண்டு வருகச்சொன்னார் வாருமையா வென்று காவலனானவன் கூறிய மொழியைக்கேட்ட அமைச்சர் கோமானானவர், திடீரென்றெழுந்து தனது புரவியைக் கொண்டுவரச்செய்து அதன்மீதி லாரோகணித்து மற்றைய மந்திரிமார்கட்குக் கட்டுதிட்டஞ் செய்துவிட்டுப் புரவியைத்தூண்டி கொலுமண்டபத்தைக் கடந்து வெளியில்வந்து வாயுவேகமாகப் புரவியை யோட்டிக்கொண்டு, தருமக்கோட்டைக்குள்ளாக வந்து புகுந்து புரவியைவிட்டிறங்கி பாதசாரியாக நடந்து தொண்ணூறாவது வாயிலுக்கு வந்து மன்னனைக்கண்டுவந்தனம் செய்துவிட்டு முதல் மந்திரியானவர் மௌனமாக நின்றுக்கொண்டிருந்தார்.

முதல் மந்திரியைக்கண்ட வேந்தனானவர் மந்திரியின் கரத்தைப்பிடித்துக்கொண்டு கேளாயப்பா அமைச்சர்தலைவனே! எனது மனைவியானவளிறந்து விட்டாளல்லவா அன்னவளின் சவத்தை மயானத்திற்கெடுத்தேகாமலும் அதனைப்பாழ்படுத்தாமலும் அந்தத்தூலத்திற்கு வாசமுள்ள பனிநீர் முதலாகிய பண்டங்கள் தூவி பதனப்படுத்தி பேழையிலடக்கஞ்செய்து வைக்கவேண்டியதினாலே உன்னையழைத்தனன் ஆகையினாலே முன்னதாக அந்தக்காரியத்தைப்பாரும் பிள்ளாயென்று அரசனுரைத்த வுரையைக்கேட்ட அமைச்சர் பெருமானானவன் அருகிலிருந்த காவலனை யழைத்து அப்பாகாவலனே நீ சென்று அத்தரும் புனுகும் சவ்வாதும் பனிநீருங் கொண்டுவாரும் பிள்ளாயென்று கட்டளையிட்டருளின வுடனே, காவலனானவன் ஓடோடியுஞ்சென்று மணப்பொருள் வியாபாரியைக்கண்டு இராஜ சமூகத்திறகு வேண்டிய மணப்பொருள்களைப் பெற்றுக்கொண்டுவந்து முதல் மந்திரியாரிடத்தில் கொடுத்து விட்டு நின்றுக்கொண்டிருக்கும்போது, மந்திரித்தலைவரானவர் அந்தப்பொருள்களை யெல்லாம் பாங்கிப் பெண்களிடத்தில் கொடுத்தெடுத்துக்கொண்டு வருகச்செய்து, இராஜபத்தினியாரின் சவத்தண்டை சென்று ஆங்கு ஏங்கிக்கொண்டிருக்கின்ற பெண்மக்களை யெல்லாம் விலக்கி வாசனைப் பண்டங்களை யெல்லாம் வாங்கிவைத்

துக்கொண்டு, அந்த மனைக்குள்ளாக வொருவரையுஞ் சேர்க்காமல் மந்திரியானவர் அந்தமனையின் கபாடத்தைச் சாற்றிக்கொண்டு தாயாகிய இராஜபத்தினியினது ஆடைகளை யெல்லாங் களைந்து புத்திரப்பேறுகவும் பெற்றதந்தையைப் போன்ற ஆயுர்வேத பண்டிதராகவும் நிர்மானஞ்செய்துக்கொண்டு வாசனைப் பண்டங்களை யெல்லாம் அந்த தூலதேகத்தில் எங்கு தடவவேண்டுமோ ஆங்காங்குதடவி நவத்துவாரங்களின் ஊற்றுநாற்றமானது விலங்கியோடும்படியாக வாசனைப்பண்டங்களைப் பூசி கற்பகோடி காலவரைக்கும் இந்தத்தூலமானது அழியாதிருக்கும் பொருட்டாக அமைச்சர் பெருமானானவர் பரிகாரஞ்செய்துவிட்டு, அன்னையர்க்கு ஆடையையுடுத்தி பழையபடியாகவே கட்டிவிட்டு பேழையின் மூடியை மூடித் தாள் போட்டு சீல் முத்திரைபோட்டுக் கொண்டு சவமனைக் கபாடத்தைத்திறந்து வெளியில்வந்து ஆங்கிருக்கப்பட்ட பாங்கிமார்களையழைத்து அடீ சேடிப்பெண்களா இந்த சவப்பெட்டியையெடுத்துக்கொண்டுபோய் கற்பகவல்லியம்மாளின் பள்ளிமனையிலிருக்கின்ற பஞ்சணையின்மீது வைத்துவிட்டு வாருங்கள் பெண்களாவென்று முதல் மந்திரியானவர் விளம்பினர்.

அமைச்சர் கோமானறைந்த மொழியைக்கேட்டபாங்கிப்பெண்களெல்லோரும் திடீரென்றெழுந்து சவமனைக்குள்ளாகப்புகுந்து, அம்மணின்பேழையை யெடுத்துக்கொண்டு வந்து கற்பகவல்லியம்மாளின் பள்ளிமனையில் பஞ்சணை மெத்தையின்மீது வைத்துவிட்டு கபாடத்தைச்சாற்றி முத்திரைபோட்டுக்கொண்டு சாவியை முதல் மந்திரியிடங் கொடுத்துவிட்டுப், பாங்கிமார்கள் தங்கள் காரியங்களில் மனதூன்றினவராகி, இராஜபத்தினியார் இறந்த வியாகூலத்தொடுங்கூடிச் சென்றுவிட்டனர், தாதிப்பெண்கள் சாவியைக் கொடுத்துவிட்டுச் சென்றுவிட்டவுடனே, முதல்மந்திரியானவர் அந்தச்சாவியைக் கரத்தில் பிடித்துக்கொண்டு, தொண்ணூறாவது வாயிலுக்கு வந்து மன்னனைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்து சாவியைக்கரத்தில் கொடுத்துக்கூறுகின்றனர்.

கேளும் சுவாமி மகாராஜனே நீவிருரைத்த வாக்கியம் போலாகவே உமது தேவியாராகிய எனதன்னையைப் பேழையிலடக்கஞ்செய்து கற்பகவல்லியம்மாளின் பள்ளிமனையில் பஞ்சணைமெத்தையின்மீது வைத்துவிட்டு அந்த மனையின் கபாடத்தைச்சாற்றி தாள் முத்திரை போட்டுக்கொண்டு சாவியைக் கொண்டுவந்து உமதுகரத்

தில் கொடுத்துவிட்டேன் சோதனைவேண்டுமென்றால் நீவிர்போய் பார்த்துக்கொள்ளும் சுவாமி இன்னும் இவ்வடியேனுக்கு ஏதேனும் பணிகளிருந்தால் தெரிவிப்பீரானால் முடிவுசெய்து தருகின்றேன் கூறும் மகாராஜனே யென்று முதல் மந்திரியானவர் அமைச்சர் முன்னோன் கரத்தில் சாவியைக் கொடுத்துவிட்டுரைத்த வாக்கியத் தைக்கேட்ட அரசர்பெருமானானவர் போய்வாரும் பிள்ளாயென்று மந்திரிக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு சாவியைப் பெற்றுக கொண்டு மகளாகிய தருமபுத்திரியிருக்கின்ற மாளிகைக்குச்சென்று அருந்தவப் புதல்வியையழைத்து அரசனானவர் திருவாய் மலர்ந் தருளுகின்றார்.

கேளாயம்மணி கற்பகவல்லித்தாயே நீ கண்ட சொற்பனத் தைப்போலவே உனது தாயாரைப்பேழையிலடக்கஞ்செய்து உனது பள்ளிமலையில் நீ துயிலும் பஞ்சணை மெத்தையின்மீது வைத்து விட்டு அந்தப்பள்ளிமனைக் கபாடத்தைச் சாற்றி தாளிட்டு சீல்முத் திரைபோட்டுக்கொண்டு இதோ சாவியை யெடுத்துக்கொண்டு வந் தேன் இந்தாரும் இதனைப் பெற்றுக்கொள்ளுமம்மா வென்று தனது கரத்திலிருந்த சாவியை மகளிடத்தில் கொடுத்துவிட்டு சக்ர வர்த்தியானவர் புத்திரியைநோக்கி கேளாயம்மணி யெங்கள் குலம் விளங்கவேண்டி யவதரித்த திருவிளக்கே பற்பல பொருள்களையுங் கண்டுகளிகொள்ளும்படியான எனது கண்ணின்மணியே கண்ணே எனது அருந்தவப்பெண்ணே மாமலையுறுந்தேனே தேவசோவின் பாலே முக்கனியே சர்க்கரையே கற்கண்டே செழும்பாகே அடி யென்னம்மணியே என்னுச்சியே உனது தாயின் சவத்தை பதன மாகப்பார்த்துக்கொள்ளும் எல்லாம் பரம்பொருளின் திருக்கருணை யேயன்றி நம்மால் ஒன்றும் நடப்பதில்லை யாகையினாலே அடி யென் னைப்பெற்ற செல்வமே கேளும் நீ பருவகாலமடைந்தது முதற் கொண்டு இதுகாலபரியந்தம் உனக்குத்துணையாக உனது தாயான வள் இருந்தாள் இப்போது அன்னவளும் நம்மைவெறுத்து யோக நித்திரையிலிருக்கின்றாளானதாலும் நீயோ கல்வியிற் சிறந்த வல்ல மைமதியுடைய பெண்மணி யாகையினாலே உனக்கு யானென்ன மதியை யெடுத்துப் புடைக்கப்போகின்றேன். கேளுமம்மா தாயே நான்போய்வருகின்றேன் அறநெறியை நிலைநாட்டி உனது தாயா ரானவள் உயிர்பெற் றெழுந்திருக்கும்படியாகக் கடவுளைக்கோறி நோன்பியற்றிக்கொண்டு வருகப்பட்ட யாசகர்கட்கு வேண்டும்பொ ருளை யளித்துக்கொண்டு வாருந்தாயே இங்ஙனம் எந்தவேளையிலா

கற்பகவல்லித்தாயே ஆயினும நான் இங்கு வந்து நெடுநேரமான தால் யான் கொலுக்கூடத்திற்குச் செல்லவேண்டியதாயிருக்கிறதா கையால் இதோ நான் போய் வருகிறேன் என்னம்மணி பத்திரமாய் ஆருஷ்டித்துவா என்று பன்முறை பகர்ந்து புத்திரியின் அரண் மனையைக்கடந்து வெளியில் வந்து தொண்ணூற்றாறுவது வாயலில் வந்து நின்றுக்கொண்டு, அந்தத்தருமக்கோட்டைக் காவலரை யும் அழைத்து, எனது புதல்விக்கு இயாதொரு தீங்கும் நேரிடா மல் உங்கள் வயிற்றிலிருக்குங் கருவைப்போலக் காப்பதுமன்றி, கற்பகவல்லி யம்மாளிருக்கின்ற தொண்ணூற்றாறுவது மனைக்கு எந்த ஆண்பிள்ளைகளையும் விடாமற்படிக்குப் பாதுகாத்து இரட் சிப்பது உங்கள் கடனைகையினலே, யானென்ன சொல்ல வேண்டிய திருக்கின்றது. இதோ யான் போய் வருகின்றேனென்று அரசனனை வர் தருமக்கோட்டையைக் கடந்து, வெளிப்பட்டுக் காவலர்கள் புடைசூழும்படியாக நடையாய் நடந்து சகலருந்தயரங்கொண்ட மர்ந்திருக்கின்ற கொலுமண்டபத்திற்கு வந்து, ஆங்கிருக்கப்பட்ட மந்திரி பிரதானி முதலாகிய சகலர்கட்கும் போகவிடைகொடுத் தனுப்பிவிட்டு, தானுங் கொலுமண்டபத்தைக்கடந்து, அரண்மனைக் குள்ளாக வந்து புகுந்து, பாலும்பழமுமுண்டு, அன்றிரவு கழித்து பொழுது விடிந்தவுடனே யெழுந்து காலைக்கடனதிகளை முடித்துக் கொண்டு வழிபடுங்கடவுளை வணங்கித்தொழுது போற்றி செய்து, முக்கனியும் சருக்கரையும் பாலுமுண்டெழுந்து ஆடையாபரணங் களணிந்துக்கொண்டு, கொலுக்கூடத்திற்கு வந்து சிம்மாதனத்தி லமர்ந்து மந்திரிமார்களுடன் கலந்து கட்டழகு மகாராஜாவானவர் தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தனர்.

கற்பகவல்லியம்மாளின் தந்தை சென்றபின்னர் தன் பாங்கி களிற் றலைமைபூண்டொழுகும் தலைப்பாங்கியை யழைத்து அடி பெண்ணே தலைப்பாங்கியாகிய மரகதவல்லியே! நீ இக்கணமே நமது குலகுருவாகிய அப்பண்ணு தீக்ஷதர் இல்லம் ஏகி, அவரை யானழைத்துக்கொண்டுவரச் சொன்னதாகக்கூறி, இங்ஙனம்உடனே அழைத்துவரவேண்டும் அம்மா மரகதவல்லியே என்று உத்தரவு செய்தனள். அவ்வுத்தரவை அத்தலைப்பாங்கி சிரமேற்றாங்கி அந் தக்ஷணமே அப்பண்ணு தீக்ஷதர் இல்லம் ஏகி, கட்டழகு மகாராஜ னின் புதல்வியாகிய கற்பகவல்லியம்மாள் தங்களை இயாதுகாரண மாகவோ உடனே அழைத்துவரச் சொன்னர்களென்ற சொல்லைக்

கேட்டவுடனே அத்தீக்ஷதர் புறப்பட்டு வந்து கற்பகவல்லியம்மாளிடம் வந்து சேர்ந்தனர்.

அவ்வாறு தம்பியாங்கு சென்றழைத்த வுடனே யாதொரு தடையுமின்றி வந்த தன் ஆசாரியரைக் கண்ட க்ஷணமே பிரம்மானந்தங்கொண்டவளாய், அன்னவர் திருவடியில் வீழ்ந்து நமஸ்கரித்து ஆசீர்வதிக்கபெற்றதும் அவருக்கோர் ஆசனங்கொடுத்து அதிலமரச்செய்து, பாதோதகங்கொண்டு வரும்படிப் பாங்கிகளுக்காக்ஞாபிக்க அதை அவர்கள் கொண்டுவந்தவுடன் பனிநீரால் அபிஷேகம் புரிந்து பலமலர்களாலும் அர்ச்சித்து சுவாமி முந்திசெப்பிய சோமவார விரதத்தின் பலாபலன்களையும், பூஜாமுறைகளையும் அடியாளுக்கு இன்னோர் கால் தெளிவாகவும் விசிதமாகவும் எடுத்தோதும்படி கேட்டுக்கொள்வதைப்பற்றி, மனதில் கிஞ்சித்தும் ஆயாசம் வையாமல் அருள்புரியும்படி கேட்டுக்கொள்ளுகின்றனன் என்று, கற்பகவல்லியம்மாள் வணங்கிக்கேட்டுக்கொண்டனள்; அப்பொழுது அவ்வாசாரியர் பிரம்மானந்த முடையவராய் அம்மணி கற்பகவல்லித் தாயே! மற்றொன்றுங்கேளாமல் அகண்டாகார சச்சிதானந்தசொரூபியாகிய பரமேஸ்வரரது சோமவாரவிரதத்தின் பலன்களையும் அனுஷ்டிக்கும் முறைமையினையும் நீ கேட்ட விஷயத்தில் அவற்றைச் சொல்வதற்கு அதிக ஆவலுடையவனாயிருப்பனே யல்லது மனவெறுப்பென்பது கிஞ்சித்துங்கிடையா தம்மணி ஆகையால் சோமவார விரதத்தின் பலன்களையும், பூஜாமுறைகளையும் புகல ஆரம்பிக்கிறேன் சற்றேசெவிசாய்ப்பாயாக. கேளாயம்மணி பட்டாம்புரி யென்னும் பட்டணத்தை யரசாளா நின்ற கட்டழகு மகாராஜனின் புதல்வியாகிய கற்பகவல்லித்தாயே! வேதங்களிலும், சைவாகமங்களிலும் சொல்லப்படுகிற சோமவாரத்திற் பொருந்தி வருகிற பிரதோஷந்தோறும், மேருவை வில்லாகவுடைய பரமசிவத்தையும், கன்னியாகிய அம்பிகையாரையும் அரசும் வெம்புமிணைந்து ஓங்கி வளர்ந்த விருக்ஷத்தினடியில், இரண்டு கும்பகலசங்கள் ஆவாஹனஞ் செய்து, ஆகம விதிதவறாமல் மணமலர்களால் ஆராதனை செய்பவர்கள், துன்பமென்கின்ற பெரிய சமுத்திரத்தின் கரையைக்கடந்து இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் அனுபவிப்பார்களென்றும்; இல்வாழ்க்கையின் உரிமையைப் பூணாதவர்களும், கிரமமாக இல்வாழ்க்கையைப் பூண்டவர்களும், பழமையாகிய அந்த இல்வாழ்க்கையில் தத்தம் கணவருடன் வாழுமாதர்களும், கணவர்களை யிழந்து துயருறும் மாதர்களும், பொருந்திய அந்த இல்வாழ்க்கையை நீங்கிப் பரம

சிவனது சோமவார பூசனையே செய்வார்களானால், இவ்வுலகத்தி னிடத்தில் துன்பங்கள் நீங்கி அவரவர்கள் மனதில் கருதிய பொருள் களெல்லாம் நினைவின்படி அடையப்பெறுவரென்றும், பிரதி சோம வாரத்திலும் பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, வெறுப் பின்றி ஆகாரமுதலானவைகளை நீக்கி, மௌனமாய்ப் புதிதையாய் மலர்களை ஆய்ந்து கொண்டுவந்து, பரமசிவனுடன் பார்வதிதேவி யாரையும் சைவாகமவிதி தவறாமற் பூசைசெய்து, ஆரிய பிராமணர் களுக்குச் சந்தோஷத்துடன் அன்னமுங் கொடுத்து, பரமசிவனை ஆராதித்துத் துதி செய்து, ஈசனே! எனக்குற்ற துணையே!

அரஹரசம்போ அந்திவண்ணா
ஆலமுதுண்ட வாலமர்கடவுளே
இடபமூர்ந்தன்பர்க்க கிரங்குஞ்சர்வேசா
ஈமத்தாடியே யிணையிலாச்செல்வமே
உள்ளன்போர்க்கருள் உமாமஹேசா
ஊர்த்துவநடம்புரி யூழித்தேவா
எங்கும்புகழ்பெறு மெண்டோளரசே
ஏழைக்கருள்புரி யேறூர்பாகா
ஐங்கணையெரித்த வைம்முகநாதா
ஒளிவளர்விளக்கே ஒற்றியூர்த்தியாகா
ஓதுநால்வேதமு முளமகிழ்போதா
ஔவைக்களித்தவா றருள்மஹாதேவனே,

தேவரீருடைய திருவருளையே விரும்புகின்றேனென்று பலவாறு பிரார்த்தித்து, நல்ல விரதத்தையும் நிறைவேற்றினால், நிலைபெற்ற அவரது விசேடத்தால் மாதுசிரோன்மணியே! உன்னுடைய விபத் துகளெல்லாம் நீங்கும், இஃதன்றி மஞ்சளுடன் சந்தனமும் மலர் களும் சாத்தினால் பலவளங்கள் உண்டாகும் கெடுதலற்ற தூபங் கொடுத்தால் சரீரம் நல்லவாசனை கமழ்ந்துகொண்டிருக்கும். குறை வுபடாத தீபங்கொடுத்தால் அழகுண்டாகும். அன்னம் நிவேதித் தால் ஆகாரம் உண்டாகும், பாக்கும் வெற்றிலையும் நிவேதித்தால் பதுமாசனியான திருமகள் நிவாசங்கிடைக்கும் பஞ்சாக்ஷரஞ் செபித்தால் அஷ்டாமாயோகஞ் சித்தியாகும் சிவயாகஞ்செய்து பூர்ணாகுதியமைத்தால் இஷ்டசித்திகள் எளிதிற்கைகூடும் மகிழ்ச்சி யுடன் அந்தணர்களுக்கு அன்னங்கொடுத்தால் அதனால் குறைவற்ற மேம்பாட்டினையுடைய தேவர்களெல்லாம் மிகுந்த களிப்பை யடை வார்கள். ஆதலால் என் சொல்தவறாமல் நான் சொல்லிய பிரகாரம்

இளந்திங்கட்கொழுந்து பொருந்திய செஞ்சடையையுடைய பரம சிவனைப் பார்வதியாருடன் நூற்றெட்டு சோமவாரம் ஆராதனை செய்து, இப்பொழுது செய்துக்கொண்டு வருவதுபோல் நடத்திக் கொண்டு வருவையாயின், உனக்குப் பிரமனால் நேர்ந்திருக்கும் நீங்கா அபாயமாகிய வைதவ்யம் நீங்கி, எந்நாளுந் திருமாங்கல்யந் தரித்து சுகஜீவியாய் மேம்பாடான சம்பத்தும் பெற்றுவாழ்ந்திருக்கக்கடவா யென்று, கற்பகவல்லியம்மாளின் குலகுருவாகிய அப்பண்ணுதீக்ஷ தர் புகன்றனர் அதைக் கற்பகவல்லியம்மாள் தன் சிரமேற்றாங்கி, தருமக்கோட்டைக்கு இரண்டுமைல் தூரத்திலுள்ளப் அரசும்வேம்பு மிணைந்து ஓங்கிவளர்ந்த விருக்ஷத்தினடியில், இரண்டு கலசங்களை அமர்த்தி பார்வதி பரமேஸ்வரராகப் பாவனை செய்துகொண்டு நூல்சுற்றி, சிரசில் நாரிகேளம் அமைத்து, சுவாமி கலசத்திற்குச் சந்தனமும் புஷ்பமும், அம்மன்கலசத்திற்குக் காதோலை கரிமணி மஞ்சள் குங்கமமும் புஷ்பமும் அலங்காரஞ்செய்து, தன் ஆசாரி யரையும் அருகில் வைத்துக்கொண்டு, அப்போதைக்கப்போது ஆங்காங்கு நேரிடும் சந்தேகங்களைத் தெளிவித்துக்கொண்டே மேற் கண்ட சோமவார விரதத்தை அநுஷ்டித்துக்கொண்டே வருவது மன்றி, கற்பகவல்லியம்மாள் மறுதினம் சோமவாரமாதலால் முன் குறிப்பாகவே, இன்றையதினமே பணிவிடைக் காரர்களைக்கொண்டு வேண்டுவெனவற்றை யெல்லாம் சேகரித்து தயார்செய்து வைத் துக்கொண்டு, அன்று பொழுது எப்பொழுது செல்லப்போகிறது, சோமவாரம் எப்பொழுது உதயமாகப் போகிறதென்று சரியான நித்திரைகொள்ளாமல் சிறிதுநேரம் நித்திரைபுரிவதும், சிறிதுநேரம் விழிப்பதுமாக அன்றிரவைக் கழித்து, சூரியோதயமானவுடனே காலைக்கடன் முடித்து தந்தசுத்திசெய்து, பாங்கிகளால் தயார் செய்து வைக்கப்பட்ட ஸ்நான அறைக்குட்சென்று, ஸ்நானபானாதி கள் முடித்து, பட்டுபீதாம்பர மணிந்து, நைவேதனத்துக்குரிய பல வகைக் கனிவர்க்கங்களை கொண்டுவரச் செய்து, பரமேசுவரனையும் பார்வதிதேவியை கும்பகலசங்களால் ஆவாஹனப்படுத்தி, பரிமள கந்தபுஷ்பம் வஸ்திராபரணங்களால் அலங்கரிப்பித்து, சோடசோப சாரமாகத்தமது குலகுருவாகிய அப்பண்ணுதீக்ஷதர் கற்பித்த பல மந்திரங்களாலர்ச்சித்து, முறைதவறுமல் வரிசைக்கிரமமாக, நூற் றெட்டு சோமவாரமும் தூபதீபாராதனஞ்செய்து, பிராமணனுக்கு அன்னமளித்து, முப்பத்திரண்டு அறமும் புரிந்து, பின்பு தமது குருவுக்கு தக்ஷிணை தாம்பூலம்வேண்டும் பண்டுபலாதிகளைக் கொடுத்

தனுப்பிவிட்டு, தானும் தனக்கு வேண்டியமட்டும் பண்டுபலாதிகளைப்புசித்துத் தன் முந்தானையைப்போட்டு அயர்ந்து சிவசிவா என்னும் மந்திரத்தைக் கைவிடாது ஸ்மரித்துக்கொண்டே நித்திரையின்றி படுத்துக்கொண்டிருப்பள்.

இவ்வாறு நூற்றேழு சோமவாரங்களும் தமது குலகுருவாகிய அப்பண்ணு தீக்ஷிதரை, கற்பகவல்லியம்மாள் தந்தைசொல் தவறாமல் தன் அருகிலமர்த்திக்கொண்டே, சோமவார விரதம் அநுஷ்டித்துவந்து நூற்றெட்டாஞ் சோமவாரதினம் உதயத்திலெழுந்து காலைக்கடன் முடித்து, ஸ்நாநபானாதிகள் செய்து, பட்டுபீதாம்பர மணிந்து, சிவபூசை முடித்துக்கொண்டு, தன் ஆசாரியரை அருகிலிருக்கச் செய்து, பரமேசுவரனையும் பார்வதி தேவியையும், கும்பகலசத்தில் ஆவாஹனப் படுத்தி, பலவித புட்பங்களாலர்ச்சித்து வழக்கம்போல் பண்டுபலாதிகளை நைவேதனஞ்செய்து தூபதீபாராதனை புரியுஞ் சமயத்தில், அன்பர்க்கிரங்கி யாதரிக்கும் அநாதிமலமுத்தனாகிய பரமேஸ்வரன் பார்வதிதேவியை வாமபாகத்திலமர்த்திக்கொண்டு, ரிடபவாகன ரூடராய் அந்தரப் பிராப்தமாகி, அம்மணி கற்பகவல்லித்தாயே! நீ இயாதுகாரணமாக அதிக பயபக்தியுடனேயும் சிரமையுடனேயும் முறைபிறழாது சோமவார விரத பூசனை புரிந்து வந்தனையே அதற்கே நான் மிகவும் திருப்தியடைந்தேன். இக்கடல் சூழ்ந்த பெரிய உலகின்கண் பெண்பாலர் இச்சோமவார விரதத்தை முறைபிறழாமலும் நெறிதவறாமலும் பூசைபுரிதல் மிகவும் அருமை. நீ அன்போடு அநுஷ்டித்துவந்த விரதத்தினை மெச்சினேம். ஆகையால் நீ வேண்டும் வரம் கேளென்று பரமசிவம் திருவாய் மலர்ந்தருளினபோது, சுவாமி! அடியாள் உய்ந்தேன் உய்ந்தேன் என்று பகன்று

(தேவாரம்.)

கற்றவர்களுண்ணுங் கனியேபோற்றி,
கழலடைந்தார்செல்லுங் கதியேபோற்றி
அற்றவர்கட்காரமுத மானாய்போற்றி
அல்லலறுத்தடியேனை யாண்டாய்போற்றி
மற்றொருவரொப்பில்லா மைந்தாபோற்றி
வானவர்கள்போற்று மருந்தேபோற்றி
செற்றவர்தம்புரிமெரித்த சிவனேபோற்றி
திருமூலத்தானனே போற்றிபோற்றி.

என்று தேவாரம்பாடிப் போற்றி, பன்முறை ஏத்தி, தன்சிரசைத் தாழ்த்தி, தன் அங்கமுழுதும் நிலத்திற் படும்படி வீழ்த்தி, சடாமகுடதாரியாய் வீற்றிராநின்ற பரமசிவத்தையும் பார்வதிதேவியையும் கண்டதும் ஆனந்தக் கடலிலாழ்ந்தவளாய், மெய்மறந்து, கண்திறவாமலே சிரமேற்கைகூப்பி, என்னப்பனே, என்னம்மையே என் மனக்குறையைத் தீர்க்கவந்த கடவுளே போற்றி! போற்றி! எனக்கு நேரிட்டிருக்கும் வைதவ்யம் நீங்கி அடியாளுக்குத் திருமாங்கல்யப் பிச்சைதரவேண்டும் என்று கற்பகவல்லியம்மாள் கேட்டவுடனே, தந்தேன் தந்தேன் எனப்பரமசிவம் திருவாய்மலர்ந்தருளவும் தேவர்கள் புட்பமாரி|பொழிந்தனர். உடனே ரிடபவாகன ரூடராய் கற்பகவல்லியம்மாள் முன் பிரத்தியக்ஷமான பரமேஸ்வரனும் பார்வதிதேவியும் அந்தரத்தியான மாயினர்.

கற்பகவல்லியம்மாள் தான்கொண்ட நூற்றெட்டு சோமவார விரதத்தை முறைபிறழாது அன்போடு அநுஷ்டித்து வந்ததால் பரமேஸ்வரனையும் பார்வதியையுந் தரிசித்து. தான் வேண்டிய வரத்தைப்பெற்ற பின்னர் அரசமரத்தடியிலிருந்த கலச ஆவாஹனங்களுக்குத்தகுந்த ஆகுதி தூபதீப நைவேத்தியந்தந்து அவைகளைப் பாங்கிகளால் கங்கையில் விட்டுவரும்படிச் செய்தனள். அதன் பின்னர் தானுந் தன் குலகுருவாகிய அப்பண்ணுதீக்ஷிதரும் பாங்கிகளும் ஒருங்கு சேர்ந்து, சோமவார விரதத்திற்குக்கொண்டுவந்த தட்டுமுட்டு சாமான்களையெல்லா மெடுத்துக்கொண்டு, தனதில்லமாகிய தருமக்கோட்டைக்குச் சென்றபின், அப்பண்ணுதீக்ஷிதருக்குத் தக்ஷிணை தாம்பூலமும் பண்டபலாதிகளும், நவரத்னம்பதித்த ஓர் சால்வையும் வெகுமதியாக அளித்துத், தன் பாங்கிகளிலொருத்தியை அவைகளை எடுத்துக்கொண்டுபோய் அவரில்லத்திற் சேர்ப்பித்துவரும்படியாக உத்தரவளித்து. தங்குருவினது திருவடிகளைப் பணிந்து ஆசிர்வாதம் பெற்று, விடைகொடுத்தனுப்பிவிட்டு, தன் மாளிகைக்குட் சென்று, அன்று உபவாசதினமாதலால் முறைப்படி பண்டபலாதிகளைப் புசித்து பரமனது திருவடியைச் சிந்தித்துக் கொண்டிருந்தனள்.

பட்டாம்புரியின் சரித்திரமானது இங்ஙனம் நிற்க ஞானபுரிப் பட்டணத்தில் தருமக்கோட்டையில் பரதேசியாய்ப்போவதற்காகத் தெரிந்து சகலருக்கும் விடைகொடுத்தனுப்பிவிட்டு பஞ்சணையில் பள்ளிகொண்டிருக்கின்ற சக்ரவர்த்தியாகிய அநந்தராம மகாராஜ

னவர் பொழுது விடிந்து அருணன் பிறந்த வுடனே விழித்தெ ழுந்து ஆண்டிப்பெரியோரையும் முதல் மந்திரியையு மெழுப்பி யழைத்துக்கொண்டுபோய் மலசலாதிகள் முதலாகிய காலைக்கடனை முடித்துக்கொண்டு மூவர்களுமாக பூசை மனைக்குச்சென்று ஜபத பாதி நேமநிஷ்டைகளைக் குறைவின்றி முடித்துக்கொண்டு மடப் பள்ளிக்குள்ளாகப்புகுந்து மேன்நிலையில் மூவர்களுமமர்ந்து முக் கனி சருக்கரையுட னும் அறுசுவை பதார்த்தத்தோடுங்கூடிய அச னம்புசித்தெழுந்து கரகரங்களை யலம்பிக்கொண்டு அவ்விருவர்க ளும் அலம்பிக்கொண்டதின்பின்பு சக்ரவர்த்தியானவர் இருவரை யும் அழைத்துக்கொண்டுவந்து பெரியவரின் பொருள்களை யெ டுத்து அவரின் கரத்திற் கொடுத்து விட்டு முதல் மந்திரியாகிய முழு மதி யென்னும் பெரியோரைப்பார்த்து அரசன் மொழிகின்றார்.

கேளுமையா யெனது தந்தைக்கொப்பாகிய முதல் மந்திரி யாரே கேளும் இந்த மகானுபாவரை யாரோவென் றெண்ணவேண் டாம் (காமனையெரித்த கடவுளாகியப் பரமேசுரன் இவரென்றி மற்றவரென்றெண்ணவேண்டாம்) ஆகையினாலே நான் இந்தப் புண் ணிய புருடருடன் சென்று சிலதுகாலம் தேயசஞ்சாரம் செய்து வருகின்றேன் எனக்கு ஒரு கரமறுப்புண்டுப் போய்விட்டதைப் பற்றி நீவிர் சஞ்சலங்கொள்ளவேண்டாம் நான் தேயசஞ்சாரஞ் செய்துவருகின்ற நாளையில் கடவுளானவர் எனக்கு கரத்தை வளர்த்துக்கொடுப்பார் ஐயா யெரியவரே நான் வருகும்பரியந்தம் சகலர்களையும் பாதுகாத் திரட்சிக்கவேண்டிய கடன் உம்முடைய தாகையினாலே யான் சொல்லவேண்டியதென்ன விருக்கின்றது. இதோ போய்வாறேன் நீ போமையா வென்றுரைத்துத் தனது கரத்தின் நோயையும் பாராமற்படிக்கு பண்டாரத்தின் பொருள் மூட்டையை தனது வலது கரத்தினால் தூக்கி யெடுத்து சிரசில் வைத்துக்கொண்டு வாரும் சுவாமி யென்று பண்டாரத்தை யழைத் துக்கொண்டு மன்னாதி மன்னனானவர் கூலியாளனைப்போல நின்றுக் கொண்டிருந்தார்.

இடது கரமிழந்த மகாராஜாவானவர் சிரசினில் மூட்டையை வைத்துக்கொண்டு நின்றிருக்கின்றதைக் கண்ட முதல் மந்திரியான வர் இருகண்களிலும் இரண்டு கரத்தை வைத்துக்கொண்டு ஓவென் றலறி கூக்குரலிட்டு கேளாயப்பா இளவரச கோமானே உனக்கு பதினைந்தாவது வயதில் இடது கரமிழந்து பரதேசியாவாயென்

றெழுதிவைத்த ஜாதகத்தின் செயல்களெல்லாம் இப்போது விளக்கிக்காட்டுகின்றது ஆகிலும் இப்போதுனக்கு வந்தமூறும்படியான துன்பங்களைக் கண்டு யான் கதாவில்லை 11-வது வயதில் உனக்கு மரணமென்று சோதிடரெழுதிக்கொடுத்த ஜாதகத்தை நேற்றைய தினந்தானெடுத்துப் பார்த்தேன் அதனைப்பார்த்தது முதற்கொண்டு உன்னைப்பார்த்தால் என் மனதானது கலங்குகின்றதே அப்பா அறத்தாளமகாராஜனே கேளும் நீயோ சகல கல்விகளிலும் விவேகமுள்ளவன் யானுனக் கெடுத்துச்சொல்வதினால் இயாதொன்றும் பலனில்லை உனக்குப் பதினாறுவது வருடம் பிறப்பதற்கு இன்னும் பதினெட்டு திங்களிருக்கின்றபடியினாலே நீ எங்ஙனம் விழுந்து மரணமாகி விடுவாயோ தெரியவில்லையே யானென்ன செய்குவேனென்று முதல் மந்திரியானவர் கண்ணீர்விட்டுக் கதறி யேங்கிப்புலம்பிக்கொண்டு அங்ஙனமே நின்றுக்கொண்டிருந்தார்.

ஏங்கிப் புலம்புகின்ற முதல் மந்திரியை மன்னன்னோக்கி ஐயா அமைச்சர்கோமானே நீவிர் சகலமுந் தெரிந்தவராக இருந்தும் இவ்வாறு கண்ணீர்சோரவிட்டுக் கதறினால் பிரமன்விதித்த விதியைத் தடுக்கப்போகுமா மீறி விவேகத்தினால் தடுத்தபோதிலும் வல்வினையாகிய முன்வினையை வெல்லமுடியாமலல்லவோ புரூர்வசக்ரவர்த்தியானவன் பெண்ணினால் துன்பமடைந்தான். நளச்சக்ரவர்த்தியானவன் பொருளினால் துன்பமடைந்தான் அரிச்சந்திரமகாராஜனானவன் தானத்தினால் துன்பமடைந்தான். அதிலும் அவர்கள் அடைந்த துன்பமானது கதிரவனைக்கண்ட பனியைப்போல எவ்வளவு சுருக்காகவிலகிப் பேருங்கீர்த்தியும் விளங்கி யெவ்வளவு தூரம் பெருமை வேதமாக விரித்துரைக்கின்றபடியினாலே நானும் சிறியதருமம் செய்ய ஆசைப்பட்டு இடதுகாமிழந்து பாதேசியாக வனச்சஞ்சாரம் செய்யப்போகின்றேன். மேற்சொல்லிய சக்ரவர்த்திகளைக்காத்திரட்சித்த கடவுளானவர் எங்கும் வியாபகமாக வீற்றிருக்கின்ற படியினாலே யானெந்தவிடத்திற்குப் போனாலும் அந்தவிடத்திற்கு வந்து அந்தக் கடவுளானவர் யென்னையுங்காப்பாற்றினால் காப்பாற்றப்படும் கைசோரவிட்டு விட்டாலும் விட்டு விடட்டும் ஐயா பெரியவரே என் வீணாக எங்குகின்றீர் சுருக்காகச் சென்று கொலுவிலமர்ந்து தேசாதிகாரியங்களைப் பார்க்கப்போமையா வென்றுரைத்துவிட்டு வாரும் சுவாமி யென்று ஆண்டியின் காத்தைப்பிடித்தழைத்துக்கொண்டு தருமக்கோட்டையைக்கடந்து வெளியில் வந்து அரசன் முன்னும் ஆண்டிப்பெரியோர் பின்னு

ம்ராக நடந்து போகும்போது இன்னுமிருக்கப்பட்ட மந்திரிமார்களும் குடிப்படைகளும் அரசன் வனவாசியாகப்போய் விடுகின்றாரென்ற சேதியைக்கேள்விப்பட்டு ஓடோடியும் வந்து மன்னனைச் சூழ்ந்துகொண்டு ஆணும் பெண்ணும் ஓ வென்றலறிக் கூக்குரலிட்டேங்கிப் புலம்புகின்றதை யரசனானவர் கண்டு, அங்ஙனமே நின்று மந்திரிபிரதானிகளையும் குடிப்படைகளையும் நோக்கிப்பார்த்து வலது கரத்தினால் வந்தனஞ்செய்து ஏ குடிமக்களே! கேளுங்கள் இன்னும் சிலது நாளைக்குள்ளாக இங்ஙனம் வந்து சேருகின்றேன். எனக்கு விடைகொடுக்கள் போய்வாருங்களென்று வேந்தனானவரெல்லோரையுங் கையமர்த்தி நிறுத்திவிட்டு பெரியவரின் கரத்தைப் பிடித்துக்கொண்டு அரசனானவர் நடந்து போகும்போது பின்தொடர்ந்து வருகின்ற தந்தைக்கொப்பாகிய முதல் மந்திரியை நோக்கி ஐயா பெரியவரே! உமக்கு இவ்வளவுதூர முரைத்தும் நீவிர் இன்னும் பின்தொடர்ந்து வருகின்றகாரணமென்னமோ தெரியவில்லையே போம் போம் போமையா வென்று கோபக்குறியோடு மன்னன் மொழிந்ததைக் கேட்ட மந்திரித்தலைவரானவர் அங்ஙனமே நின்றுக்கொண்டு பின்னும் வரப்பட்டவர்களை யெல்லாம் வந்த வழியாகவே துரத்திக்கொண்டு சற்றுநேரம் அங்ஙனம் நின்றுக்கொண்டிருந்து அரசன் தலை மறைந்தவுடனே முதல் மந்திரியார் நடையாய் நடந்து கொலுமுகத்திற்கு வந்து சிம்மாதனத்திலமர்ந்து முழுமதி யென்னும் மந்திரித்தலைவரானவர் தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்தனர்.

இங்ஙனமே நிற்க ஆண்டிப்பண்டாரத்தின் கரத்தைப்பிடித்துக் கொண்டு வனத்திற்கழைத்துக்கொண்டு போகின்ற சக்ரவர்த்தியானவர் மாடமாளிகை கூடகோபுரம் நாடுநகரங்களையெல்லாங் கடந்து அன்றுமாலைப் பொழுதிற்குள்ளாக ஞானபுரியென்னும் பட்டணத்தைவிட்டு இரண்டுநாழிகைவழிதூரம் நடந்துபோகும்போது ஆண்டிப் பெரியோரானவர் மன்னனைநோக்கி கேளாயப்பா மகாராஜனே நானோ இரவில் வழிநடந்தவனல்ல. அதிலும் இதுகாடாக விருக்கின்றது. ஆகையினாலே இன்றிரவு இந்தக்காட்டில் தானே எங்கேயாகிலும் படுத்துக்கொண்டிருந்து பொழுது விடிந்தவுடனே யெழுந்து நடந்து போகலாமென்று பெரியோருரைத்ததைக் கேட்ட மன்னனானவர் அங்ஙனமே நின்று அருகிலிருந்த அத்திமரத்தடியில் பெரியவரை அழைத்துக்கொண்டுபோய் கம்பளத்தை விரித்துப் போட்டு பள்ளிகொள்ளச்செய்து, தானும் அருகில் படுத்துக்கொண்

டுசித்திரைவராமல் பற்பலயோசனையாக மன்னுகிப[illegible]னன் மண்மேல் படுத்துக்கொண்டிருந்தனன்.

கம்பளத்தின்மீது படுத்துக்கொண்டிருக்கின்ற கதிரைவேற்பண்டாரமானவர், கதிரோனுதயமாகிப் பொழுது விடிந்தவுடனே விழித்தெழுந்து இளமன்னனை யெழுப்பி பாத்திரத்தை யெடுத்துக்கொடுத்த புனல்கொண்டு வரச்செய்து காலைக்கடனுதிகளை முடித்துக்கொண்டு தந்தசுத்திசெய்து வாக்குத்திருமுகமும் அலம்பிக்கொண்டு இருவரும் அமர்ந்து மூட்டையிலிருக்கின்ற காய்கனிகளையெடுத்துப் புசித்து ஜலமருந்தி, மூட்டையைக்கட்டிக்கொண்டு அன்று பகல் முழுவதும் நடையாய் வனத்தில் நடந்து அன்றிரவு சோலையுஞ்சாலையுஞ் சூழ்ந்திலங்குகின்ற காட்டகத்திற்குள்ளாக இருந்து பொழுதுவிடிந்தவுடனே எழுந்து நித்தியாநுஷ்டானங்களை யெல்லாம் முடித்துக்கொண்டு மூட்டையை யெடுத்து, அரசனுனவர் தலைமீது வைத்துக்கொண்டு வாருஞ்சுவாமியென்றழைத்துக்கொண்டு இருவரும் வனத்தைநோக்கி நடந்து இதேதன்மையாகப் பகல்முழுவதெல்லாம் வனத்தில் நடப்பதாகவும் இரவு தோன்றிய விடத்தில் தங்கிப்போவதாகவும் எட்டுநாள் பரியந்தம் நடந்தும் மாலையில் தலைதொங்கிக் காடென்றொரு காடிருக்கின்றது, அந்தக்காட்டிற்குள்ளாக இருவரும்போய் நுழைந்தார். இருவரும் நுழைந்தவுடனே அருணமூர்த்தியும் மேற்குக்கடலில் போய்ப் புகுந்தார்.

சக்ரவர்த்தியும் ஆண்டிக்கிழவனும் தலைதொங்கி காட்டுக்குள்ளாக இடைநடுவில் இருக்கின்ற நந்தவனத்திற்குச்சென்று, அங்ஙனமிருக்கின்ற சிங்காரங்களைச் சற்றுநேர முற்றுநோக்கிப் பார்த்துவிட்டு, அருகிலிருக்கின்ற மாமரத்தடியில் பெரியோரையழைத்துக்கொண்டுவந்து கம்பளத்தை விரித்துப்போட்டு பண்டாரத்தைப் படுக்கவைத்துவிட்டுத் தானும் அருகிலமர்ந்து சற்றுநேரஞ்சென்று அண்ணாந்து மாமரத்தைநோக்கிப் பார்த்தார். இளமன்னனுகிய அறத்தாள மகாராஜனுனவர் மரத்தையண்ணார்ந்துப் பார்த்து அந்தோ! இதுவென்ன மாமரமாகவிருந்தும் தைமாதத்தில் பூவும் பிஞ்சும் இலைகளும் துளிர்த்திருக்கின்ற விருட்சமாச்சுதே, இப்போது இந்த மரத்தில் ஒரு குருத்திலையைக்கூடக் காணோமே, இதுவென்ன விந்தையாக விருக்கின்றதே? நல்லது அண்டையிலிருக்கின்ற விருக்ஷங்களாகிலும் துளிர்த்திருக்கின்றதா போய்ப் பார்வையிட்டு வருவோமென்ற நினைத்தெழுந்து, அவ்விடம் விட்டகன்று

அந்தக்காட்டில் இருக்கின்ற மரங்களையெல்லாம் சுற்றிப்பார்த்துக் கொண்டு ஒரு விருக்ஷத்திலேனும் இலையாகிலும் பிஞ்சாகிலும் காய் முதலிய தொன்றுமில்லாமல் பெருத்த விருட்சமாகவும் கிளைகிளையாகவும் இருக்கின்றதைச் சக்ரவர்த்தியானவர் கண்டு வியப்படைந்து ஆ ஹா! இதென்ன ஆச்சர்யமாக விருக்கின்றதே! இந்தக் கானகத்திலிருக்கப்பட்ட விருக்ஷங்களில் ஓர் விருக்ஷத்திலாகிலும் இலைகளில்லையே! அருணனுனது வெப்பத்தினுல் காய்ந்துலர்ந்து உதிர்ந்து போனதைப்போல் காண்கின்றதென்றெண்ணமிட்டுக்கொண்டு காடு முழுமையும் சீராகச் சுற்றிப்பார்த்துக்கொண்டு ஆண்டிப் பெரியோரருகில் வந்து அமர்ந்து மண்மேற்படுத்து அண்ணாந்துக் கொண்டு நித்திரை வராமல் கண்களை மூடிக்கொண்டு சக்ரவர்த்தியானவர் படுத்திருந்தார். மகாராஜாவானவர் இருவிழிகளையும் மூடித் துயிலில்லாமல் படுத்துக்கொண்டிருக்கும்போது இரவு பதினைந்து நாழிகைக்கு ஆயிரந்தாளவோசையைப்போல் கணீல் கணீலென்று மன்னவனின் செவியில் நாராசங்காச்சி யூற்றியதைப்போல ஓர் ஓசையொன்று கிளம்பினது. அந்த ஓசையைக்கேட்ட அறத்தாளமகாராஜாவானவர் திடுக்கென்று பயந்து இரு கண்களையும் விழித்துப்பார்த்து ஆனந்த பரவசமடைந்தார்.

(கதா நேயச்செல்வச்சிரோன்மணிகளே கேளுங்கள்) சக்ரவர்த்தியானவர் மரத்தைப்பார்த்து ஆனந்தங்கொண்டது ஏதுக்கென்றால்? இதற்கு முன்னம் ஒரு இலையேனும் இல்லாத விருக்ஷத்தில் இப்போது அந்த விருட்சத்தின் கிளைகளில் பெண்மணிமார்களின் சிரசு வெட்டுண்டு, கழுத்தளவாகத் தொங்கிக்கொண்டிருக்கவும், வெட்டுண்ட கழுத்திலிருந்து சொட்டு சொட்டென்று உதிரம் வடிந்துகொண்டிருக்கவும், அந்த உதிரமானது அரசன் முகத்திலும் மார்மேலும் விழுந்துக்கொண்டிருக்கவும், மகாராஜாவானவர் அதனைக்கவனிக்காமல் அந்த விருக்ஷத்தையே உற்று நோக்கிப்பார்த்துக் கொண்டிருந்தார். அந்த விருட்சத்தின் கிளைகளில் தொங்குகின்ற சிரசுகளைப்பார்த்தால் தேவலோகப்பெண்களின் சிரசைப்போலவும், அந்தச் சிரசின் முகத்திலும் செவிகளிலும் நாசியிலும் நவரத்தினப்பணிகளைப் பூட்டிருக்கின்றதுமன்றி, இந்தத்தலைகள் மரத்தைச்சுற்றிலும் நூறு தலைகளும் அவைகளின் இடை நடுவில் இந்த நூறுதலைகளைவிட அதிக வடிவமாகிய தலையொன்று தொங்கிக் கொண்டிருக்கவும், அந்தத்தலையைச்சுற்றிலும் கந்திருவர்கள் தூண்டாவிளக்கைப்பிடித்துக்கொண்டு நிற்கவும், அதற்கருகில் இன்னுஞ்

சிலகந்திருவர்கள் தாளமேளக்கருவிகளை யிசைபூட்டி கீதநாதங்கள் நாட்டி பாடிக்கொண்டிருக்கின்றதையும், தேவேந்திரலோகத்திற்கும் அதிகமாக விளங்குகின்ற விருட்சத்தை சக்ரவர்த்தியானவர் விழிகளைச் சிமிட்டாமற்படிக்கு பார்த்துக்கொண்டிருக்கும்போது சுக்கிரனுதயமானவுடனே குபீலென்று ஒரு இருளானது அந்த விருட்சத்தில் கவிழ்ந்தது.

அரசனானவர் அந்த இருளைக்கண்டு திடுக்கென்று கண்களை மூடித்திறந்து விருட்சத்தைப்பார்க்கும்போது முன்னமிருந்த அந்த மாதுசிரோன்மணிகளின் தலைகளில் ஒரு தலையேனும் இல்லாமற்படிக்கு பழையபடியே கிளையுங் கொம்புமாக மாறி விட்டது. சக்ரவர்த்தியானவரிப்போது விருட்சத்தைக்கண்டு வியப்படைந்து ஆஹா இதென்ன விந்தையாக விருக்கின்றது? முன்னம் நாம் வருகும்போதிருந்த தன்மையாகவே இருக்கின்றதே, இதனிடையில் விநோதவிந்தையாகவும் தேவேந்திரவுலகத்தைப்போலவும் விளங்கியிருந்ததே இதுவென்னக்காரணமோ? தெரியவில்லையே. அதனை சோதித்தறியாமல் போகலாகாதென்று வேந்தனானவர் விழிகளை மூடிக்கொண்டு அயர்ந்து துயின்றுவிட்டார்.

(கேளுங்களையா கதாபிமானிகளே) தலைதொங்கிக் காட்டில் இன்றிரவு நடந்த விந்தைகளிலொன்றேனு மாண்டிப்பெரியவருக்குத் தெரியவாராது. பொழுதுவிடிந்து அருணன் பிறந்து இருவரும் விழித்தெழுந்தவுடனே, இளமன்னனானவர் விருட்சத்தை அண்ணாந்து பார்த்தார். செம்மலானவர் மாமரத்தை யண்ணாந்துபார்க்கும்போது, அந்த மரமானது இலையுந் துளிரும் பூவும் பிஞ்சும் காயும் கனியுமாகத் தழைத்து விளைந்திருக்கின்றதை வேந்தன் கண்டு வியப்படைந்து, நல்லதென்று மௌனமாகத் தனக்குள்தானே விசாரிப்போமென்று பெரியவரை யழைத்துக்கொண்டு, காலைக்கடனைக்கழிக்கப்போகவேண்டி அருகிலிருந்த விருட்சத்தடியினிற் சென்று பெரியவரை விட்டு தானுந் துலைவில் சென்று மலசலங் கழிக்க உட்கார்ந்துக்கொண்டு விருட்சங்களை யண்ணாந்துபார்க்கும்போது அங்கனமிருக்கின்ற சகல கனிவர்க்க விருட்சங்களெல்லாம் துளித்துக் காய் கனியாகப் பழுத்து கமகம வென்று பரிமளம் வீசிக்கொண்டிருக்கின்றதை அரசன் கண்டு, மென்மேலும் களிப்புகொண்டு ஆ! ஹா! இந்த விருட்சங்களெல்லாம் நேற்றைய இரவில் உலர்ந்த விருட்சத்தைப்போல கிளையும் கொம்புமாகக்காய்ந்திருந்த மரங்களானது இப்போது இவ்விதமாகிய காயுங்கனியுமாக சோடி

கின்றதே நல்லது இதனைச் சோதித்தறியாமல் இந்தவனத்தைவிட்டுப் போகலாகாதென்று மனதிலுறுதிகொண்டு மலசலங்களைக்கழித்தெழுந்து, கால்கரங்களை யலம்பிக்கொண்டு தந்த சுத்தி முதலாகியதெல்லாம் செய்து முடித்து விட்டு இளவேந்தனானவன் அங்கிருக்கப்பட்ட மா விருட்சங்களிலும், கதலி விருட்சங்களிலும், ஏறி வேண்டியளவும் கனிகளை யறுத்துக்கொண்டு வந்து, ஆண்டிப்பெரியோருக்குக்கொடுத்து அருந்தச்செய்து தானும் சில கனிகளையுண்டு ஜலமருந்தி அங்ஙனம் பசுமையாகத் துளிர்த்திருக்கின்ற விருட்சங்களில் ஓர் விருட்சத்தடியில் அமர்ந்து சக்ரவர்த்தியானவர் பெரியவரை நோக்கிப் பேசத்தொடங்கினர்.

கேளுமையா சுவாமி பெரியவரே நேற்றைய இரவு நாம்பள்ளிகொண்டிருக்கும்போது நாம் துயின்ற விருட்சத்தண்டையில் நீவிர் ஏதேனும் புதுமைகளைக் கண்டதுண்டா? ஏனப்பா மகாராஜனே அங்ஙனமென்ன புதுமையிருந்தது நானொன்றுங்காணவில்லை. இரவு தோன்றியவுடனே படுத்து துயில் செய்துவிட்டேன் பொழுது விடிந்ததின் பின்பு எழுந்தேனே அதுதான் எனக்குத்தெரியுமே யன்றி, மற்றைய படிக்கு யாதொன்றுங்கண்டதில்லை யப்பா நீ யென்ன விந்தையைக் கண்டாய்? சொல்லும் பிள்ளா யென்று ஆண்டிப் பண்டாரமானவர் கேட்கும்போது நேற்றிரவு கண்ட விந்தைகளை யின்னும் இரண்டு நாள் சென்று பெரியவருக்குத்தெரிவிக்க வேண்டுமென்று யோசனை செய்துங்கொண்டு பெரியவரை நோக்கி? சுவாமி யாதொரு விந்தையையுங்காணவில்லை இஃது வனந்திரமாகிய காடாகையினாலே இங்ஙனம் ஏதாகிலும் அதிசய ஆச்சரியங்களிருக்குமே. தாங்கள் பெரியோராயிற்றே ஏதேனும் விந்தைகள் கண்டிருப்பீர்களென்று கேட்டனன் சுவாமி யென்று வேந்தர் பெருமான் விளம்பினர்.

செம்மலுரைத்த சேதியைக்கேட்ட பண்டாரமானவர் யானேதுங்காணவில்லையப்பா வென்றுரைத்ததின்பின்பு, இளவரசனானவர் பெரியவரின் கரத்தைப்பிடித்தழைத்துக்கொண்டு, அந்த வனத்தில் துளிர்த்திருக்கின்ற விருட்சங்களின் வடிவங்களையும், மணத்தின் பெருமைகளையும் சுற்றிப்பார்த்துக்கொண்டு, அவ் வனத்திலிருக்கின்ற தடாகத்திற்கு அருகிலிருக்கும் கதலி விருட்சத்தண்டையில் வந்து, கம்பளத்தை விரித்துப்போட்டு பெரியவரை அமரச்செய்து தானும் அருகிலமர்ந்து விருட்சங்களின் விளைவு விநோதங்களைப் பார்த்துக்கொண்டு, அன்று பகல் முழுவதுங்கழித்து அருணன்

மறைந்த உடனே தழைத்துத் துளிர்த்திருக்கின்ற மரங்களெல்லாம் திடீரென்று காய்ந்துலர்ந்த விருட்சத்தைப்போல கிளையுங்கொம்புமாக விருக்கின்றதை மன்னாதி மன்னன் கண்டு, வியப்படைந்து ஆ! ஹா! இதென்ன ஆச்சரியமாக இருக்கின்றதே? இது யாருடைய தொழிலாக விருக்குமோ தெரியவில்லையே? இந்த வனத்திலிருக்கின்ற விருட்சங்களெல்லாம் பகல் முழுவதும் இலையும் பூவும் பிஞ்சும் காயும் கனியுமாகத் துளிர்த்திருந்து கதிரோன் மறைந்ததும் உலர்தவிருட்சத்தைப்போல கிளையுங்கொமபுமாக விளங்குகின்றதே. நல்லது நேற்றைய இரவு மாமரத்திலிருந்த பெண்மணிகளின் சிரசானது, இன்றிரவிற்கு இந்தக்கதலி விருக்ஷத்தில் விருக்கின்றதும் இல்லாததும் பார்த்துத்தெரிந்துகொண்டு, நாளையகாலையில் இயாதொரு யோசனையும் செய்யவேண்டியதென்று நினைவுகொண்டு, பெரியவரின் அண்டையில் அணுகிந்து பள்ளிகொண்டு இருவிழிகளையுந்திறந்து விருட்சத்தை யுற்றுநோக்கிப் பார்த்துக்கொண்டு பத்துநாழிகைக்கு இருவிழிகளையும் மூடிக்கொண்டு நித்திரைவராமல் சக்ரேஸ்பரனானவர் படுத்துக்கொண்டிருந்தனர்.

பண்டாரத்தி னண்டையில் படுத்துக்கொண்டிருக்கின்ற மகாராஜாவானவர் துயில்வராமல் வீற்றிருக்கும்போது, இரவு பதினைந்துநாழிகைக்கு அந்தக் கதலிவிருட்சத்தின்மீது கோடைகால இடியைப்போல் படபடப்படவென்று ஒரு ஓசையானது கிளம்பினது, அந்த ஓசையைக்கேட்ட வேந்தனானவர் திடுக்கென்று விழித்து கதலிமரத்தைப் பார்க்கும்போது அந்த மரத்திலுள்ள கிளைகளில் நேற்றிரவுபோலவே பெண்மக்களின் சிரசுகள்தொங்கிக்கொண்டிருக்கவும், அந்தச் சிரசின் கழுத்திலிருந்து உதிரம் சொட்டுசொட்டென்று துளிதுளியாக விழுந்துக்கொண்டிருக்கவும், அந்த விருட்சத்தின் கிளைகளில் சுற்றிலும் நூறு தலைகள் வெட்டுண்டு தொங்கவும், அத்தலைக்கு இடைநடுவில் முப்பத்திரண்டு இலட்சணங்களும் அமைந்து வடிவிலிருந்த தலையானது ஒன்று தொங்கிக்கொண்டிருக்கவும், அந்தத் தலையைச்சுற்றிலும் ஆகாயகந்திருவர்கள் ஆயிரம் சூரியனுதயமானதுபோல் தூண்டாவிளக்கு பிடித்துக்கொண்டு நின்றிருக்கவும், இன்னும் சிலகந்திருவர்கள் தாளமேளங்களைக் கொட்டி கீதநாதங்கள் பாடிக்கொண்டு தேவேந்திரனுலகத்தைப்போல விளங்குகின்ற கதலிவிருட்சத்தை வேந்தனானவர் கண்டு மென்மேலுங் களிப்படைந்து சற்றுநேரம் உற்றுப்பார்த்து. இந்தப் பெண்மணிகள் யாராயிருப்பார்களோ தெரியவில்லையே, நேற்று மா

மரத்திலிருந்த பெண்மணிகளிவர்கள்தானென்று நினைவுகொண்டு, இந்தப்பெண்மக்களை வெட்டி சிரசை விருட்சத்தில் கட்டினவர்கள் யாரோ? என்னகாரணமோ? வொன்றும் விளங்கவில்லையே. இந்தப் பெரியோரைக் கேட்கலாமென்றாலும் இவரோ இந்த விந்தைகளைப் பார்க்காமல் அதிக நித்திரையிலிருக்கின்றாரே. இதற்கென்ன செய்குவோமென்று எண்ணாதவெண்ணங்களெல்லாம் எண்ணி, கண்ணை மூடாமல் விழித்துப் பாாத்துக்கொண்டிருக்கும்போது இருபத்தைந்து நாழிகையாகி சுக்கிரன்பிறந்தவுடனே ஒரு இருளானது திடீரென்று அந்தக் கதலிவிருட்சத்தில் சூழ்ந்தது.

இருள்வந்து விருட்சத்தில் கப்பினவுடனே மன்னனானவர் மிரண்டு திடுக்கென்று விழிகளை மூடித்திறந்து பார்க்கும்போது அந்த மரத்திலிருந்த தலைகளொன்றேனு மில்லாமல் கிளையும் கொம்புமாக விளங்குகின்றதை வேந்தன்கண்டு, நல்லது இதனைச்சோதித்தறியாமல் இவ்விடம்விட்டுச் செல்லலாகாதென்று இருபத்தைந்து நாழிகைவரையிலும் விழித்துக்கொண்டிருந்து அதற்கு மேற்பட்டு யோருக்கீந்து உண்ணச்செய்து தானும் உண்டு எழுந்து தடாகத் விழிகளைமூடித் துயில்செய்துவிட்டனர். மன்னனானவர் துயின்றுகொண்டிருக்கும்போது அருணன் பிறந்து பொழுது புலர்ந்தவுடனே கதிரைவேற் பண்டாரமானவர் விழித்து எழுந்து இளமன்னனைத் தட்டியெழுப்பி, வேந்தன் எழுந்தவுடனே பெரியவரின் கரத்தைப்பிடித்து அழைத்துக்கொண்டுபோய் காலைக்கடனைதிகளை முடித்துக்கொண்டு, வழிபடுங் கடவுளடியை வணங்கித்தொழுது இரவில் கிளையுங்கொம்புமாகவும் இருக்கிற மரங்களானது, பகலில் காயுங்கனியுமாக விளைந்து துளிர்த்திருக்கின்ற விருட்சங்களில் இளவரசன் ஏறி வேண்டிய மட்டும் பற்பலவகைக் கனிகளைக் கொய்துக்கொண்டுவந்து, ஆண்டிப் பெரியோருக்கீந்து உண்ணச்செய்து தானும் உண்டு எழுந்து தடாகத்திற்குச்சென்று புனலருந்தியதின் பின்பு, மிகுந்த கனிகளைமூட்டையில் வைத்துக்கொண்டு பெரியவரை நோக்கி அரையனுரைக்கத் தொடங்கினன்.

கேளுமையா சுவாமி தேவரீர் இந்த வனமானது மகாவுன்னதமாகிய வனமாக விருக்கின்றபடியினாலே, இந்த வனத்தில் இன்னும் இரண்டுநாளைக்கிருந்து மூன்றுநாள் பிரயாணப்பட்டுப் போகலாமென்றுரைத்து, அங்ஙனமிருந்த ஓர் பலாமரத்தடியில் கம்பளத்தை விரித்துப்போட்டு பெரியவரை யமர்த்தி ஐபாபெரியவரே! நீவிர் இங்ஙனமே அமர்ந்திருத்தல்வேண்டும். அடியேன் சென்று இந்த

வனத்தின் நேர்மையைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருகின்றேனென்றுரைத்துவிட்டு அவ்விடம்விட்டு அகன்று வனத்திற்குள்ளாகப் புகுந்துபார்க்கும்போது, எந்த விருக்ஷத்திலாகிலும் ஓர்பச்சிலையேனு மில்லாதிருப்பதைக்கண்டு வனமுழுவதுஞ் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருகும்போது, விருக்ஷங்களில்தான் ஓரிலையேனுமில்லை யென்றால் பூமியில் விளைந்திருக்கின்ற புற்களெல்லாம் காய்ந்துதீய்ந்து உலர்ந்திருப்பதைக்கண்ட இளமன்னவன் ஆ ஹோ இந்த வனத்திற்குத் தேவர், முனிவர், சித்தர், வித்யாதரர், கின்னரர் கிம்புருடர், கந்திருவர், அஷ்டதிக்குப் பாலகர்கள் யாவராகிலும் சாபங்கொடுத்திருக்கின்றார்களோ? என்னமோ? ஏதோ? ஒன்றுந்தோன்றவில்லை யென்று கவலைகொண்டவராகி, அன்றுபகல் முழுவதும் தலைதொங்கி காடெல்லாம் சுற்றிப்பார்த்துக்கொண்டு, சூரியவன் மறைய இரண்டரைநாழிகை யிருக்கும்போது பெரியவரிடத்திற்குவந்து அவரின் அருகிலமர்ந்து மூட்டையையவிழ்த்து காய்கனிகளை யெடுத்துக்கொடுத்து உண்ணச்செய்து பெரியவருண்டதின் பின்பு மிகுந்தவற்றையெல்லாம் அரசனுண்டுவிட்டு, பாத்திரத்தை யெடுத்துக்கொண்டுபோய் அதனிரம்ப ஜலம் மொண்டுக்கொண்டு. தானும் புனலள்ளியுண்டுவிட்டு ஜலத்துடன் பாத்திரத்தையெடுத்துக்கொண்டுவந்து ஆண்டிப்பெரியோருக்குக்கொடுத்து, அருந்தச்செய்து பெரியவரருந்தி பள்ளிகொண்டவுடனே, அந்த மகானுபாவரது காற்கரங்களைச் சற்றுநேரம் அமுத்திப் பிடித்துக்கொண்டிருந்து பண்டார முறங்கினதின்பின்பு தானும் அண்டையில் மல்லார்ந்து படுத்துக்கொண்டார்,

மகாராஜன் படுத்துக்கொண்டு விழிகளைத்திறந்து விருக்ஷத்தை யுற்றுப்பார்த்து ஆ ஹா! இந்த விருட்சங்களின் மார்க்கத்தை இன்று நாளைக்குள்ளாக எந்த விதத்திலாகிலுங் கண்டறியவேண்டுமென்று மனதிலுறுதிகொண்டு, கிளையுங் கொம்புமாக இருக்கின்ற விருட்சத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்து, இரு கண்களையும் மூடிக்கொண்டு துயில் வராமல் மகாராஜாவானவர் மண்மேற் படுத்துக்கொண்டிருந்தார். ஐம்பத்தைந்து தேயங்கட்கு மதிபதியாகிய அறத்தாளமகாராஜனனவர் மண்மீது படுத்துக்கொண்டிருக்கும்போது அந்தப் பலாமரத்தின்மீது பயங்கரமாகிய வோசையொன்றுண்டாயிற்று. அந்த வோசையைக்கேட்ட அரசனனவர் திடுக்கென்று கண் விழித்து மரத்தின்மீது உற்றுப்பார்க்கும்போது, இரண்டு இரவில் கண்டதைப்போலவே பெண்மணிகளின் பிரசானது

கழுத்தளவில் தொங்கி யுதிரம்வடிந்துகொண்டிருக்கவும், பட்டம் பகலைப்போல திருவிளக்குகளை கந்திருவர்கள் பிடித்துக்கொண் டிருக்கவும், அந்த விருக்ஷத்தில் கட்டித்தொங்குகின்ற ஒவ்வொரு தலைகளினிடத்திலும் எமதூதர்களைப்போல நான்கு சூரர்கள் நின் றுக்கொண்டு கரத்தில் ஒரு பெரிய கழியை யொன்று பிடித்துக் கொண்டு அழைத்து வாருங்களடி அவனை யழைத்து வாருங்களடி யென்று உரத்த சத்தமாகக்கூவியுரைத்த நான்கு சூரர்களுங் கழி யினாலே தொங்குகின்ற பெண் சிரசை யோங்கி யோங்கி யடித்துக் கொண்டிருந்தார்கள். அந்த எமதூதர்களடிக்கின்ற அடியைத்தாள மாட்டாமல் அந்த நூறு தலைகளும் மிகப்பயங்கரமான ஓசை யுடன் சொல்லுஞ் சொற்களென்ன வெனில், (கேளீரன்பர்களே) ஐயையோ என்னை யாதரிப்பவர்கள் யாருமில்லையோ வென்று கூக்குரலிட்டு அலர் கின்றது இந்த நூறு தலைகளும் இவ்வாறாக வுரைத்துக்கொண்டிருக்கும் போது இடைநடுவிலிருக்கின்ற நடு விலிருந்த தலையானது தானும் அடிப்பட்டுக்கொண்டிருந்த போதி லும் அது வொன்று மாத்திரம் வேறு மொழியைச் சொல்லிக் கொண்டிருக்கின்றது.

(கேளீர் மித்திரர்களே) இந் நூறுதலைகளின் நடுவில் இருக் கின்ற தலையானது கூறும்படியான வாக்கியமாவது என்னவெனில், எங்கள் வாக்கியத்தைக் கேட்டும் பார்வையிட்ட மானிடர்கள் பிற ருக்குச்சொல்வார்களானால், அன்னவர்கள் எங்கள் நூற்றியோர் பே ருடன் வந்து சேரக்கடவதென் றுரைத்துக்கொண்டிருக்கின்றது. இந்த வாக்கியங்களையெல்லாங் கேட்டுக்கொண்டிருந்து பார்வையிட் டுக்கொண்டிருக்கின்ற சக்ரவர்த்தியானவர் ஒருபுறங் களிப்பும் மற் றொருபுறந் துக்கமுங்கொண்டு கண்களை மூடிக்கொண்டு, இடைநடு விலிருந்த தலையானது சொன்னசொற்களை யெவரிடத்திலாகிலும் உரைத்தால், அந்தத்தலைகளுடன் சேர்க்கையாகி விடுவார் என்று உரைத்திருக்கின்றதே. இந்தத்தலைகளின் மார்க்கங்கள் இயாதொன் றுந்தெரியவில்லையே. இதனை இந்தப் பெரியவரிடத்தில் உரைத் துத் தெரிந்துக் கொள்ளலா மென்றாலும் நடுவிலிருந்த பாழுந்தலை யானது சாபங்கொடுத்திருக்கின்றதே, இதற்கென்ன செய்குவோ மென்று மன்னனானவர் எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணிக் கொண்டு கண்களைமூடி அயர்ந்து நித்திரைபோய்விட்டார்.

பஞ்சமாபாவிகளைப்போன்ற இருள்முழுவதுந் துலைந்து கதிர வனுதயமாகிப் பொழுதுவிடிந்தவுடனே சதிரைவெற்பண்டாரமான

சேரிடுமே இதற்கென்ன செய்குவோம் கடவுளேயென்று தனக்குள்ளாகத்தானே விசாரித்துக்கொண்டு பின்னும் யோசிக்கத்தொடங்கினர். இந்த வனத்தின் இரகசியத்தை இவர்க்கு உரைக்காமற்போன போதிலும் இந்தப்புண்ணியவானானவர் நம்மீது கோபங்கொண்டு நம்மை யெங்கேயாகிலும் உதறிவிட்டுச்சென்று விடுவாரே. அப்போதும் நாமெண்ணிவந்த எண்ணமானது கெட்டுப்போய்விடுமே இந்த வனத்திற்கு ஏன் வந்தேனே? இதற்கினியென் செய்வது ஐயையோ தெய்வமே! யாதென்ன செய்குவேன் இப்படிப்பார்த்தால் கிணறு. அப்படிப்பார்த்தால் மடு ஆகையினாலே இரண்டுக்கதிலே விழுக போதிலும் மரணம் மானமேயன்றி பிழைக்கப்போகின்றதில்லை. ஏ ஜெகதீசா! அடியேனை ஆபத்திலிட்டிருக்கும்பாக்கி கசக்கிநச வெடித்ததும் போதாதென்று இன்னமுஞ் சோதனை செய்கின்றாய். அல்லது அபயமென்போரை யாட்கொள்ளுந்தெய்வமே! உன்னுடைய திருக்கூத்தெல்லாம் அடியேனறிந்து காண்பித்துக்கொண்டு வாரும் சுவாமி. இன்னமு மென்னதான் செய்யப்போகின்றாய் எம்பெருமானே யென்று மனதிற்குள்ளாகச் சிந்தனை செய்துக்கொண்டு மன்னனானவர் மௌனமாக அமர்ந்திருந்தனர்.

பண்டாரமானவர் வேந்தனை நோக்கி அப்பா மகாராஜனே ஏனப்பா மௌனமாக அமர்ந்திருக்கின்றீரென்று கேட்கும்போது அரசனானவர் கதிரைவேற் பண்டாரத்தை நோக்கி கேளுமையா சுவாமி பெரியவரே நீவிருரைத்ததைப்போலவே இந்த வனத்தில் அடியேனேறு அற்புதாச்சரிய விந்தை யொன்றை கண்டிருக்கின்றேன். அதனை வெளியிடவேண்டாமென்று ஒருவர் சாபமிட்டிருக்கின்றார். அதற்காக அஞ்சுதலைகொள்கின்றேனையா என்று அரசனுரைத்த மொழியைக்கேட்ட பண்டாரம் பகர்கின்றார்

கேளாயப்பா மகாராஜனே சாபமிட்டவர்கள் அவர்கள் இயாவர்கள் என்ன சாபமிட்டார்கள் சொல்லும் பிள்ளாயென்று பெரியவர் கேட்கும்போது அரசன் கூறுகின்றார் கேளுமையா பெரியவரே! சாபமிட்டாரையும் சாபத்தின் சேதியையு மோதுவேனானல் அதுதான் அடியேன் கண்ட அற்புத அதிசயமேயன்றி வேறொன்றும் விந்தையுமில்லையையா. அதுதான் இரகசிய அதிசயமே யல்லாது மற்றொதுவுமில்லை. அதனை நீவிர் சொல்லுமென்றுகேட்பது தருமமல்ல சுவாமி. அதிலும் தாங்கள் இவ்வளவு பிடிவாதமாகக் கேட்கின்ற படியினாலே இன்றைய இரவிருந்து, நடக்குஞ் சேதியைக் கண்டறிந்து நாளைய தினம் கண்டிப்பாயுமக்குரைக்கின்றேனென்று

வாக்குகொடுத்துவிட்டு அன்று பகல் முழுவதுங்கழித்து காய்கனி களைப்புசித்து சூரியன் மறைந்து இருள் வந்தவுடனே அங்ஙன மிருந்த கல்லாலமரத்தடியில் வந்து கம்பளத்தை விரித்துப்போட்டு பெரியவரை குந்தவைத்து கேளும் சுவாமி ஆண்டிப்பெருமானே! நீவிர் சயனித்துக்கொண்டிரும். யான் சென்று இந்த வனத்தில் இன்னும் என்ன விந்தை நடக்கின்றதோ வென்று வனமுழுமையுஞ் சுற்றிப்பார்த்துக்கொண்டு வந்து விடுகின்றேன். நீவிர் பள்ளிகொள்ளுமையா வென்று பெரியவரைப் படுக்க வைத்துவிட்டு அரசனைவர் வனமுழுவதும் சுற்றிப்பார்த்துக்கொண்டு, விருக்ஷங்களெல்லாங் கிளையுங்கொம்புமாக வலர்ந்திருக்கின்றதை வேந்தனைவர் கண்டு புன்னகை கொண்டு நல்லதென்று தலையை யசைத்துக்கொண்டு நடந்து வந்து பெரியவருக்கருகாமையில் அண்ணைந்து படுத்துக்கொண்டு, அந்தமரமானது கொம்புங்கிளையுமாக விருக்கின்றதைச் சற்றுநேரம் உற்றுநோக்கிப் பார்த்துக்கொண்டிருந்து அதன்பின்பு விழிகளை மூடிக்கொண்டிருக்கும்போது, இரவு பதினைந்து நாழிகையில் நடுச்சாமவேளையில் இடிமுழக்கத்தைப்போல படீரென்று ஒருவோசையானது கிளம்பினது. அந்த வோசையைக் கேட்ட வேந்தனைவர் திடுக்கென்று கண்விழித்துப் பார்க்கும்போது மகாராஜனை அணைந்துபடுத்தாற்போல வடிவிற்சிறந்த பெண்மணியானவள் ஒருத்தி பக்கத்தில் படுத்துக்கொண்டிருக்கின்றதையும், சூரியப்பிரகாசமாகிய தீபங்களைக்கந்திருவர்கள் ஏந்திக்கொண்டு பூமியில் நின்றுக்கொண்டிருக்கவும், நூறுபெண்மணிகள் தன்னைச் சூழ்ந்துக்கொண்டிருக்கவுங் கண்டு. திடீரென்று மகாராஜாவானவனெழுந்து அமர்ந்து கொண்டிருக்கும்போது, படுத்துக்கொண்டிருந்த மாதுசிரோன்மணியானவள் தானுமெழுந்து வேந்தன் தொடையின்மீது தனது தொடையைப்போட்டு அமர்ந்து இடது கரத்தை மன்னன் கழுத்தில்போட்டு கட்டிக்கொண்டு கன்னத்தைக்கடித்து முத்தங்கொடுத்து கேளும் சுவாமி மகாராஜனே! நீவிர் இன்னாரென்று உம்மையானறிவேன். இந்தப் பெண்களெல்லோர்களும் அறிவார்கள். ஞானபுரியென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாளமகாராஜன் தாங்களல்லவோ எங்களுக்குத்தெரியவரும் சுவாமியென்றுரைத்து மன்னனை நோக்கிப் பின்னுங்கூறுகின்றாள்.

கேளுமையா இராஜசக்ரவர்த்தியே! எங்களுடைய இரகசியத்தை பிறருக்காருக்குங் வெளியிடுவீராகில், எங்களுக்கென்ன கதிநேரிட்டிருக்கின்றதோ, அந்தகதிக்குத்தான் நீயும் ஆளாகவேண்

டும், ஆகையினாலே வாய்பதனம், கைபதனம், சிசனபதன மென்னும் மூன்றுபதனங்களைப்போல உமது வாக்குகொஞ்சம் பதனமாக யிருக்கட்டும். இதோ நாங்கள்போய்வருகின்றோ மென்றுரைத்து விட்டு, மாதுசிரோன்மணிகளெல்லாம் காசோஷ்டஞ்செய்து, திடீ ரென்று மறைந்து பழையபடியே கிளைகளில் தலைகளாகத்தொங்கிக் கொண்டிருந்து சுக்கிரனுதயத்திற்கு மறைந்துபோய்விட்டார்கள். சக்ரேஸ்பரனானவர் அன்றிரவெல்லாம் விழித்துக்கொண்டு அந்தோ! இந்தப் பெண்மணிகளானவர்கள் இயாவர்களோ தெரியவில்லையே, நமக்கு முத்தங்கொடுத்து இடையிலிருந்த பெண்ணானவ ளெவ ளோ தெரியவில்லையே. இவர்கள் நூற்றியொருபேர்களும் சிலநாழி கைக்கு முன்னம் நமதருகினில் உருவோடு நின்றுக்கொண்டிருந்து, இப்போது வெட்டுண்ட தலையைப்போல் கிளைகளில் கட்டப்பட்டு உதிரம் வடிந்துக்கொண்டிருக்கின்றதே இதுயாது காரணமோ இத னது ஆந்த்ரீகக் கருத்தை யாவரைக்கொண்டு கேட்டால் இயாவர் தெரிவிக்கப் போகின்றார்களென்று யோசனை செய்துக்கொண்டிருக் கும்போது கதிரவமூர்த்தியானவர் ஆயிரங்கிரணங்கள் புடைசூழும் படியாக கீழ்க்கடலைப் பிளந்துகொண்டு பிரயாணப்பட்டார்.

அருணன் பிறந்து பொழுதுவிடிந்தவுடனே அரசனானவர் பெரியவரைத்தட்டி யெழுப்பி அழைத்துக்கொண்டுபோய்க் காலைக் கடனை முடித்துக்கொண்டு உடல்முழுவதும் சுத்திசெய்துக் கொண்டு காய்கனிகளைக்கொய்து இருவரும் புசித்து நீரருந்தி ஓர் மரத்தடியில் கம்பளத்தின் மீது இருவரு மமர்ந்துகொண்டிருக்கும் போது பண்டாரமாகிய பெரியவரானவர் மன்னனைநோக்கி கேளா யப்பா! இளவரசனே! இந்தக்கானகத்தில் நடக்கும்படியான அதி சயத்தை இன்றைக்கு உரைக்கின்றேனென்றுரைத்தனையே. நேற் றைய இரவு ஏதேனும் விந்தைகளைக் கண்டிருந்தாலும் சரி! அல் லது இதற்கு முன்னாள்களில் கண்டிருந்தாலும் சரி ஒன்றும் ஒளி யாமற்படிக்கு வெளியிடும் பிள்ளாயென்று ஆண்டிப் பெரியோர் கேட்கும்போது அரசனானவர் நடுநடுங்கிக் கேளுநமையா தேவரீர் இந்தவனத்தின் விந்தையை வெளிப்படையாகத் தெரிவிப்போர் கட்கு இன்னதண்டனையென்று நேற்றிரவிலும் சாபங்கொடுத்து விட்டுப் போயிருக்கின்றார்கள். ஆகையினாலே அந்தச்சேதியை யோது வதற்கு எனது கடமானது நடுநடுங்கி கிடுகிடென்று ஒடுங்கி மனமா னது அஞ்சுதலைகொண்டு வாடுகின்றதே ஐயனே! யானென்ன செய் குவேனென்று அரசனானவர் துக்காக்கிராந்தனை உரைத்தருளினார்.

மகாராஜன்கொண்ட துயரத்தைக் கண்ட மகனானவர் அப்பா அரசனேகேளும் உனக்குத் துன்பம்வந்து அனுதபிக்கும்படியான சேதியொன்றிருக்குமானால், அப்பேர்க்கொத்த சேதியை வெளியிடவேண்டாமப் பிள்ளாய் ஏன் கலங்குகின்றாய்? இந்தவனத்தைவிட்டுச் செல்லுவோம் வாருமப்பா வென்று பெரியவரெழுந்தவுடனே மன்னனுமெழுந்து கம்பளத்தையும் மூட்டையையுந்தூக்கித் தலையின் மீது வைத்துக்கொண்டு, பெரியவர் முன்னுமாக மன்னவன் பின்னுமாக, நடந்து, தலைதொங்கி வனத்தைக்கடந்து வெளியில்வந்து காடு கானகங்களிலும் வனம் வனாந்திரங்களிலும் அன்று பகலெல்லாம் நடந்து இரவு வந்தவுடனே வழிமார்க்கத்தில் மலைச்சாரலின் ஓரத்தில் திருக்குளமொன்றிருந்தது. அந்தக்குளத்திற்கருகில் ஆலவிருட்சமொன்றிருந்தது. சக்ரவர்த்தியானவர் அந்த விருட்சத்தருகில் சென்று கம்பளத்தை விரித்துப்போட்டு பெரியவரைக் குந்தவைத்துவிட்டு ஐயா பெரியவரே! இங்ஙனமே யிரும். யான்சென்று காய்கனிகளைக் கொய்துக்கொண்டு வருகின்றேனென் றுரைத்துவிட்டு, அவ்விடம் விட்டு அகன்று அங்கிருக்கின்ற விருட்சங்களை யெல்லாம் அணுகிப்பார்த்து இலையொன்றேனு மில்லாமல் கிளையும் கொம்புமாக இருக்கின்றதை அரசன் கண்டு ஓ! தேவா! இதுவென்ன விந்தையாக விருக்கின்றதே. நாம் நான்கு இரவாகத் தங்கியிருந்த தலைதொங்கி வனத்தைப்போலவே இந்தக்கானகத்திலும் விருட்சங்களெல்லாங் காய்ந்துலர்ந்து தேய்ந்துப்போயிருக்கின்றதே. நல்லது இந்த வனத்தையும் சோதித்தறியவேண்டுமென்று, வனமெல்லாஞ்சுற்றிப் பார்த்து பூ பிஞ்சியேனும் அகப்படாமல் வருத்தமடைந்து திரும்பி வந்து ஐயா பெரியவரே! நாமிருவரும் நான்கு நாளாகத் தங்கியிருந்த தலை தொங்கி வனத்தைப்போலவே இந்த வனத்திலும் ஏதோ அதிசயமிருக்கின்றது. ஆகையினாலே காய்கனிகள் ஒன்றேனும் அகப்படவில்லையேயென்றுரைத்து விட்டு, அரசனானவர் பெரியவர் பக்கத்தில் படுத்துக்கொண்டு மரத்தை நோக்கி கிளையுங் கொம்புமாக வுலர்ந்திருக்கின்ற விருட்சத்தை மன்னனானவர் பார்த்துக்கொண்டிருக்கும்போது, இரவு பதினைந்து நாழிகைக்கு அண்டத்திடியானது அகிலத்தில் விழுந்த காலத்தில் எவ்வளவு ஓசை கேட்கின்றதோ, அத்தனையாகிய ஓசையொன்று அந்த ஆலவிருட்சத்தின்மீது கேட்டது. அந்த வோசையானது கிளம்பினவுடனே வேந்தனானவர் விழிகளை விழித்துப்பார்த்து மரத்தின் கிளைகளில் தொங்குகின்ற தலைகளைக்கண்டு, அடடா இது

யென்ன அதிசயமாக விருக்கின்றதே? அந்தக்கானகத்தில் தான் தலைகள் தொங்கிக்கொண்டிருந்ததென்றால், இந்த வனத்திலும் அதைப்போலவே நூறு பெண்மணிகளின் சிரசும் இடை நடுவில் வடிவிற்சிறந்த மாதரசியின் சிரசையுங்கண்டு ஆ! ஹா! அதோ இடை நடுவிலிருக்கின்ற தலையானது பெண்ணுருக்கொண்டு நேற்றைய இரவு நம்மைச் சந்தித்துப் பேசின பெண்ணல்லவா அந்தப்பெண்ணானவள் நம்மைச்சந்தித்து வார்த்தையாடும்போது அவளின் பூர்வீகத்தைக் கேளாமலும் தெரிந்துக்கொள்ளாமலும் வந்துவிட்டோமே இந்தமாதர்கள் இந்தகானகத்திலும் வந்து உதயமானார்களோ நல்லது நாளையதினம் இராவிற்கு வேறொருவனத்தில் தங்கப்போகின்றோமே அந்தவனத்திற்கு இந்தப் பாவையர்கள் வருகின்றார்களாயில்லையா பார்க்கலாமென்று இருகண்களையும் மூடிக்கொண்டு அரசனானவர் நித்திரைபோய்விட்டார். அன்றிரவெல்லாங் கழிந்து பொழுதுவிடிந்தவுடனே பெரியவரானவரெழுந்து அரசனைத்தட்டி யெழுப்பினவுடனே வேந்தன் விழித்தெழுந்து பெரியவரை யழைத்துக்கொண்டுபோய் நித்தியக்கடனுதிகளை முடித்துக்கொண்டு விருட்சங்களை யண்ணாந்துப் பார்த்துப் புன்சிரிப்பாக உள்ளத்திற்குள்ளாகவே நகைத்துக்கொண்டு விருட்சங்களின் மீதிலுற்ற காய்கனிகளைக் கொய்துகொண்டு பெரியவருக்குக் கொடுத்து தானுமருந்தி வீற்றிருக்கும்போது பெரியவரானவர் மன்னனைநோக்கிப் பேசத்துடங்கினார்,

கேளாயப்பா இளவேந்தனே நேற்றிரவு இந்தக்கானகத்திலேதேனும் புதுமைகள் கண்டிருப்பாயானால் எள்ளத்தனையுமொளியாமல் வெளிவிடும் பின்னாய் கேளுஞ்சுவாமி மகானுபாவரே தலைதொங்கி வனந்தி லென்னவிந்தை விளைந்தனவோ அந்த விந்தையே இந்தக்கானகத்திலும் விளைந்ததேயன்றி மற்றப்படிக்கு வேறொன்றுமில்லையையனே இதுவென்னமோ ஆச்சரியமாக விருக்கின்றது நல்லது இந்த இரகசியத்தை இன்னும் போகப்போகத் தெரிவிக்கின்றேன் வாரும் சுவாமியென்று பெரியவரின் கரத்தைப் பிடித்துக்கொண்டு அந்த ஆலா விருட்சத்தைக்கடந்து இருவருமாக நடந்து அன்றுபகலெல்லாங் காடு கானகங்களில் நடந்து அருணன் மறைய இரண்டரைநாழிகையிருக்கின்றவேளையில் இவர்களுக்கு நேர்பட்ட ஒரு சோலைவனத்திற்குள்ளாகவந்து அதின் நடுவிலிருக்கின்ற திருக்குளத்திற் கருகில்வந்து படியின்மீது கம்பளத்தை விரித்துப்போட்டு பெரியவரையமர்த்தி அண்ணாந்து விருட்

சங்களைப் பார்த்து இந்த விருட்சங்களில் காய்கனிகளிருக்கின்ற தென்று திடீரென்று சென்று மரத்தின்மீதிலேறி காய்கனிகள் வேண்டியவளவுகொய்து மடியில்வைத்துக்கொண்டு பின்னுமொரு விருட்சத்திலேறி கனிகள் கொய்துக்கொண்டிருக்கும்போது அருணன் மறைந்துவிட்டவுடனே திடீரென்று அந்தவிருட்சத்திலிருந்த இலைகளும் பூவுகளும் பிஞ்சுகளும் காய்களும் கனிகளும் மறைந்து போய் கிளையும் கொம்புமாகி யிருக்கின்றதை அறத்தாளன்கண்டு இதுவென்ன கோலமோவென்று கிலேசங்கொண்டு விருட்சத்தை விட்டுப் பூமியிலிறங்கி பெரியவரண்டையில் வந்து காய்கனிகளைக் கொடுத்துத் தானுமுண்டு ஆண்டியின் அருகாமையில் சயனித்துக் கொண்டு அண்ணாந்து விருட்சத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார் அந்த விருட்சத்திலும் பழையபடியாகவே நூற்றியொருபெண் சிரசுகள் தொங்கக்கண்ட அரசனானவர் எழுந்து மரத்தைப்பார்த்து நமதருகில் அமர்ந்து வார்த்தையாடின பெண்ணானவள் அதோ இடைநடுவில் வீற்றிருக்கின்றாள் அவளை யிங்ஙனமழைத்து அந்த மாதர்களின் பூர்வீகத்தை விசாரித்தறிவோமா வென்று பற்பலவாறான யோசனைசெய்துக்கொண்டு சற்றுநேரம் நின்று பார்த்து நல்லது அழைக்கலாமென்று தனது வலதுகரத்தை நீட்டி ஏ இடைநடுவிலிருக்கின்ற மாதுசிரோன்மணியே இங்ஙனம் வாரும் வாருமென்று வேந்தனானவர் அழைக்கும்போது மன்னவனின் குரலைக்கேட்ட பெண்மணிகளின் தலைகளெல்லாம் மாயாஜாலத்தைப்போல திடீலென்றும் மறைந்துப்போய் விட்டதுகள் சிரசுகளெல்லாம் மறைந்துப்போய் விட்டவுடனே அறத்தாள மகாராஜனானவர் மண்மேல் படுத்துக்கொண்டு அயர்ந்து துயில்செய்துக் கொண்டிருந்தார்.

கேளீர் சுநேய ஐயன்மார்களே கேளும் அன்றிரவு கழித்து பொழுது விடிந்தவுடனே இருவர்களுமெழுந்து மலசலாதிகளை விலக்கி நியமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு காய்கனிகளை யருந்துண்டுவிட்டு கம்பளத்தையும் மூட்டையையும் எடுத்து மன்னர் பெருமானானவர் பெரியவரின் கரத்தைப் பிடித்துக்கொண்டு அந்த வனத்தைக்கடந்து இருவரும் நடந்து மூன்றுநாளிரவில் சோலையும் சாலையும் சூழ்ந்த ஒருவனத்திற்றுள்ளாக யிருவர்களும் அங்ஙனமிருக்கின்ற மாமரத்தடியினிற் கம்பளத்தைப் போட்டமர்ந்து மூட்டையையவிழ்த்துக் காய்கனிகளை யெடுத்து இருவரும் புசித்து பள்ளிகொண்டதின் பின்பு இரவு பதினைந்து நாழிகைக்கு அந்த

விருட்சத்திலும் நூற்றியொரு மாதர்களின் சிரசு தொங்குகின்றதை வேந்தன் கண்டு, இதென்ன நாம் செல்லும்படியான வனத்திற்கெல்லாம் இந்த மாதர்களும் கூடவே வருகின்றார்களே. இவர்கள் யாராயிருப்பார்களோ தெரியவில்லையே. கரங்காட்டியழைத்தாலும் ஓடிப்போய்விடுகின்றார்களே. எவ்வாறாக இவர்களைச் சந்தித்து இவர்களின் பூர்வீகத்தைத் தெரிந்துக்கொள்ளப் போகின்றோம். நல்லதுநேற்றையதினம் அழைத்ததற்குத் தான் திடீரென்று மறைந்துப்போய்விட்டார்கள். இப்பொழுது அழைத்துப்பார்ப்போமென்று சக்ரவர்த்தியானவர் வலது கரத்தை நீட்டி இடைநடுவிலிருக்கின்ற சிரசை நோக்கி ஏமாது சிரோன்மணியே! இங்ஙனம் வாரும். உனது பூர்வீகத்தையும் இன்னும் உன்னைச் சூழ்ந்துக்கொண்டிருக்கின்ற பெண்களின் பூர்வீகத்தையும் விபரமாகக் கூறும். வாரும் பெண்ணேயென்று அரசனானவன் கரத்தை நீட்டி யழைத்தவுடனே, நேற்றுபோலவே நூற்றியொரு மாதர்களின் சிரசும் திடீரென்று மறைந்துப்போய்விட்டது. தலைகளெல்லாம் மறைந்துப் போய்விட்டதைக் கண்ட அரசனானவர் ஓகோ இந்தத்தலைகள் நாளைய இரவிற்கு நமக்குத் தென்படுமானால், இதற்குச் சரியான காரியத்தை நியமித்து இதுகளைத் தருந்த தண்டனை செய்யவேண்டியதென்று திடங்கொண்டு பழையபடியே மண்மீதினில் படுத்துக்கொண்டு இளவரசனானவர் கண்ணுறங்கினர்.

பொழுது விடிந்தவுடனே இருவருமெழுந்து நித்தியக்கடனை முடித்துக்கொண்டு காய்கனிகளைப்புசித்துவிட்டு அந்த வனத்தைக் கடந்து அன்று பகலெல்லாம் நடந்து நான்காநாளிரவில் வாழை, தென்னை, கமுகு, மா, பலா முதலாகிய விருட்சங்கள் துளிர்த்திருக்கின்ற கானகத்திற்குள்ளாகப்புகுந்து, இரவு ஐந்து நாழிகைக்கு அரசன் விருட்சங்களை அண்ணாந்துபார்த்து ஓகோ இந்த வனத்தில் இருக்கின்ற விருட்சங்களெல்லாம் காயும் கனியுமாகத் துளிர்த்திருக்கின்றன. இந்த வனத்திற்கு அந்தத்தலைகள் வராதுபோலக்காண்கின்றதென்றெண்ணங்கொண்டு, ஓர் மாமரத்தின்மீதில் மன்னனானவர் ஏறி காய்கனிகளைக் கொய்துகொண்டு மரத்தை விட்டிறங்கி வந்து பெரியவரிடத்திலமர்ந்து ஐயா பெரியவரே! இத்தனை நாளாகவுண்ட கனிகளைப்பார்க்கிலும் இந்தக்கனிகள் பளபளப்பாகவும் அதிக சிறியதாகவுமிருக்கின்றது. இது உண்மையாவென்று சிலது கனிகளை கரத்தினால் கிள்ளி அரசனானவர் பெரியோரின் கரத்திற்கொடுத்தார்.

ஆண்டிப்பெரியோரானவர் கனிகளை வாங்கி வாயிற்போட்டுக் கடித்து மசியாமலிருக்கின்றதைக் கண்டு அடேயப்பா மகாராஜனே! என்னைப்பரிகாசமா செய்கின்றாய். இத்தனை நாளாக கொடுத்ததெல்லாம் கனிகள்தான். இப்போது குழாங்கல்லுகளைப்பொருக்கிக் கொண்டுவந்து எனது கரத்தில் கொடுத்து ஏளனமா செய்கின்றாய் சொல்லும் பிள்ளாயென்று பெரியவரறையக்கேட்ட அரசனானவன் திடுக்கென்றெழுந்து ஐயா! பெரியவரே அடியேனுமும்மைப் பரிகாசஞ்செய்யவல்லவன். அதோ பாரும் சுவாமி அந்த மாமரத்திலேறிப்பறித்த கனிகளையன்றோ. இது கல்லுகளல்ல. இரும், பார்த்துத் தெரிவிக்கின்றேனென்று, அரசனானவர் ஓர் கனியை யெடுத்து வாயிலிட்டு தன்னாலின்ற வரையிலும் கஷ்டப்பட்டுக் கடித்துப்பார்த்து கல்லாகத்தானிருக்கின்றது. நல்லது இதுகளையெல்லாம் பதனமாக வைத்துக்கொண்டு, நாளைகாலை அந்த விருட்சத்தையும் அதிலிருக்கின்ற கனிகளையும் நாம் கொய்து வந்த இந்தக்கனிகளையும் சோதித்தறியவேண்டுமென்று எண்ணங்கொண்டு, அறுத்து வந்த கனிகளையெல்லாம் அடிமடியிற் கட்டிக்கொண்டு பெரியவருக்கருகாமையில் பள்ளிகொண்டு அண்ணாந்து கண்களைத்திறந்து பார்த்துக்கொண்டிருக்கும்போது, அண்டத்து மின்னலானது மின்னுவதைப்போல இவர்களமர்ந்திருக்கின்ற அத்திமரமானது பளிச்சு பளிச்சென்று மின்னிக்கொண்டிருக்கின்றது. மன்னவன் பார்த்துக்கொண்டிருக்கும்போது பழைய மாதர்களாகிய நூற்றியொரு பெண்மணிகளின் சிரசும் தொங்கிக்கொண்டிருந்தது. அந்த சிரசுகளைக்கண்டு அரசனானவரெழுந்து, அருகிலிருந்த கற்களை யெடுத்து அத்திமரத்தில் தொங்குகின்ற தலைகளை யடித்துக்கொண்டு அந்த விருட்சத்தைச் சுற்றிப்பார்த்து ஒவ்வொரு தலையையும் கற்களினாலடித்து அசைத்துக்கொண்டு படுக்கையிடத்தில் வந்து நின்று இடைநடுவிலிருக்கின்ற தலையை நோக்கிப்பார்த்து எ மாதரசியே! இங்ஙனம் வாரும் பெண்ணேயென்று கரத்தைக்காட்டி நீட்டி அழைக்கவுடனே திடீரென்று தலைகளெல்லாம் மறைந்துபோய் பழையபடியே கிளையுங் கொம்புமாக மாறிவிட்டது. இவ்வாறு மாறிவிட்ட மரத்தை மன்னனானவன் கண்டு திடீரெனவெழுந்து இன்னும் அருகிலிருக்கின்ற விருட்சங்களை யுற்று நோக்கும்போது இவர்கள் பள்ளிகொண்டிருந்த விருட்சமொன்று தவிர மற்றைய விருட்சங்களெல்லாம் பூ பிஞ்சுகாயும் காய்கனிகளுமாக விளைந்திருக்கின்றதை வேந்தனானவர் கண்டு, வனத்திற்கு வனம் வித்தியாசமாகவும் எறக்

குறையுமாக விருக்கின்றதென்று சந்தேகங்கொண்டு வனமுழுவதுஞ் சுற்றிப்பார்த்துப் பொழுது விடிந்தவுடனே பெரியவரையெழுப்பி அழைத்துக் கொண்டுபோய் நித்தியக்கடன் முதலாகியதெல்லாம் முடித்துக்கொண்டு நேற்றைய மாலையில் கொய்துவந்த கனிகளை யெடுத்துப் பார்க்கும்போது, கமகமவென்று மணம் வீசவும், பழுத்துக் கனிந்திருக்கின்றதை அரசன் கண்டு ஓர் கனியை கரத்தினால் இரண்டாகத் துண்டித்துப் பார்த்து கேளுமையா பெரியவரே! நேற்றிரவில் இந்தக் கனிகளெல்லாம் கல்லுக்கும் பல்லுக்கும் மசியாமல் குழாங்கற்களைப்போலவிருந்தனவே. இப்போது அளிந்து கனிந்தகனியைப்போல விருக்கின்றது. இந்தாரும் சுவாமி இதனையுண்டு பாருமையாவென்று சில கனிகளை யெடுத்து ஆண்டிப்பெரியோர்கரத்தில் கொடுத்துண்ணச்செய்து, தானும் சிலகனிகளையுண்டு ஆஹா! இந்தக் கனிகளெல்லாம் நேற்றைய இரவு கல்லுகளைப் போலபற்களுக்கு மசியாமலிருந்ததல்லவா. நல்லது இந்த வனத்தையும் சோதித்தறியவேண்டுமென்று எண்ணங்கொண்டவராகி இருவரும் உண்ட கனிகள்போக, மிகுந்த கனிகளை மூட்டையில் வைத்துக் கட்டிவிட்டு கம்பளத்தையும் மூட்டையையுமெடுத்து இளவரசன் தலையின்மீது வைத்துக்கொண்டு வாருமையாவென்று பெரியவரையழைத்துக்கொண்டு, இவர்கள் தங்கியிருந்த சோலைவனத்தைக் கடந்து காடுகானகங்களில் நடந்து பகலில் பதினைந்து நாழிகைக்கு இருவர்களும் ஒரு தடாகத்தினிடத்திலமர்ந்து மூட்டையையவிழ்த்து கனிகளையெடுத்து இருவரும் வேண்டுமளவும் புசித்து மிகுந்த கனிகளை மூட்டையில்தானே வைத்துக்கட்டிவிட்டு இருவரும் புனலருந்தி அந்தத் தடாகத்தைக் கடந்து வனத்தில் அன்று பகலெல்லாம நடந்து அருணன் மறைந்து இரண்டரை நாழிகைக்கு அங்ஙனம் சோலையும் சாலையுமாக விளங்கிக்கொண்டிருக்கின்ற வனத்தைக் கண்டு அதற்குள்ளாக இருவரும் புகுந்து தடாகத்தினருகிலிருக்கின்ற கொய்யா விருட்சத்தினடியில் வந்து கம்பளத்தை விரித்துப்போட்டு பெரியவரையமரச்செய்து ஐயா! பெரியவரே இதோ இந்த விருட்சத்திலிருக்கின்ற கொய்யாக்கனிகளை கொய்கின்றேனென்று உரைத்துக்கொண்டு அரசனானவன் அருகிலிருக்குங் கொய்யா விருட்சத்திலேறி கனிகளாகப்பார்த்து, தனக்கு வேண்டியவளவுகொய்துக்கொண்டு அடிமடியில் பதனமாகக்கட்டிக்கொண்டு விருட்சத்தைவிட்டு பூமியிலிறங்கி தனது மடியிலிருக்குங்கனிகளில் சில கனிகளையெடுத்து பெரியவர்க்குக் கொடுத்து உண்ணும் சுவாமி

யென்று அரசனுரைத்தவுடனே, பெரியோரானவர் சிற்ப கனியை வாயிற்போட்டு பல்லாற்கடித்துப்பார்த்து இது கனியல்ல கல்லென்று மதித்து, காத்திலிருந்து அரசனை நோக்கி அப்பா சக்ரவர்த்தியே! இது வெல்லகாலும் கூழாங்கல்லுகளைக்கொண்டுவந்து கொய்யாக்கனிகளென்று என் கரத்திற்கொடுத்து இதைக்கடியென்று பரிகாசமா செய்கின்றாய், நேற்றைய இரவில் கல்லுகளைக்கொடுத்த பரிகாசத்தைப்போல இன்றிரவும் அதே கல்லுகளைத்தான் கொடுத்தனையே யென்று பெரியோரானவ ருரைத்தருளினர்.

ஆண்டியுரைத்த வாக்கியத்தைக்கேட்ட அரசனானவர் திடுரென்றெழுந்து வந்தனஞ்செய்து ஐயா பெரியவரே! மெய்யும் உண்மையாகவே யான் விருட்சத்தின்மீதிலேறிக் கொய்யும்போது கனிகளாகவே கரத்திற்கு மெதுவாகவே யிருந்தது ஆகையினாலேதான் கொய்துக்கொண்டு வந்தேன். நேற்றைய இரவு நாம் தங்கியவனத்தில் அறுத்த கனிகளும் இவ்வாறு கல்லுகளாகத்தானே யிருந்தது, இரவில் கல்லுகளாகவிருந்து பகலில் கனிகளாக இருந்தவே. இன்று பகலில் நாம் தடாகத்திவிடத்திலமர்ந்து உண்ட கனிகள் நேற்றைய இரவில் கொய்த கனிகள்தான். இதுகளை நானாக வாழிருவரும் நடந்துவந்த பாதைகளில் பார்த்துக்கொண்டுவந்த வனங்களின் விந்தையைவிட, இந்த இரண்டு நாளாகப்பார்க்கும் வனத்தின் விந்தையை யானென்னவென்றெடுத்துரைக்கப்போகின்றேன், ஐயா பெரியவரே! இனிமேலிங்கேயுந் தங்காமற்படிக்கு அதிசீக்கிரமாக நடந்து போய் கற்பகவல்லியென்னும் பெண்ணரசியைக் காணவேண்டியதாதினாலே பொழுதுடன் படுத்துத்துயின்று பொழுதுவிடிந்தவுடனே யெழுந்து பிரயாணப்பட்டுப் போகலாம் பள்ளிகொள்ளுமையாவென்று அறத்தான மகாராஜனுரைத்த மொழியைக் கேட்ட மகானானவர், வேந்தனை நோக்கி கேளாயப்பா மகாராஜனே! நீ யென்னுடன் கூடப்பிரயாணப்பட்ட நாள் முதற்கொண்டு இந்நாள் வரையிலும் நாடோறும் இரவில் என்னமோ புதுமைகளைப் பார்க்கின்றதாகவுரைத்தனையே. யானவைகளைப் பாராதவனானதினாலே நீ உன் விழியினாற் கண்டதை உனது வாக்கினாற் சொல்வாயானால், எனது செவியினால் கேட்பேனானால், விழிபார்க்கண்ட பாவனையாக வெண்ணிக்கொள்ளுகின்றேன். இத்தனை இரவுகளில் ஒரு இரவின் விந்தையைச் சொன்னாலதுவே போதுமானதப்பா அரசனே. நீ விந்தை கண்டேன் கண்டேனென்று சொல்லும் வாக்கியமானது எனது மனதைக் கலக்குகின்றதப்பா. ஆகையினாலே நேற்றிரவில் கண்ட

அதிசயத்தை யொளியாமல் வெளியிடும் பிள்ளாயென்று ஆண்டிப் பெரியோர் கேட்டருளினர்.

கேளுமையா தேவரீர் அடியேனித்தனை நாளாக இராவில் பார்த்துக்கொண்டு வருகின்ற அதிசயங்களில் யாதொரு பேதமுமில்லை முதல் நாள் பார்த்த அதிசயத்தைத்தான் இத்தனை நாளாகப் பார்த்துக்கொண்டு வருகின்றேனே யொழிய வேறொரு அதிசயங்கள் நூதனமாகக் காணவில்லை சுவாமி அந்த விந்தையைக் கூறுமென்று கேட்கின்றீரே. யானுமதை முன்னமே யுரைத்திருக்கின்றேனே. அதாவது யாதென்றால்? அந்த ரகசியத்தை வெளியிடக் கூடாதென்று சாபங் கொடுத்திருக்கின்றீர்களே யென்றுரைத்த மொழியை மறந்து விட்டீர்போல இருக்கிறது. பின்னும் பின்னும் அதைச் சொல்லும்படியாய்க் கேட்பது உமக்கு தர்மந்தானோ சுவாமியென்று இரக்கச்சொல்லாக அரசனுரைத்த மொழியைக் கேட்ட பெரியோரானவர் அறத்தாள மகாராஜனை நோக்கி கேளும் பிள்ளாய் மகாராஜனே! நீ கண்ட விந்தையை சொல்லாமற் போனாலும் போகட்டும். அதற்கு சாபங்கொடுத்தவர் நாமதேயமென்ன? என்ன சாபங் கொடுத்திருக்கின்றார்கள்? இவை இரண்டை மாத்திரம் தெரிவித்தால் அதுவே எனக்குப் போதுமானது. சிறியோனை யாட்கொளவந்த பெரியோனே கேளும் சாபமொழியையாவது சாபமிட்டோர்கள் பெயரையாவது தெரிவித்தால், அதுதான் நாம்வந்த வனங்களின் விந்தையேயன்றி வேறுமொழிகளொன்றுமில்லை ஐயனே. அதனை விரித்துரைக்க அஞ்சுதலை கொள்ளுகின்றேனே என்று அரசனுரைத்த மொழியைக் கேட்டபண்டாரமானவர் கடுஞ்சினங்கொண்டு ஏமன்னனே! கேளும் இத்தனை நாளாக உன்னை சத்தியவானென்று நம்பி இருந்தேன் இப்போதுதான் உன்னை பஞ்சமா பாதகனென்று எண்ணுகின்றேன் சீ, சீ, தூரவிலகிப் போடா துன்மார்க்கா வென்று பெரியோரானவர் கடிந்துரைத்து விட்டுப் படுத்துக்கொண்டார்.

ஆண்டிப்பெரியவர் கோபித்துக்கொண்டு பள்ளிகொண்டதை அரசன் கண்டு ஐயையோ இது என்ன காலமோ தெரியவில்லையே தெய்வமே! சமுத்திரமென்று தெரிந்து இறங்கி யிறந்தவர்களிலும் என்னைப்போன்ற மூடர்கள் எவர்தானிருக்கப் போகின்றார்கள். யானையானது தன் சிரசில் மண்ணை வாரிப் போட்டுக்கொண்ட முதுமொழியைப்போல் நமக்குநாமே விரோதியாக இருப்பதைப்பற்றி தந்தையையும், தாயையும், குருவையும் மனையாளையும், மக்களை

யும், நேயர்களையும், நொந்து குற்றஞ் சாட்டுகின்றாயே. ஏ! பாழ் மனமே உனக்கு எந்தெந்த மார்க்கத்தில் என்னென்ன மார்க்க மாக விவேக முரைத்த போதிலும், அம்மதியைக் கேளாமல் எகிரி எகிரி *மற்கடம்போல் துள்ளித்துள்ளித் துடிக்கின்றாயே. உன்னிழ விற்கு யானென்ன வென்றுதான் சொல்லப் போகின்றேனென்று, அரசனானவர் சற்று நின்று யோசனை செய்து திடமென்று குனிந்து பெரியவரின் கழுத்தில் கரத்தைப் போட்டுத் தூக்கிக் குந்தவைத்து கேளுமையா பெரியவரே யாரோ ஒரு பெண்மணியானவள் என்னி லும் மிகுரமாக தருமம் புரிவதாகத் தெரிவித்ததைப் பற்றி தேவரீரு டன் அடியேன் வருகலாயினேன் இப்போது உம்மை விட்டு நானும் என்னைவிட்டு நீரும் தனித்தனியாக வேறுபட்டுப் பிரிந்துப் போக வேண்டிய நாள் வந்துவிட்டது. ஆனகயினாலேதான் அடிமையின் மீது கோபித்துக்கொண்டீர். நல்லது ஆகிலும்பெரிதல்ல "ஜாதகமும் பொல்லாது தலைவிதியும் தப்பாது" என்று ஆன்றோருரைத்த வாக்கி யத்தைப்போலவே நடக்குமேயன்றி மற்றபடியொன்றும் நடவாது. தாங்கள் ஏன் அடியேன்மீது கோபித்துக்கொண்டீர். இதோ நான் கண்ட விந்தையைத் தெரிவிக்கின்றேன் கேளுமையா சுவாமி! ஏன் கோபங் கொள்ளுகின்றீர்கள். அந்தச்சேதியை உமக்குரைப்பேனா னால் அந்தட்சணமே நாமிருவரும் பிரிந்து தனித்தனியாக போகும் படியான துன்பம் நேரிடும் ஆனகயினாலே இதனைச் சொல்லுவதற்கு இத்தனை நாளாக அஞ்சுதலை கொண்டிருந்தேன். இன்றைக்கு நாமி ருவரும் பிரிந்துப் போகவேண்டி யிருக்கின்றதினாலே இதைத் தெரி விக்கின்றேன் கேளுமையா சுவாமியென்று அரசனானவர் கூறத் தொடங்கினார்

என்குலம் விளங்கும் பொருட்டாக குருவாய் வந்திருந்த பெரியவரே! கேளும் முதல் நாளில் அடியேன் கண்ட அதிசய மானது என்னவென்றால்? நாமந்த வனத்திற்குப் போகும்போது, அந்தத்தலை தொங்கிய வனத்திலிருந்த விருட்சங்களெல்லாம் இலை யுங் கொம்புமாக இருந்தது. நாமிருவரும் பள்ளிகொண்டதின் பின்பு, எனக்கு நித்திரை வாராமல் அண்ணாந்து படுத்து கண் களை மூடிக்கொண்டிருக்கும் போது, இரவு பதினைந்து நாழிகைக்கு, அந்த விருட்சத்தின் மீது இடி முழக்கத்தைப்போல பயங்கரமாகிய ஓசை ஒன்று கிளம்பினது. அந்த ஓசையை அடியேன கேட்டு திடுக்கென்று கண்களை விழித்துப் பார்க்கும்போது, அந்த விருட்ச

* மர்க்கடம் = குரங்கு.

மானது தேவேந்திரன் உலகத்தைப்போலவும், அந்த விருட்சத்தின் கிளைகளில், பூ, பிஞ்சு, காய், கனிகள், இலைகளொன்று மில்லாமல், கிளையொன்றுக்கு பருவப்பெண்களின் சிரசானது கழுத்தளவில் தொங்கிக்கொண்டு, கழுத்தில் உதிரம் சொட்டு சொட்டென்று வடிந்துக்கொண்டிருந்தது ஆகமொத்தம் நூறு பெண்தலைகளும், இந்தத் தலைகளுக்கு இடைநடுவில், வடிவிற் சிறந்த மாதரசியின் தலையொன்று தொங்கிக்கொண்டிருந்தது. இந்தத் தலைகளெவ்வொன்றுக்கும் ஆகாய, கந்திருவப் பெண்மணிகள் தீபம் பிடித்துக் கொண்டிருக்கவும், ஒவ்வோர் சிரசுக்கு அருகில் நான்கு எமதூதர்கள் நின்றுகொண்டு கரத்தில் இருக்கும்படியான கழியினால் ஓங்கி யோங்கி யடித்துக்கொண்டு, இங்கு கொண்டுவாடி, அவனைக்கொண்டு வாடி யென்று அடித்துக்கொண்டிருக்கும்போ தந்தத்தலைகளானது சொன்ன சொல்லுகள்தான் இடியைப்போலக்கேட்ட வோசை இந்த நூறுதலைகளும் இவ்வாறாகச்சொல்லிக்கொண்டிருக்கும்போது இடைநடுவிலிருந்த வடிவிற் சிறந்த நூற்றியோராவது பெண்ணரசியின் சிரசானது சொன்ன சேதிதான் சாபவாக்கியம் அந்த நூறு பெண்களும் இடைநடுவிலிருந்த பெண்மணியும் திடீரென்று பூமியிலிறங்கி என்னைச்சூழ்ந்துகொண்டு நடுவிலிருந்த பெண்ணரசியானவள் எனதருகில் வந்து என்னைக் கட்டி முத்தமிட்டு இந்த விருட்சத்தின் சேதியையும், எங்கள் இரகசியத்தையும் வெளிவிட்ட பேர்கள் எங்கள் நூற்றியோர் பேர்களின் கூட வந்து விடுவார்களென்று வேந்தன் விளம்பினவுடனே (ஓ கதாநேயச்செல்வச் சிரோன்மணிகளா கேளும்) அறத்தாளமகாராஜாவானவர் வனத்தின் இரகசியத்தை வெளியிட்டவுடனே அந்தக்கானகத்தில் கோடி சூரியப்பிரகாசமான அண்டத்து மின்னலைப்போல் பளிச்சென்று வெளிச்சம் பிறந்தது. அந்த வெளிச்சம் பிறந்தவுடனே ஆயிரத்தெட்டண்டங்களையு முருட்டிப்பிரட்டும்படியான வாயு கிளம்பினது சோதி மயத்தையும் வாயுவேகத்தையுங் கண் திறந்து காண முடியாமையினாலே இருவர்களும் திடுக்கென்று கரத்தினால் விழிகளை மூடிக்கொண்டார்கள்.

சிலது நேரஞ்சென்று ஒளிமறைந்து காற்று நின்றதின்பின்பு பெரியவரானவர் விழிகளைத் திறந்துபார்த்து அருகிலிருந்த மன்னனைக்காணாமையினாலே அப்பா, அறத்தாள மகாராஜனே! மகாராஜனே யென்று உரத்த சத்தமாகக்கூவியழைத்தும் அரசனைக் காணாமையினாலே அன்றிரவெல்லாம் கத்திக் கத்தி கூக்குரலிட்டு

நாமதேயத்தைச் சொல்லிக் கூவி கூவியழைத்தும் மன்னவனின்னமையினாலே ஐயையோ வென்னையோ தெரிந்துவந்து சேர்ந்திட்டதே, இத்தனை சுலபமாக இல்லாமல் இப்போது ஒளிபுகாத்துமாக பிறக்ததைப் பார்த்தால் யாரோ பெண்பாவியானவள் சாபமிட்டிருக்கின்றுளென்றுரைத்தானே அந்த சாபந்தான். சோதியுக்காரறுமாகப் பிறந்துவந்து அரசனைத் தூக்கிக்கொண்டுபோய் இருக்கவேண்டும் இல்லாவிடில் அந்த அறத்தான மகாராஜன் அரைமாத்திரைப் போதேனும் நம்மை விட்டுப்பிரிய மாட்டானே, ஐயையோ அந்தப் பாழுந்தலையானது எந்த விருட்சத்தில் தொங்குகின்றதோ நமக்குத் தெரியவில்லையே இத்தனை நாளாக இந்த வனங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தும் இந்த வனங்களின் அதிசயத்தைக் காணவில்லையல்லவா நல்லது அதிசயம்பார்க்காவிட்டால் அதைப்பற்றியொன்றும் பழுதாகப்போகவில்லை. ஐம்பத்தைந்து தேசத்தையும் அரசாட்சிசெய்யும்படியான அதிபதியைப் பாழும் பெண்கள் தூக்கிக் கொண்டுபோய் விட்டார்களே இதற்கென்ன செய்வது இப்போக்கொத்த தருமபுருடனை யெந்தகாலத்தி லெவ்விடத்தில் கண்டுபிடித்துப் பேசப்போகின்றோம் ஐயையோ அந்த மன்னனானவன் பட்டணத்தில் அரசுபுரிந்துகொண்டிருந்தாலும இருப்பானே அந்தப் புண்ணியவானுக்கு எமனைப்போல நாம் சேதஞ்செய்து அழைத்துக் கொண்டுவந்து இந்த வனத்தில் விட்டு விட்டோமே இதற்கென்ன செய்குவோமென்று அன்றிரவெல்லாம், அந்த வனமுழுமையுஞ் சுற்றிப்பார்த்துக் கூவிகூவி யழைத்து கெஞ்சலைந்து காவறண்டு சக்கிரனுதயத்திற்கு முன்னம் இருவருந்தங்கி யிருந்த விடத்திற்கு வந்து கம்பளத்தை விரித்துப்போட்டு பள்ளிகொண்டு பெரியோரானவர் நித்திரைபோய் விட்டார்.

விந்தையைக் கண்ட ஐக்காரகாலிரவில் வேந்தனை யிழந்துவிட்டுப் பெரியோரானவர் பொழுது விடிந்தவுடனே யெழுந்து மலசலங்களை விலக்கி தேகசேஷ்டைகளைக் குறைவின்றி நிறைவேற்றி பரமனடியைப் பற்பலவாறாகத் துதித்து தோத்திரஞ்செய்து தொழுதெழுந்து அப்பா அறத்தான மகாராஜனே பாவியாகிய வென்னைத் தனியே விட்டுப்போய்விட்டாயே. நீ யெங்கேயிருக்கின்றாயென்று உன்னை நான் கண்டு பிடிக்கப்போகின்றேன். எவளோ பெண்பாவியானவள் சாபங்கொடுத்தாளென்று வுரைத்தனையே அந்தப் பெண்ணிருக்குமிடத்தைத் தெரிவிக்கவில்லையே எந்த விடங்கண்டுபோய் உன்னைத்தேடுவேன், எவ்வாறு உன்னுடன் கூடுவேன், அப்பா சக்

கரவர்த்தியே யெங்ஙனமிருக்கின்றாயோ? என்ன துன்பத்திற் சிக்கிக் கொண்டாயோ? தெரியவில்லையே. அப்பா மகாராஜனே உன்னைக் கொல்லும்பொருட்டாக வந்த எமன் நானேயன்றி சூரியன் புதல் வருகிய எமதரும மகாராஜனல்லவேயல்ல. ஐயையோ பூமண்டலாதிபதியே! இந்தக்கதிக்கு நானே இந்தப்பாவியுடன் கூடத்தொடர்ந்து வந்தது. அப்பா இராஜாதிராஜனே! உன்னுடைய தருமநிலையைச் சோதிக்கும்பொருட்டாக வந்தபாவியானவன், உன்னை யிழுத்துக் கொண்டு வந்து இந்தகதிக்கு ஆளாக்கிவிட்டனன். ஓம் அபயமென் போர்களைக் காக்குந் தயாநிதியாகிய பரம்பொருளே! அந்த நூற்றியொரு பெண்களும் மானிடப்பெண்களோ! தெய்வப்பெண்களோ! அரக்கர் மாதர்களோ! அவர்கள் இன்னார்களென் றெனக்குத் தெரியவாதே. என்ன செய்குவேன். கடவுளே யென்று பெரியவரானவர் ஏக்கங்கொண்டு முகவாட்டத்தோடு மூட்டைமுடிப்புகளைத் தூக்கிக் கொண்டு அந்த வனத்தைக்கடந்து வெளியில் வந்து தனது மனம் போன போக்காக அன்று பகலெல்லாம் வழிநடந்து பகலில்தானே காய்கனிகளை யருந்தி உண்டுகொண்டு கதிரோன் மறையுந்தருணத்தில் சோலையும் சாலையுமாகத் தென்பட்ட ஒரு வனத்திற்குள்ளாகப்புகுந்து, அங்கனமிருக்கின்ற ஆலாவிருட்சத்தினடியிற் படுத்துக்கொண்டிருந்து இரவு பத்துநாழிகையானவுடனே எழுந்து குந்திக்கொண்டு மரத்தை யண்ணாந்து பார்ப்பதும் குனிவதுமாகப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, இரவு பதினைந்து நாழிகை யாகினவுடனே கணீல் கணீலென்று மணியோசையொன்று ஆலாவிருட்சத்தின்மீது கிளம்பியது. அந்த வோசையைக்கேட்ட பெரியோரானவர் திடுக்கென்று மரத்தை யண்ணாந்து பார்த்து நடுநடுங்கி மனது கலங்கி விழிசிமிட்டாமல் விருட்சத்தையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

(கேளீர் சுகாநேயச் செல்வச் சிரோன்மணிகளே) இதற்கு முன்னம் கிழவனுடன் சக்ரவர்த்தி வந்து படுத்துக்கொண்டிருக்கும்போது வனத்தில் விளங்கிய அதிசயத்தையும் விந்தைகளையும் அரசன் மாத்திரம் தினந்தோறும் பார்த்துக்கொண்டு வந்ததென்ன பெரியோரின் கண்களுக்கு ஒரு நாளுங்காணப்படவில்லை, ஒருநாளுஞ் செவியினால் கேட்கவுமில்லையே யென்று சந்தேகங்கொள்ளுவீர்களல்லவா. அதேனித்தனைநாள் கிழவனுக்குத்தோன்றாமலிருந்ததென்றால், இருபது வயதிற்குள்ளாகவும் திருமணம்புரியாமலும் மாதரிடங் கலவித்தொழில் புரியாமலிருப்பவனெவனோ அந்த

ஆண்பிள்ளைக்கு மாத்திரம் இந்த வனத்தின் விந்தைகள் விளங்கு
மேயன்றி மற்றவர் கண்களுக்கு விளங்காதனவைகப்பற்றி, முன்னம்
கிழவனுக்குத்தென்படவில்லையென்பார்களே யென்றுரைத்தேன்
ஆம் ஆம் முன்னம் தென்படாத கிழவனுக்கு இன்றிரவு மாத்திரம்
எவ்விதமாகத்தோற்றப்பட்டது. அந்தச்சங்கையை நிவர்த்திசெய்யு
மென்று கேட்பீரல்லவா, நல்லது சக்ரவர்த்தியானவர் பிரிந்துபோய்
விட்டாரே அந்தப்புண்ணியவானவர் இப்போது வந்திருக்கிறார்
அதற்காகத்தான் விருட்சத்தின் அதிசயங்கள் பெரியவருக்குத்
தோற்றுகின்றது.

கதிரைவேற் பண்டாரமானவர் விருட்சத்தை யுற்றுப்பார்த்
துக்கொண்டிருப்பது எதற்கென்றால், முன்னம் தொங்கிக்கொண்
டிருந்தவாறுபோலவே நூறு தலைகள் தொங்கிக்கொண்டிருக்கவும்,
அதற்கு இடைநடுவிலிருக்கின்ற வடிவில் மிகுந்த தலையுடன்கூட
அணைந்துபடுத்ததைப்போலாக வலது பக்கம் அறத்தாளமகாராஜ
னின் சிரசும், இடது பக்கம் அந்த வடிவாசியின் சிரசுந்தொங்கிக்
கொண்டிருக்கின்றதை ஆண்டிப்பெரியோர் கண்டு, ஐயையோ ஞான
புரத்து இளவரசச்சக்ரவர்த்தியே! ஓ அறத்தாளமகாராஜனே! உன்
னைவெட்டி உன் சிரசை மரத்தில் கட்டிவைத்தவர்கள் யாரோ தெ
ரியவில்லை, நீ எது குற்றஞ்செய்தாயென்று உனது கழுத்தைவெட்டி
னசண்டாளர்கள் யாரோ யானறியேனே. உன் பக்கத்திலிருக்கின்ற
மாதுசிரோன்மணியானவள் யாரோ அவளும் உன்னைப்போலவே
வெட்டுண்டிருக்கின்றளே. ஐயையோ உங்களைச்சுற்றிலும் நூறு
சிரசுகள் தொங்குகின்றதே, இதென்ன அநியாயமோ தெரியவில்லை.
அந்தத் தெய்வத்திற்குக்கூட கண்ணில்லையா. ஓ ஜெகதீசா! எங்ஙன
மிருக்கின்றாயோ வென்று கிழவனானவர் மன்னன் தலையைக்கண்டு
பிரலாபித்துக்கொண்டிருக்கும்போது. சக்ரவர்த்தியின் சிரசானது
வாய் திறந்து ஐயா பெரியவரே! வேண்டாமென்றால் கேட்பீரா. இப்
போது படுந்துன்பத்தைப் பார்த்தீரா. நான் கண்ட விந்தையை யுன்
னிடத்தில் சொன்னதற்காக இந்தகதிக்கு ஆளாகிநிற்கின்றேன்.
இப்போது தேவரீரும் நேரிற்கண்டு விட்டீராகையினாலே, இந்த இர
கசியத்தை மானிடர்களுக் குரைப்பீரானால், என் கதிதானுமக்கு
மென்றுரைத்துவிட்டுத் திடீரென்று நூற்றிரண்டு தலைகளும் மறைந்
துபோய் விட்டது. தலைகளெல்லாம் மறைந்துபோய்விட்டதை,
ஆண்டிப்பெரியோர் கண்டு ஓர் பாகம் களிப்பும், மற்றொருபாகம்
துக்கமுமாக அந்த விருட்சத்தடியில் கம்பளத்தைப்போட்டு அதன்

மேற் படுத்து நித்திரை செய்து பொழுதுவிடிந்தவுடன் எழுந்து நித்திய கடமைகளை முடித்துக்கொண்டு வழிபடுங்கடவுளடியை வணங்கித் தொழுதெழுந்து, காய் கனிகளைக்கொய்து உண்டுவிட்டு மூட்டையைத் தூக்கித் தலையின் மீது வைத்துக்கொண்டு, அந்தவனத்தைக் கடந்து காடு கானகங்களில் நடந்து, அன்று மாலை யிருபத்தைந்து நாழிகைக்கு சோலையுஞ் சாலையுஞ் சூழ்ந்த வனத்திற்குள்ளாகப் புகுந்து தன்னிடமிருந்த கனிகளைப் புசித்துவிட்டு, அன்றிரவு அங்ஙனமே கழிந்துவிடும்படியா னினைவுகொண்டு, இரவுவந்தவுடனே கம்பளத்தை விரித்துப்போட்டு படுத்துக்கொண்டு நித்திரைவாராமல் பெரியவர் விழித்துக்கொண்டிருந்தார். பண்டாரமானவர் விழித்துக்கொண்டிருக்கும்போது இரவு பதினைந்து நாழிகைக்குப் பழையபடியே தலைகள் கொலுவந்து விட்டது. பெரியவர் கண்டு சக்ரவர்த்தியின் சிரசை நோக்கி ஐயா அறத்தாள மகாராஜனே! உன்னை வெட்டிவைத்தவர்கள் யாரோ தெரியவில்லையே. அப்பா அரசனே யெந்தக்காலத்தில் நான் உந்தன்னோடு கூடிக்கலந்து பேசுவாயோவென்று கிழவன் கதறிப் புலம்பும்போது, வேந்தன்தலையானது விளம்புகின்றது. கேளுமையா பெரியவரே! இந்த ரகசியத்தைப் பிறருக்குரைப்பீரானால் யானனுபவிப்பதைப்போல் தாங்களும் அனுபவிக்கவேண்டியதென் றுரைத்தவுடனே தலைகளெல்லாம் மறைந்துப் போய்விட்டது.

நூற்றிரண்டு சிரசுகளும் மறைந்துபோனதின் பின்பு, பெரியவரானவர் கண்களை மூடி அயர்ந்து துயின்றுவிட்டார். கதிரைவேற்பெரியோரானவர் பொழுதுவிடிந்து விழித்தெழுந்து மலசலாதிகளை விலக்கி காற்கரங்களும் வாக்கு திருமுகமும் சுத்திசெய்துக்கொண்டு தனதுகரத்திற் கெட்டிய காய்கனிகளைக் கொய்து உண்டுவிட்டு வேண்டியவளவும் கனிகளைப்பறித்து, மூட்டையில் கட்டிக்கொண்டு மூட்டையை யெடுத்துச் சிரசில் வைத்துக்கொண்டு அந்த வனத்தைக்கடந்து நடந்து வருகும்போது பெரியவரானவர் யோசனை செய்துக்கொண்டு வருகின்றார். அதென்ன யோசனையென்றால் சக்ரவர்த்தியானவன் பிரிந்துபோனவனத்திலும் வெட்டுண்ட தலையாக கிளையில் கட்டப்பட்டிருந்தான். நேற்றையதினம் வேறொரு வனத்தில் வந்து தங்கியிருக்கும்போதும் அங்ஙனமிருந்த ஆலாவிருட்சத்திலும் பெண்கள் சிரசுடன் மன்னன் சிரசுந் தொங்கிக்கொண்டிருந்ததல்லவா. நல்லது இன்றையதினம் தங்கும்படியான விருட்சத்தி லிருக்கின்றனவா இல்லையா சோதித்தறிய வேண்டுமென்று

எண்ணமிட்டுக்கொண்டு அன்று மாலையில் விருட்சங்கள் சூழ்ந்து விளைந்திருக்கின்ற ஓர் வனத்திற்குள்ளாகப் புகுந்து இராவு தோன்றியவுடனே ஓர் புன்னைமரத்தடியில் சென்று கம்பளத்தை விரித்துப்போட்டு அதன் மீதிலமர்ந்து மூட்டையில் வைத்திருக்கின்ற கனிகளை யெடுத்துப் புசித்து களையாறி இன்றைய இராவிற்கு இந்தப் புன்னைமரத்தில் தலைகள் தொங்குகின்றதா. இல்லையா கண்டறிய வேண்டுமென்று பெரியவரானவர் அண்ணாந்து படுத்து விழித்துக்கொண்டு விருட்சத்தைப்பார்த்துக்கொண்டிருக்கும்போது, பழையபடியே பதினைந்து நாழிகைக்குத் தலைகளிருக்கவும், மன்னன் தலையைக் கண்டு கிழவன் முறையிடவும், மன்னன் தலையானது சாபங்கொடுத்து விட்டுச் செல்லவும், பண்டாரம் படுத்துக்கொண்டிருந்து பொழுது விடிந்தெழுந்து பழையகடன்களெல்லாம் முடித்துக்கொண்டு அந்த வனத்தையுங்கடந்து போகும்போது, அங்ஙனம் ஆடு மாடு மேய்த்துக்கொண்டிருக்கின்ற கிழவனைப்பண்டாரங் கண்டு ஐயா பெரியவரே! இங்ஙனம் வாருமென்றழைத்து அந்தக் கிழவனை நோக்கி கேளுமையா பெரியவரே! தாங்களிருப்பது எந்தவூர்? தங்கள் நாமதேயமென்ன? மரபென்ன? தயைசெய்து கூறுமையா வென்று பண்டாரங்கேட்கும்போது கிழவன்மொழிகின்றான்.

கேளுமையா பண்டாரமே அதோ தெரிகின்றதே வியாசர்பாடி யென்கின்றவூர் அந்த வூரில்தான் யான் குடியிருப்பவன். யானோ ஆயர் குலம் எனது நாமதேயம் பரசுராமக்கோனென்று கூறுவார்கள். ஐயா பண்டாரமே, தாங்களெந்த வூரிலிருந்து எங்கே போகின்றீர் உமது நாமதேயமென்ன? உமது மரபென்ன வென்று ஆயர்கிழவன் கேட்கும்போது ஆண்டிப்பெரியோர் கூறுகின்றார். கேளாயப்பா ஆயர்குலாதிபனே நானோ பண்டாரவம்சம். எனது நாமதேயம் கதிரைவேற் பண்டாரமென்று கூறுவார்கள். நான் சில நாளைக்கு முன்பு ஞானபுரமென்னும் பட்டணத்திற்குத் தானம் வாங்குவதற்காகப்போயிருந்தேன். அந்த மன்னனிடத்தில் விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களெல்லாம் பரிசு பெற்றுக்கொண்டு திரும்பும்போது மன்னவன் எனது பாழுங்கண்ணிற்கு எதிர்ப்படவும், நானவனைச் சோதிக்கவும், அவனது இடது கரத்தை வெட்டியெனக்குக்கொடுக்கவும் பின்னும் வலது கரத்தினால் அவனுக்குமெனக்கும் சம்பந்தமாகியென்றேகூட தேசயாத்திரை செய்வதற்காக நினைவு கொண்டு வந்த மகாராஜனைக்கொன்றுவிட்டு வந்தேன். ஆகையினாலே யெங்கேயாகிலும் சென்று எமது பாபத்தையு

மொழித்துவிடலாமென்று நினைவுகொண்டே போகின்றேனப்பா வென்று ஆண்டிப்பெரியோரானறைந்த வாக்கியத்தை ஆயர்குலாதிபன் கேட்டு ஐயா பண்டாரமே! யான் ஆடு மாடுகளை யோட்டிக் கொண்டு போகும்போது என்னுடன்கூட வந்து இன்றிரவு நமது மனையிற்றங்கி யிருந்து இளைப்பாறி, நாளையதினம் உமது மனதின் போல நடந்துகொள்ளும் சுவாமி, எதோ அந்த மூட்டையைத் தாருங்கள் யானெடுத்துக்கொள்ளுகின்றேனென்று கேட்டு மூட்டையை வாங்கி ஆயர்கிழவன் சிரசில் வைத்துக்கொண்டு ஐயா பண்டாரமே! யாரோ ஒரு ராஜாவை யிட்டுக்கொண்டு வந்து தோற்றுவிட்டேனென்றுரைத்தனையே சூதாடியா தோற்றுவிட்டாய்? அல்லது கணிகைமார்களுக்கா தோற்று விட்டனை. ஐயா ஆயர்குலத் தலைவனே கேளும் ஞானபுரிபட்டணத்தை யாளப்பட்ட இளவரசனான அறத்தாள மகாராஜனும் யானும் காசியாத்திரை போவதற்காக பிரயாணப்பட்டு இன்றுடனே பதினாறு தினங்களாகின்றது அரசனென்னைவிட்டு பிரிந்து இன்றோடு ஐந்து நாள்களாகின்றது அந்த மகாராஜனைப் பிரிந்தநாள் முதல் கொண்டு இன்னோ பரியந்தம் என் மனமானது நீபிற்பட்ட கிருமியைப்போல் துடிதுடித்து வருகின்றதையனே யென்று ஆண்டிப்பெரியோருரைத்த மொழியைக்கேட்ட கிழவனானவன் பண்டாரத்தை நோக்கி கேளுமையா பெரியவரே உம்மைவிட்டு மன்னவன் பிரிந்து ஐந்துநாளாகின்றதென்கின்றீரே அந்த வேந்தனானவர் உம்மைவொண்டியாக விட்டு எங்ஙனமோடிப்போய் விட்டார். சொல்லுமையா பண்டாரமே இதோ மாடுகளை யெல்லா மடக்குகின்றேன். நாமும் மனைக்குப் போகும்படியான நாழிகையாகி விட்டது. உன்னோடுகூட வந்த அரசனானவன் எவ்வாறாகப் பிரிந்துப்போனான். அதனை யெனக்குத் தெரிவிப்பீரானால் அந்த மன்னன் உம்மிடத்திறகு வந்து சேரும்படியான யோசனை சொல்லுகின்றேன் அல்லது அந்த அரசனிருப்பிடத்துக்குநானுகிலுஞ்சென்று அழைத்துக்கொண்டு வருகின்றேன் உனது வேந்தன் சென்றவிடத்தை விளம்புமையா பெரியவரே யென்று ஆயர்க்குலாதிபனான கிழவன் கேட்டருளினான்.

ஆயர்க்குலத் தலைமகனாகிய கிழவன்கேட்கும்போது பண்டாரப் பெரியோரானவர் ஆயர்க்குலாதிபனை நோக்கி ஐயா எனது மன்னனான அறத்தாள மகாராஜன் சென்றவிடம் எனக்குத்தெரியவாராது அந்த வேந்தன் பிரிந்த நாள்முதல் கொண்டு இரவு பதினைந்து நாழிகைக்கு அவனது முகதரிசனத்தை யாத்திரை மெனக்குக்

காண்பித்துக்கொண்டு தாலியில் நின்றுக்கொண் டிருக்கின்றனே யொழிய எனதருகில் வந்து என் கரத்தைப் பிடித்து யாதொரு வார்த்தைகளும் பேசவில்லையையனே நேற்றைய யிரவு நடுச்சாமத் திலும் மன்னன் முகத்தைக்கண்டேன் அன்னவன் பெருந்துன்பத் தில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றபடியினாலே என்னிடத்தில் யாதொரு வார்த்தைகளுங் குளிரப்பேசவில்லையையனே இதற்கு யானென்ன செய்குவேன் மன்னனை யெந்த காலத்தில் சந்தித்துப் பேசப்போகிறேனென்று ஆண்டிப்பெரியோர் துக்காக்கிரந்தனுக வுரைத்த வாக்கியத்தை ஆயர்க்கிழவன்கேட்டு ஐயா! பண்டாரமே நேற்றைய யிரவுகூட வுமது மகாராஜனைக் கண்டதாக வுரைசெய் தீரே. எனப்பொழுதே அழைத்துக்கொண்டுவந்து விடுகின்றது தானே விட்டுவிட்டு வந்து இங்ஙனம் புலம்புகின்றீரே நல்லது அந்த அரசனனவன் இப்போதெங்கிருக்கின்றான் தெரிவிப்பீரானால் இதோ நான் சென்று அந்த வேந்தனை அழைத்துக்கொண்டு வரு கின்றேன் அன்னவனின் இருப்பிடத்தை மாத்திரம் சொல்லுமையு யாவென்று ஆயர்க்கிழவன் கேட்கும்போது ஆண்டிப்பெரியவர் கூறுகின்றனர்.

கேளுமையா பெரியவரே அந்த மன்னவனிருப்பிடத்தைச் சொல்லவும் போகாது நான் சொன்னபோதிலும் தாங்கள் போவத ற்குங்கூடாது. அல்லவென்று அந்த ரகசியத்தை யானெடுத்துரை ப்பேனுனல் அந்த அரசனுக்கு வாய்ந்த கதியானது எனக்கும் வந் து லபிக்குமாகையினாலே அதனை கேட்கவேண்டாம் ஆடுமாடுகளை மடக்கிக்கொள்ளுமையா அந்திகாலமாகின்றது. எனக்கோ குளி ரெடுக்கின்றது சுருக்காக மனைக்குப்போகலாம் வாருமையாவெ ன்று பண்டாரப்பெரியோ ரழைக்கும்போது பண்டாரத்தை நோக் கிக் கேளுமையா பண்டாரமே அறத்தாள மகாராஜன் இருக் கின்ற விடத்தைச் சொல்லலாகா தென்கின்றீரே அதைச் சொன்ன போதிலும் அவ்விடத்திற்குப் போவதற்கு ஒருவராலும் முடி யாதென்றுங் கூறினீரே அது எந்தயிடம் அந்த இடத்தைச் சொன்னல் அதினாலே யென்ன திங்குவந்து சேரிடும். அந்த அரசனிருக்கின்ற விடத்தை யெனக்குத் தெரிவிப்பாயானல் அதெப்பேர்க்கொத்த விடமாகயிருந்தபோதிலும் இந்தட்சணத்தில் யான் சென்று அந்த அறத்தாள மகாராஜனைக் கையும்பிடியுமாக நொடிக்குள்ளாக அழைத்துக்கொண்டுவந் தும்மிடத்தில் சேர்ப்பிக் கின்றேன் அந்த விடத்தைமாத்திரம் கொஞ்சம்போதெனக்குக்

தெரியப்படுத்துமையா வென்று ஆயர்க்கிழவனுகிய பரசுராமக்கோனர் வினவினர் இடக்கிழவன் கூறிய மொழியை ஆண்டிப்பெரியோர்கேட்டு ஐயா ஆயர்த்தலைவனே கேளும் ஏன்வீணுகப் பிடிவாதம் செய்கின்றாய் அந்தவிடத்தை நான் தெரிவிப்பேனுனல் இந்த மண்ணுலகிலிருக்கமாட்டேன். அதுவுந்தவிர அந்தட்சணமே யெனக்கு துன்பம் வந்து அணுகும் அந்த விடத்தைத் தாங்கள்கேட்டபோதிலும் அவ்விடத்திற்குப் போவதற்கு உம்மாலுமெம்மாலும் இன்னும் மற்றவர்க ளெவர்களாயிருந்தபோதிலும் சரியே அங்ஙனம் போவதற்கு எவர்களாலு மேலாகாதயனே ஆகையினுலே நீவிரேன் வீணுக அதனைக் கேட்கின்றீர் மாடுகளையோட்டுமையா மனைக்குப்போவோமென்று கதிரைவேற் பண்டாரமுரைத்த சேதியை மாடு மேய்த்துக்கொண்டிருக்கின்ற கிழவன்கேட்டு ஓய் பண்டாரமே யென்னகாணும் அந்த அரசன் சென்றிருக்கின்ற விடத்தையெனக்குச் சொல்லப்போகாதென் றுரைக்கின்றாயே அந்த இராஜன்போன விதத்தைச் சொல்லாதவனுக்கு இங்ஙனமென்ன வேலை யென்னிடத்தி லென்னபேச்சு போங்காணும் உனது காரியத்தைப் பார்த்துக்கொண்டு போம்போமென்று அதட்டி தலையில் வைத்துக்கொண்டிருந்த மூட்டையை விசிறி யெறிந்து இதோ வுன்மூட்டையை யெடுத்துக்கொண்டு போங்காணும் பண்டாரமே யென் றுரைத்துவிட்டு டைபேரோ டைபேவென்று ஆடுமாடுகளை மடக்கிக்கொண்டிருந்தான். ஆயர்க்கிழவன் அறைந்தவுரையைப் பண்டாரங்கேட்டு இதேது மோசமாகக்காண்கின்றது. இந்த ஆயர்க்கிழவனுனவன் நமது மீது கோபங்கொண்டு மூட்டையை யெறிந்துவிட்டுப் போகின்றானே இதற்கென்னசெய்குவோமென்று மூட்டையை யெடுத்துத் தனது தலையின்மீது வைத்துக்கொண்டு படபடவென்று நடந்து கிழவனுக்கருகில் வந்து கிழவனது கரத்தை ஆண்டிப்பெரியோர் பிடித்துக்கொண்டு ஐயா பெரியவரே ஏனிவ்வளவு கோபங்கொள்ளுகின்றீர். மகாராஜன் சென்றிருக்கின்ற விடத்தை அறிவிக்கின்றேன். கவனமாகக் கேளுமையா வென்று மூட்டையை ஆயர்க்கிழவன் கரத்திற் கொடுத்துவிட்டு ஆண்டிப் பெரியோரானவர் வனத்தினிரகசியத்தைக் கூறத்தொடங்கினர்.

கேளுமையா பெரியவரே நானும் அறத்தாள மகாராஜனும் ஞானபுரிப்பட்டணத்தை விட்டு எட்டுநாளிரவும் பகலுமாக நடந்து ஒன்பதாநாள் மாலையில் தலைதொங்கி வனமென்றொரு வனமுண்டு அந்த வனத்திற்கு நாங்களிருவர்களுஞ் சென்று அன்றிரவு அந்த

வனத்தில் ஓர் மாமரத்தடியில் படுத்திருந்து விடிந்தவுடனே இராஜாவானவன் இரவிலேதோ புதுமையைக் கண்டேனென்று என்னிடஞ் சொல்லிக்கொண்டிருந்தான். நான் அம்மொழியை யென்னமோ போவென்று அலட்சியஞ்செய்துவிட்டு அன்றிரவும் மறுநாளிரவுமாக மூன்றுநாளந்த வனத்திலிருந்து நான்காநாள் வெளிப்பட்டு வேறொருவனத்தில் வந்து தங்கியிருந்தோம். அந்த வனத்திலும் மகாராஜன் யேதோ விந்தையைக் கண்டதாக பெரும்பிரதாபமாகச் சொல்லிக்கொண்டிருந்தான் யான் மன்னனை நோக்கி நீ கண்ட அதிசயத்தை யெனக்குத் தெரிவிக்கவேண்டும் பிள்ளாயென்று கேட்டனன். அதற்கு வேந்தன் விளம்பினதாவது ஐயாபெரியவரே வனத்தினிரகசியத்தை வெளிவிட்டால் நீயும் நானும் தனித்தனியாகப் பிரிந்து விடும்படியாக சாபம் பிறந்திருக்கின்றதென்று வெகு நாளாக வெனக்குத் தெரிவிக்காமலிருந்தான். இந்தப்பாவியாகிய யான் பிடிவாதஞ்செய்து கேட்டதைப்பற்றி அந்த வனத்தின் இரகசியத்தைப் புண்ணியவான் சொன்னவுடனே திடீரென்று ஒரு சோதியானது பிறந்து அந்த சோதியுடன்கூட பிரமாண்டமாகிய வாய்வுகிளம்பி மணல்களை யெல்லாங் கீழ்மேலாகப் பிரட்டிக்கொண்டு வருகும்போது நானும் மன்னனும் கண்களை கரத்தினால் மூடிக்கொண்டோம் இரண்டு நாழிகைகழித்து ஒளியும் காற்றும் விலகினதின் பின்பு எனதருகிலிருந்த அரசனில்லாமையினாலே யான் மனது கலக்கங்கொண்டு அந்த வனத்தைக் கடந்து நடந்து வேறொரு வனத்திற்கு வந்து நித்திரை வாராமல் விழித்துக்கொண்டிருக்கும்போது இரவில் பதினைந்து நாழிகைக்கு அறத்தாள மகாராஜனின் வார்த்தைக்குரலோசையைக் கேட்டு உற்றுப்பார்க்கும் போது உடலில்லாமல் அரசனின் சிரசுமாத்திரம் கழுத்தளவில் வெட்டுண்டு உதிரம் வடியக்கண்டேனையா ஆயர்குலாதிபனே யென்று ஆண்டிப்பெரியோரறைந்த வுரையைக்கேட்ட ஆயர்கோமான் கூறுகின்றான்.

கேளுமையா பண்டாரமே அறத்தாள மகாராஜன் வெட்டுண்டு கழுத்தளவில் சிரசுமாத்திரங் கண்டதாக வுரைத்தருளினீரே உங்கள் வேந்தனை வெட்டினவர்கள் இன்னார்களென்றனைக்குத் தெரியவாராதோ வல்லது உடலில்லாமல் சிரசுமாத்திரம் எவ்வாறாக வும்மிடத்தில் வார்த்தையாடினது அந்த சிரசானது என்னவார்த்தை சொன்னது வெட்டுண்ட சிரசைத் தாங்கள் எந்தவிடத்திற் கண்டீர்கள். இப்போது மன்னன் சிரசானது எங்ஙனமிருக்கின்றதோ இவை

களையெல்லாஞ் சிந்தித்து ஆய்ந்தறிந்து எடுத்துரைப்பீரானால் அதன்பின்பு நடக்கவேண்டிய காரியத்தை யோசித்து நடாத்திக் கொள்ளலாங் கூறுஞ்சுவாமியென்று ஆயர்த்தலைவனோதிய சொற்களைக்கேட்ட கதிரைவேற்பண்டாரங் கூறுகின்றார்.

கேளுமையா ஆயர்ப்பெருமானே மன்னவனை வெட்டினவர்கள் இன்னாரென்றெனக்குத் தெரியவராததாகையினாலே, அரசனின் சிரசானது இந்த நான்கு நாளாக நான் தங்கும்படியான விடத்திற் கெல்லாம் வந்துங்கொண்டிருக்கின்றதேயொழிய, உடலோடு மன்னனைக் காணவில்லை. அதிலும் அந்தச் சிரசானது நூறு முழம் தூலையில் மேல் மார்க்கத்தினின்று வசனிக்கின்றதேயன்றி எனதருகில் வந்து யாதொரு மொழியுங் கூறவில்லை. அந்தத் தலையானது இரவு பதினைந்து நாழிகைக்குத் தோற்றப்பட்டு வார்த்தையாடிக் கொண்டிருந்து பதினாறு நாழிகைக்கெல்லாந் திடீரென்று மறைந்துப்போய்விடுகின்றது. இந்த விந்தையான சேதியை யான்பிறந்து இதுகாலபரியந்தம் பெரியோர்களுரைக்க எனது செவிகளினால் கேட்டதுமில்லை. வேத நூற்களோதவும் விழிகளினாற் கண்டு வாசித்ததுமில்லை. ஐயா பெரியவரே எங்களரசன் சிரசானது உரைக்கின்ற வாக்கியமாவதென்னவென்றால், இங்ஙனம் நீ கண்ட இரகசியத்தைப் பிறருக்குரைப்பாயானால், எனக்கு நேர்ந்த கதி யுனக்கும் வாய்க்கும் வாய்க்கும், சொல்லாதே சொல்லாதே, செல்லும் செல்லுமென்று சொல்லிவிட்டு திடீரென்று மறைந்துப்போய்விடுகின்றது. ஆகையினாலே அரசனின் சிரசிருக்குமிடத்தை யுரைப்பேனானால் வேந்தனுக்குற்ற வினையானது எனக்கும் லபிக்குமாகையினாலே தாங்கள் பிடிவாதஞ்செய்து வினாவிய மார்க்கத்திற்காக அந்த இரகசியத்தில் சிலவற்றையெடுத்து இதுநேரபரியந்தம் விடிவித்துரை செய்தேன். அரசனின்சிரசிருக்குமிடத்தை யுரைக்கலாகாதையனே பொழுது மறையும்படியான வேளையாய்விட்டது. சுருக்காக ஆடுமாடுகளை மடக்குவீரானால் வீடுபோய்ச் சேர்ந்து அங்ஙனம் சகல சேதிகளையும் பேசிக்கொள்ளலாமென்று ஆண்டிப் பெரியோரானவர் அறைந்தருளினர்.

முதியவராகிய கதிரைவேற் பண்டாரமுரைத்த வாக்கியத்தைக் கேட்ட ஆயர்க்கிழவன் பெரியவரை நோக்கி கேளுமையா சுவாமிப் பண்டாரமே இதுநேர பரியந்தம் நீவிர் கூறிவந்த வாக்கியத்தைக் கேட்ட எனது மனதானது ஆனந்தக்கடலில் விழுந்து வீசிப்புரளு

கின்றமையினாலே உங்களரசனின் சிரசிருக்குமிட மொன்றைமாத்திர முரைசெய்வீரானால் இதோ ஆடுமாடுகளை மடக்குகின்றேன். மனைக்குப் போகலாமையா வேந்தன் தலையிருக்கின்ற விடத்தை விளம்புஞ் சுவாமியென்று ஆயர்க்கிழவன் வினாவினான்.

கோனார் குமாரன் கூறிய மொழியைக்கேட்ட ஆண்டிபானவர் அந்தோ! இதென்ன விநாசகாலமாக விளங்குகின்றதே. இந்தக் கிழவனானவன் நமக்குச் சனியனாக வந்து வழிமறித்துக்கொண்டானே. இன்னவனை விட்டு விலகிப்போகலாமென்று பார்த்தாலும் வனாந்திரமாகிய காடாக விருக்கின்றதே. இதற்கென்ன செய்குவோம். நல்லது "அன்றெழுதினவன் அழித்தெழுதப் போகிறதில்லை" அதிலும் "விதியை மதியினால் வெல்லலாம்" என்று ஆன்றோர்களறைந்திருக்கிறார்களல்லவா. நல்லது வருவது வந்தே தீருமாகையினாலே சர்வத்திற்கும் ஜெகதீசுரனிருக்கின்றார் என்று சற்றுநேரம் தனக்குள்ளாகத்தானே ஆய்ந்துபார்த்து இடக்கிழவனை நோக்கி ஐயா ஆயர்குலப்பெருமானே! கேளும் எனதாசனின் சிரசிருக்கின்ற விடத்தைத் தெரிவிக்கின்றனன். இரவில் யாமெந்த விருட்சத்தடியில் பள்ளிகொள்ளுகின்றோமோ அந்த விருட்சத்தில் இரவு காலங்களில் பூ பிஞ்சுகளும், காய்கனிகளும் இலைகளும் இராமற்படிக்குக் காய்ந்து உலர்ந்து தீய்ந்த விருட்சத்தைப்போல கிளையுங் கொம்புமாகவிருந்து, இரவுபதினைந்து நாழிகைக்கு ஒவ்வொரு கிளைகளிலும் பருவப்பெண்களின் சிரசானது கழுத்தளவில் வெட்டி கிளைகளில் கட்டித் தொங்குகின்றது. அந்தத் தலைகள் மொத்தத் தொகை நூறுக்குக் குறையாமற் கூறலாகுந்தவிர, அந்தத் தலைகளின் இடை நடுவில் வடிவிற்சிறந்த பெண்மணியின் சிரசொன்று தொங்குகின்றது. அந்தப்பெண்ணின் சிறந்தாள் தலையுடன்கூட ஒத்துப் படுத்த பாவனைபோலாக அறத்தாள மகாராஜனின் தலையுந் தொங்குகின்றது. இந்தச் சிரசுகளெல்லாம் அந்தக் கிளைகளில் ஒருநாழிகைப்பரியந்தமிருந்து மறைந்துவிட்டதின் பின்பு, இரவு சென்று பொழுது விடிந்தவுடனே அந்த விருட்சமானது எவ்வண விருட்சமாக விருந்தபோதிலும் சரியே, எவ்விதமாகக் காய்ந்துலர்ந்த போதிலும் அருணன் கீழ்த்திசையில் உதித்தவுடனே முன்னிருப்பதுபோலயும் பூவும் பிஞ்சும் காயுங்கனியுமாக ஓங்கி வளர்ந்திருந்து மேற்றிசையில் கதிரோன் மறைந்தவுடனே பனிரெண்டு வருடம் புனலில்லாமற் காய்ந்த விருட்சத்தைப்போல மாறிவிடுகின்றது.

(கேளுங்கள் சதாநேயச் சிரோன்மணிக் குழாங்களே கேளும்) தருமதுரையான அறத்தாள மகாராஜனனவர் மறைந்துபோய் இப்போது சிரசுதொங்குகின்ற மார்க்கமும் இன்னும் அந்த விருட்சத்தின் கிளைகளில் தொங்குகின்ற மங்கைகளின் பூர்வீக வர்த்தமானமானது, இதுநேரம் வரையிலும் பிரசுரமாகத் தெரியாமலிருந்த தல்லவா. கதிரைவேற் பண்டாரம் மறைந்துப்போய்விட்டவுடனே கரதலா மலகம்போலும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலும் தெள்ளிய செந்தமிழ் நடையினில் சொல்லுகின்றேன். கேளும் விருட்சமானது மாறிவிடுகின்றதென்று ஆண்டிப்பெரியோரறைந்துக்கொண்டிருக்கும்போது, எமகண்டமாகிய மேல் காற்றானது பிறந்து ஆகாயமும் பூமியுமொன்றாகக் கருந்தூள் செந்தூள்களெழும்பும்படியாக இரண்டு கிழவன்கள் மீதிலும் மண்ணைவாரி யிறைத்துக்கொண்டு வருதும்போது இருவிருத்தையர்களும் திடீரென்று பூமியிலமர்ந்து இருகரத்தாலும் விழிகளை யிறுக மூடிக்கொண்டிருந்து வாயு தேவனின் கோபந் தணிந்ததின் பின்பு ஆயர்க்கிழவனனவன் கரத்தை யெடுத்து விழியைத் திறந்து பார்க்கும்போது, அருகிலிருந்த ஆண்டிக்கிழவனைக் காணுமையினாலே மனவாட்டங்கொண்டு பண்டாரத்தின் பொருள் மூட்டையை யெடுத்துச் சிரசில் வைத்துக்கொண்டு பண்டாரத்தைத்தேடி வனமுழுமையு மோடித்திரிந்து ஐயா பண்டாரமே! பண்டாரமே! யென்று கத்திக்கதறிக் கூக்குரலிட்டுக் கூவியழைத்து ஆண்டிப்பெரியோ ரகப்படாததினாலே ஆடுமாடுகளை யடக்கிக்கொண்டு வீடுவந்து சேர்ந்து ஆயர்க்கிழவனனவன் சுகஜீவியாக வாழ்ந்துகொண்டிருந்தான்.

மதியின் முதியமுதியோரே கேளும் கிளைகளில் தொங்குகின்ற நூறுமாதர் தலைகளும் இந்த நூறு தலைகளுக்கும் இடைநடுவில் தொங்குகின்ற வடிவுடைய பெண்மணியின் சிரசும் ஆகமொத்தம் நூற்றொரு தலைகளும் விருட்சங்களில் கட்டித்தொங்குகின்ற காரணமென்னவென்றும், இருந்தப் பெண்மணிக ளியாவர்களென்றும் இந்த வனங்களில் இருக்கப்பட்ட விருட்சங்களெல்லாம் பகலில் துளிர்த்திருக்கின்றதும், இரவில் கொம்புங்கிளையுமாக விளங்குகின்ற மார்க்கத்தையும், அறத்தாள மகாராஜனின் சிரசானது பெண்களின் சிரசோடுகூட மரத்திற் கட்டித் தொங்கும்படியான சந்தேகத்தையும் நிவர்த்திசெய்யும்படியாகக் கேட்பீர்களல்லவோ! இதோ அந்த வினைக்களொவ்வொன்றிற்கும் தெளிபொருள் விளக்கத் துவக்கி விளக்கி விடை விளம்புகின்றேன் பெரியோர்களே கேளும் கேளும்

நூறு தலைகளுக்கும் நடுவில் கட்டியிருக்கின்ற தலையானது தேவேந்திர மகாராஜனின் குமாரத்தியாகிய தேவநாயகமென்னும் பெண்மணியின் சிரசாகையினாலே, அந்தச் சிரசைச் சுற்றியிருக்கின்ற தலைகளெல்லாம் தேவநாயகத்திற்கு ஏவற்பெண்கள். தேவநாயகமென்னும் பெண்ணிற்கும் நூறு தாதிப்பெண்களுக்கும் இன்னுந் திருமணமாகவுமில்லை, அந்தப் பெண்மணிகள் இன்னுங் கற்பழியவுமில்லை. ஆகையினாலே இந்த மாதர்களெல்லாம் வெட்டுண்டு மரத்தின் கிளைகளில் கழுத்தளவாகத் தலை தொங்கும்படியான காரணமென்னவென்றால்,

தேவேந்திர மகாராஜனானவர் பூங்காவனத்தில் பரமனைக்கோறி தவமியற்றிக்கொண்டிருக்கும் ஒருநாள் மாலைவேளையில் தந்தையானவர் தவஞ்செய்துக்கொண்டிருக்கின்றதை யறியாத தேவநாயகமானவள், தனது நூறு சேடிமார்களுடனே பூங்காவனத்திற்கு வந்து விளையாடிக்கொண்டிருக்கும்போது, அந்தப் பந்தானது சிதறிப்போய்த் தவம்புரிந்துகொண்டிருக்கின்ற தேவேந்திரனது சிரசினில் பட்டவுடனே, அமரேசனானவன் கண்விழித்து தனது புத்திரியையும் மற்றுமுள்ள தோழிப்பெண்கள் நூறுபேர்களையும் நோக்கி ஏ-மாதர்களா! நீங்களெல்லோர்களும் இரவில் பதினைந்து நாழிகைக்கு உடலில்லாமல் வெட்டின சிரசைப்போல மானிடலோகத்திலிருக்கப்பட்ட விருட்சத்தின் கிளைகளில் தொங்கிக்கொண்டிருக்கக்கடவீர்கள். அதினும் நீங்கள் தொங்கிக்கொண்டிருக்கும்போது சுக்கிரனுதயமாகும் வரையிலும் எமகிங்கிலியர்களுங்களை யடித்துப் புடைப்பார்கள். சுக்கிரன் பிறந்தவுடனே பழையபடியே ரூபங்கொண்டு தேவலோகம் வந்து சேருவீர்கள். பிடியுங்கள் சாபமென்று தேவேந்திர மகாராஜனானவர் புத்திரிக்கும் நூறுபெண்களுக்கும் சாபமிட்டுவிட்டு திடீரென்று தவநிலையை விட்டுவிட்டெழுந்தவுடனே, புத்திரியாகிய தேவநாயகமென்னும் பெண்மணியானவள் திடுக்கென்று அஞ்சுதலைகொண்டு தேவேந்திர மகாராஜனை மருந்து எதிரில் நின்று வந்தனஞ்செய்து கேளும் என்னை யருந்தவஞ்செய்துபெற்ற ஐயனே! கேளும் தாங்கள் தவம்புரிந்துகொண்டிருக்கின்றதை அடியாளும் சேடிகளும் அறியாமல் பந்தெறிந்தபடியினாலே, உடலில்லாமல் கழுத்தளவு மானிடலோகத்திலிருக்கப்பட்ட விருட்சத்தின் கிளைகளில் தொங்கிக்கொண்டிருக்கும்படியாகச் சாபங்கொடுத்துவிட்டீரல்லவா அந்தச் சாபமானது எங்களெல்லோர்கட்கும் எந்தக்காலத்தில் விமோசனமாகும் சொல்லுமையனே யென்று

தேவநாயகமானவள் கேட்கும்போது தேவேந்திர மகாராஜன் கூறுகின்றார்.

கேளாயம்மணி தேவநாயகமே இன்னுஞ் சிலதுகாலஞ்சென்று இமாசலகிரிக்கு தென்மேற்குத் திசையில் தலைதொங்கி வனமென்றொரு வனமுண்டு. அந்த வனத்தில் நீங்களெல்லோருந் தொங்கிக்கொண்டிருக்கும்போது ஞானபுரியென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாள மகாராஜனானவன், ஒரு ஆண்டிக்கிழவனோடு கூட கூடிக்கொண்டு இடதுகரமிழந்து பரதேசியைப்போல தருமகாரியார்த்தமாக அந்தவனத்திற்கு வருகுவான். அவனையும் கிழவனையும் இங்ஙனம் அழைத்துக்கொண்டு வருகுவீர்களானால், அந்த அறத்தாள மகாராஜாவினாலே உங்களின் சாபம் நிவர்த்தியாகிவிடும். போங்களம்மாவென்று தேவேந்திர மகாராஜனானவர் அளித்த சாபத்தினாலே நூற்றொரு பெண்களும் தலையுருவாகத் தொங்கிக்கொண்டிருக்கின்றார்கள். மாதர்களின் சேதியானது இங்ஙனம் நிற்க. அறத்தாள மகாராஜனானவர் ஐந்து தினத்திற்கு முன்னம் கண்ட விந்தையை ஆண்டிக்கிழவனுக்கு அறைந்துக்கொண் டிருக்கின்ற சேதியை, தேவநாயகமென்னும் பெண்ணானவள் செவியினால் கேள்விப்பட்டு விழியினால் நோக்கிப்பார்த்து ஞானபுரியை யாளப்பட்ட அறத்தாள மன்னவனிவன்தானென் றுணர்ந்து தனது மந்திர பலத்தினால் வாயுவை யுச்சரித்து வாயுவுடன்கூட தேவநாயகமானவள் கலந்துவந்து, அறத்தாள மகாராஜனை தூக்கிக்கொண்டுபோய் தேவேந்திரனிட்ட சாபத்தில் பாதி பகுந்து தேவநாயகமானவள் அறத்தாள மகாராஜனுக்கு அளித்து, அன்னவனையுஞ்சிரத்தளவாக வுருவாக்கிக்கொண்டு ஜாமத்தில் தனது பக்கலில் கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு ஆண்டிக்கிழவனெப்போது அகப்படுவானோவென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்து வேந்தனை தூக்கிக்கொண்டதைப் போல பண்டாரக்கிழவனையு மெடுத்துக்கொண்டாள்.

கேளீர் அன்பர்க்குழாங்களே! தேவநாயகமென்னும் பெண்மணியானவள் தேவராஜனாகிய தந்தையிடத்தில் சாபம்பெற்றவுடனே தேவலோகத்திலிருக்கப்பட்ட தேவர்களை நோக்கி, கேளுங்கள் தேவர்களே! நாங்கள் தலையுருவாக விருட்சத்தின் கிளைகளில் தொங்குகின்ற இரகசியத்தை விழியினால் பார்த்தபேர்களாயினும், செவியினாற் கேட்டப்பேர்களாயினும், பிறருக்குரைசெய்வார்களானால் எங்களுக்கு நேர்ந்தசாபத்தில் பாதி பகுந்து அனுபவிக்கவேண்டிய

தென்று தேவநாயகமானவள் சாபமிட்டு, தனது பாங்கிப்பெண்களை நோக்கி கேளுங்களம்மா தாதிப்பெண்களே! மாநிடலோகத்தில் எந்தவிருட்சமாயிருந்தபோதிலும் நாமந்த விருட்சத்தைத் தொட்டவுடனே உடலற்றுத் தலைபுருவாகத் தொங்குவதுமன்றி, அந்த விருட்சத்திலிருக்கப்பட்ட பூ பிஞ்சு காய் கனி இலைமுதலாகியவெல்லாங் காய்ந்துலர்ந்து இரவில் கொம்புங் கிளையுமாகத்தானே யிருந்து, பகல்முழுவதிலும் பூவும் பிஞ்சும் காய்கனிகளும் இலையுந் துளிருமாகத் தழைத்து விளையக்கடவதென்றும் சாபமிட்டருளினாள். அந்த சாபத்தைப்போலவே மன்னனுங் கிழவனுந் தேவநாயகத்தினிடத்தில் அகப்பட்டுக்கொண்டார்கள்.

தேவேந்திரன் புத்திரியாகிய தேவநாயகமென்பவள் விருட்சத்தில் தொங்கும்போது இடதுபக்கத்தில் அறத்தாள மகாராஜனின் சிரசையும் வலது, பக்கத்தில் ஆண்டியின் சிரசையுங் கட்டித்தொங்கவிட்டுக்கொண்டு நாள்கழித்துக்கொண்டு வருகும்போது, ஆயர்க்கிழவனானவன் அன்றிரவு கழித்து மறுநாள் பொழுது விடிந்தவுடனே யெழுந்து பண்டாரத்தின் பொருள்மூட்டையைப் பேழையில் பதனமாக வைத்துவிட்டு ஆடுமாடுகளை யோட்டிக்கொண்டு காடுகானகங்களுக்குவந்து மேயவிட்டுவிட்டு, அந்த வனத்திலிருக்கின்ற புதருகளிலும் சோலைசாலைகளிலும் விருட்சத்தடிகளிலும் ஆண்டிக்கிழவனைத்தேடிப்பார்த்து கிழவனகப்படாமையினாலே ஓகோ, வனத்தின் இரகசியத்தை யுரைத்தால் பிரிந்துபோய் விடுவேனென்று ஆண்டிக்கிழவனறைந்தானல்லவா, அதைப்போலவே அந்த இரகசியத்தை வெளியிட்டவுடனே எமகண்டனைப்போலப் பிறந்த மண்காற்றினில்பண்டாரம் மறைந்துபோனானே, அந்தக்கிழவனுரைத்த ரகசியத்தை இன்னும் யாருக்காகிலும் நாமுரைப்போமானால் நமக்குங் கிழவனுக்கு வந்தகதி வந்துவிடுமாகையினாலே இந்தச் சேதியை வேறெவரிடத்திலுங் கூறாமல் சிலதுநாளைக்கு மௌனமாக விருப்போமானால், கடவுளின்கிருபையால் ஆண்டிக்கிழவன் வருவானானால் அவனின் பொருள்மூட்டையைக் கொடுத்துவிடுவோம். இல்லாமற்போனால் அந்தப் பொருள்களையெல்லாம் எந்த தேவாலயங்களுக்காகிலும் அல்லது அன்னவனைப்போலவே ஏந்த ஆண்டிப்பரதேசிக்காகிலும் தானதருமஞ்செய்துவிடலாமென்று ஆயர்க்கிழவனானவன் தனது காரியத்தைப் பார்த்துக்கொண்டு மௌனமாக ஒளிந்துக் கொண்டிருந்தான்.

அறத்தாள வேந்தனையும் ஆண்டிக்கிழவனையு மெடுத்துக்கொண்டுபோன தேவநாயகமென்னும் பெண்மணியானவள் பகல் முழுவதும் தேவலோகத்தில் தனது மனதிற்குகந்த விடத்தில் நூறு சேடிமார்களுடனும் இளவேந்தனுடனும் ஆண்டிக்கிழவனுடனும் அமர்ந்து சோழி சொக்கட்டான் சதுரங்கம் முதலாகிய திருவிளையாட்டுகளை விளையாடுவதும், மாலைப்போதில் நந்தவனத்திற்குச் சென்று தன்னுடன்கூட ஐம்பது பாங்கிமார்களும், இளவரசனோடு கூட ஐம்பது பெண்களை நியமித்து ஆண்டிப்பெரியோரைப் பொதுத் தலைவராக அமைத்து இளஞ்சக்கிரவர்த்தியினை யெதிர்த்துப் பந்தயங்கூறப் பந்தடித்து, தோல்வியும் வெற்றியுமடைந்து அருணன் மறைந்தவுடனே அறத்தாள மகாராஜனுக்கும் ஆண்டிக்கிழவனுக்கும் அறுசுவையோடுங்கூடிய அசனம் படைத்து உண்ணச்செய்ததின்பின்பு, நூறு சேடிமார்களுடனும் அமர்ந்து தேவநாயகமானவள் தானும் உண்டி புசித்தெழுந்து இரவு பதினைந்து நாழிகையாகினவுடனே நூற்றுமூன்று பேர்களுமாக மானிடலோகத்திற்கு வந்து வனவிருட்சங்களில் தொங்கிக்கொண்டிருந்து சுக்கிரனுதயத்திற்குத் தேவலோகம் போவதும் இரவில் விருட்சத்தில் தலைபுருவாகத் தொங்குவதுமாக வீற்றிருந்தார்கள்.

கேளீர் எனது மித்திரக் குழாங்களே கேளும்! அறத்தாள மன்னனோடும் ஆண்டிக்கிழவனோடும் நூறு பாங்கிகளோடும் தேவநாயகமானவள் முப்பதுநாளாகத் திருவிளையாடல்கள் புரிந்துகொண்டு வருகும்போது, முப்பத்தோராம் நாளில் மாலைப்பொழுதில சோலைவனத்தில் பந்தாடிக்கொண்டிருக்கும்போது, தேவேந்திர மகாராஜனவர் ஆடையாபரணங்க ளணிந்து சோலைவனத்திற்கு வந்து தென்றற்காற்றுக்காக வுலாவும்போது, அங்ஙனம் பந்தாடிக்கொண்டிருக்கப்பட்டவர்களை யெல்லாங் கண்டு, இதேது நமது புதல்வியானவள் யாரோவொரு வாலிபனோடெதிர்த்துப் பந்தாடுகின்றாளே அந்தச் சிறுவனானவன் யாரோ தெரியவில்லையே. அதோ நாற்காலியின்மீது அமர்ந்துகொண்டிருக்கிற கிழவன் யாரோவென்று சந்தேகங்கொண்டு கூக்குரலிட்டு காலோசை காட்டி அம்மா தேவநாயகமே! இங்ஙனம் வாருந்தாயே யென்று தேவேந்திர மகாராஜனானவர் புதல்வியைக் கூவி யழைத்தார். தந்தையாகிய இந்திர மகாராஜனழைத்த குரலோசையைக்கேட்ட தேவநாயகமானவள் இதோ வந்தேன் தந்தையே வந்தேனென்று மறுமொழியுரைத்து, அறத்

தாள மகாராஜனையும் ஆண்டிக்கிழவனையும் நூறு பாங்கிப் பெண்களையும் வாருங்களென்றழைத்துக்கொண்டு ஓடோடியும் வந்து இந்திர பூசானைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்து போற்றிப்போற்றி எனையருந்தவஞ்செய்து பெற்ற பிதாவே போற்றி அடியாளையழைத்த காரியத்தை யருள்செய்யவேண்டுமையனே யென்று புத்திரியாகிய தேவநாயகங் கேட்கும்போது தேவராஜன் கூறுகின்றான்.

கேளாயம்மணி தேவநாயகமே, இந்த நூறு மாதர்கள்தான் உனக்குத் தோழிப்பெண்களானதினாலே இதோ நிற்கின்ற சிறுவன் யாரம்மா? இந்தக் கிழவன்யார்தாயே? சொல்லுமம்மாவென்று அமரர்கோன் கேட்கும்போது அரிவை நல்லாளாகிய தேவநாயகம் பிதாவைநோக்கி, ஓ எனையருந்தவஞ் செய்து பெற்ற அண்ணலே கேளும் இதோயிவர்தான் மானிடலோகத்தில் ஞானபுரியென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாள மகாராஜன். இந்தப் பெரியவர்தான் ஆண்டிக்கிழவன். இவர்களிருவரும் இங்ஙனம் வந்த காரணமெவ்விதமென்றால் விருட்சத்தில் நாங்களெல்லோருந் தொங்கிக்கொண்டிருந்த இரகசியத்தை இந்த அரசனானவர்கண்டு களிப்புகொண்டிருக்கும்போது, இந்த மன்னனை நாங்களெல்லோருஞ் சந்தித்து எங்கள் இரகசியத்தை மற்றொருவருக்குஞ் சொல்லவேண்டாமென்றும், மீறிச்சொல்லுவீரானால் தீவினைக்குள்ளாகி யெங்கள் பாவத்தில் பாதி பகுந்துக்கொள்வீரென் றுரைத்து, கட்டுதிட்டஞ்செய்து விட்டுப் பழயபடியே தெய்வலோகம் வந்து சேர்ந்துவிட்டோம்.

நாங்களெல்லோருந் தங்களின் சாபத்தைப்போலவே தினந்தோறும் மானிடலோகத்திற்குப் போகவும் வருகவுமிருக்கின்ற நாளில், ஒருநாள் பகல்வேளை தாதிப்பெண்களோடு சதுரங்கமாடிக்கொண்டிருக்கும்போது என்னுடல் சிலிசிலிர்த்து நடுக்கங்கொண்டது. யானப்போது திடுக்கிட்டு ஓஹோ நமது இரகசியத்தையாரோருவர் வெளியிடுகின்றார்களோ அவர்கள் இங்ஙனம் வரவேண்டுமென்று உம்மைத்தொழுது மனதிலெண்ணினேன் யானெண்ணினவுடனே நமது சத்தியச் சக்கரமானது சென்று இந்த மன்னனைத் தூக்கிக்கொண்டுவந்து என்னிடத்திலொப்பிவித்தது. இந்த வேந்தன் இங்ஙனம் வந்து நான்குநாள் சென்று இந்த ஆண்டிப்பெரியோரானவர் இவரைப்போலவே நமது ரகசியத்தை மற்றொருவருக்கு வெளிவிட்டதினாலே இவரையுஞ் சக்கரந் தூக்கிக்கொண்டு வந்தது (மானிடர்கால அளவையில்)முப்பதுநாள் ஆகின்றது. இவர்

களையும் எங்களோடுகூட தலையுருவாகத் தொங்கவிட்டுக்கொண்டு தான் நாள்தோறும் உமது சாபத்தை இவ்விருவர்களும் அனுபவிக்கும்படியாக நடத்திக்கொண்டு வருகின்றேன் பிதாவேயென்று தேவநாயகமோதிய சேதியை தேவராஜன் கேட்டுக் கூறுகின்றார்.

கேளாயம்மணி தெய்வநாயகமே இந்த வேந்தனை நீ கண்டு இங்ஙனம் கொண்டுவந்தால், அந்தகாலத்தில் உங்கள் சாபம் விமோசனமென்றுரைத்திருக்கின்றேனல்லவா, அது யாதுகாரணத்திற்காகவென்றால் மண்ணுலகிலிருக்கப்பட்ட வேந்தர்களில் இந்த அரசனானவன் தருமத்தில் பெரியோனென்றும், சகலத்திலும் வெற்றியாளனென்றும் சிலதுகாலங்களுக்கு முன்பு எனது சபையில் கௌதம மகாரிஷியானவர் இவனது வீரப்பிரதாபப் புகழைக் கூறக் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆகையினாலே இந்த அரசனது உத்தம குணாதிசயத்தை தேவர்களெல்லாம்புகழ்ந்து பேசுகின்றார்களானபடியினாலே இந்த இளவரசனுக்கு உன்னைத் திருமணஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று நினைவுகொண்டு. இங்ஙனம் அழைத்துக்கொண்டு வருகச் சொன்னேனென்று இந்திரமகாராஜனறைந்துவிட்டு, வாருமம்மாவென்று சகலரையும் அழைத்துக்கொண்டு புத்திரியின் மனையாகிய கன்னிமாடமென்னுங் கோட்டைக்குள்ளாக நுழைந்து வந்து, தேவராஜனானவன் சிம்மாதனத்திலமர்ந்து அறத்தாள மகாராஜனை நோக்கி அப்பா மண்ணுலகரசனே! இங்ஙனம் வாருமென்று கரத்தை நீட்டி அறத்தாளனையழைத்து தனதிடதுபக்கத்திலிருக்கின்ற ஆசனத்திலமரச்செய்து ஆண்டிப்பெரியோரை வலதுபக்கத்திலிருக்கச்செய்து தனதுபுத்திரியையும் பாங்கிகளையும் சபைகூட்டியலங்காரமாக அமரச்செய்துவிட்டு மண்ணரசனாகிய ஞானபுரியையாளப்பட்ட சக்ரவர்த்தியாகிய அறத்தாள மகாராஜனை நோக்கி தேவராஜன் கூறுகின்றார்.

கேளாயெனதன்பிற்குகந்த பூலோகத்தரசனாகிய அறத்தாள மகாராஜனே கேளும்! உனது கருணாகர தருமகுணாதிசயத்திற்காக இதோ அமர்ந்திருக்கின்ற எனது புத்திரியாகிய தெய்வநாயக அம்மாளை திருமணஞ்செய்து கொடுப்பதற்காக இசைந்திருக்கின்றேன். உனது கருத்தென்ன விள்ளும் பிள்ளாயென்று விண்ணரசனாகிய தேவேந்திர மகாராஜனானவர் வினவியருளினார். இவ்வாறு அமரர்கோனறைந்த வாக்கியத்தைக்கேட்ட. அறத்தாள மகாராஜனானவன் கேளுஞ்சுவாமி தேவர்கோனே அடியேன் நாடு நகரங்களை

விட்டுவிட்டு ஆண்டிப்பரதேசியின் கூட யானும் பரதேசியாகப் பிரயாணப்பட்டு வந்துவிட்டேனே ஆகையினாலே அடியேனுக்கு மனைவி யென்னுமிச்சையில்லை ஐயனே மனதுவுகந்து மன்னித்தருள வேண்டும் சுவாமியென்று மண்ணுலகு மன்னனானவனுரைத்தருளினான்.

இளவரசன் மொழிந்த மொழியைக்கேட்ட இந்திர பூபதியானவர் கூறுகின்றதாவது, கேளாயப்பா அறத்தாளனே, முற்றுந்துறந்த பெரியோர்களெல்லாம் பெண்ணைக் கோரியல்லவோ பெருந்தவம் பண்ணுகின்றார்கள். அதிலும் நீயோ துன்பம், பிணி, மூப்பு, சாக்காடெனும் ஆணவம் மாயை கன்மமென்னு மும்மலக்கூட்டையும் காமம் குரோதம் லோபம் மோகம் மதம் ஆச்சரியம் இடும்பையகங்காரமென்னும் தத்துவக்குப்பைகளைச் சுமந்து, அறுசுவையென்னும் மாயாசம்பத்தில் நுக்கப்பட்டவன் ஆனதினாலே அப்பா அறத்தாளனே உனக்கென்ன அப்பேர்க்கொத்த ஞானம் முற்றிப்போய்விட்டதா சொல்லும் பிள்ளாயென்றுரைத்துப் பின்னும தேவராஜன் சொல்லுவதாவது,

கேளாயப்பா அறத்தாளனே பூலோகத்தில் பிறந்தவர்களானாலும்சரி புவனலோகத்தில் பிறந்தோரானாலும் சரியே, இன்னும் சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோக முதலாகிய லோகங்களிற் பிறந்தவர்களானாலுஞ் சரியே. இன்னும் அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாள முதலாகிய லோகங்களில் பிறந்தவர்களானாலும் சரியே. எந்தவுலகத்திற் பிறந்த ஆண்பிள்ளையானாலும் ஞானமென்னும பொருள்தேடப் பிரயாணப்படுவானானால், அன்னவனென்ன தகைமையாக விருந்தால் வெளிப்படவேண்டும் சொல்லும் பிள்ளாய். அல்லது இன்னமும் ஞானியென வெளிப்படப்பட்டவன். நான்குவேதம், ஆறுசாஸ்திரம், அறுபத்துநான்கு கலைக்ஞானம் தொண்ணூற்றாறு தத்துவம், முதனூலும், வழிநூலும், சார்பு நூலு முணர்ந்தோனாகவும். அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், முதலாகிய அஷ்டசித்திகளில் தேர்ந்தவனாகவும், மொழியையும், மனதையும், ஒன்றுபடுத்தினவனாகவும் தூங்காமற் றூங்குபவனாகவும், மண்ணாசை பொருளாசை மங்கையாசை யென்னும் மூவாசையும் விட்டோனாகவும் இரவிமதியை யொன்றாகச் சேர்ந்தோனாகவும், விரிந்தகஞ்சமலரில்வைத்து கபாலமண்டை கொண்டு நாடிகளிழுத்தவனாக

வும், உணவும் நீருமுண்ணுதவனுகவும் மலஜலம் வெளிவிடாதவனு கவும், பிரபஞ்சமாயையைச்சங்கரித்தவனுகவுமிருக்கப்பட்டவனெவ னே அவனொருவனைத்தான் ஞானியென்றும் ஞானவானென்றும் மதிக்கலாமேயொழிய, மற்றப்படிக்கு மித்தையாகிய கள்ளவேடம் பூண்டு உள்ள பொருளைக் கொள்ளையடித்துக்கொண்டு போக வரு கின்ற அஞ்ஞானிகளெல்லாம் மறுபிறவியில் குக்கனுகப்பிறந்துழலு வார்களல்லாமல் ஞானியுமல்ல, ஞானவானுமல்லவென்று மண்ணுல கத்திலுலாவுகின்ற மறைகளையுணர்ந்திருக்கின்ற அரசனுகவிருந்தும் இந்த வயதிற்குள்ளாக சகலமுங் கண்டுவிட்டவனைப்போல பெண் ஜாதிவேண்டியதில்லையென்று, இந்த ஆண்டிக்கிழவனை நம்பி உனது இராஜபோகத்தையெல்லாம் வீணிலே யிழந்துவிட்டு, பரதேசிவேட ம்பூண்டு வந்து விட்டாயே. இந்தக் கிழவனுனவன் உனக்கு முந்தி மோட்சங் கொடுக்கத்திடமுள்ளவனு சொல்வாய் பிள்ளாயென்று தேவேந்திர மகாராஜன்கேட்டருளினர். இவ்வாறு அமரேசனுனவ ரறைந்தமொழியை அறத்தாளன் கேட்டு திடீரென்றெழுந்து வண ங்கி வந்தனஞ்செய்து திருவாய்மலர்ந்தருளுகின்றுன்.

கேளும் சுவாமி தேவர்பெருமானே இந்த அடியேனுனவன் நாடுநகரங்களையெல்லாம் விட்டுவிட்டுப் பரதேசிவேடம்பூண்டு ஒரு காரியத்தை நாடிவருகும்போது இந்தமாதர்களிடத்தில் அகப்பட்டு க்கொண்டேன். ஆகையினுலே அந்தக்காரியம் முடிவானதின்பின்பு விவாகஞ்செய்துக்கொள்ளுகின்றேன். அடியேனின் வாக்கியத்தை மன்னித்து ஆட்கொள்ளவேண்டும் ஆண்டவனேயென்று மறைந்த சேதியைக்கேட்ட அமரேசன் கூறினமொழிகளைக்கேட்டு கேளா யப்பா அறத்தாதி பூபதியே! என்னகாரியமாக பிரயாணப்பட்டு வந் தனை. அந்த காரியத்தை தெரியப்படுத்தும் பிள்ளாயென்று கேட் கும்போது அறத்தாளச் சக்ரவர்த்தியர் கூறுகின்றுர்.

கேளுமையா சுவாமி அடியேன் பிரயாணப்பட்டது மற்றென் றுக்குமல்ல. மண்ணுலகில் பட்டாம்புரியென்னும் பட்டணத்தையா ளப்பட்டகட்டழகு மகாராஜனின் புதல்வியாகிய கற்பகவல்லியென் னும் பெண்மணியானவள் ஒருகாத அகல நீளத்திலும் இரண்டு பனைமரவுயரத்திலும் தருமக்கோட்டையொன்று கட்டி, அந்தக்கோ ட்டையில் தொண்ணூற்றாறு வாயில்கள் வைத்து அதற்குள்ளாக அந்தமாது சிரோன்மணியானவள் அமர்ந்திருந்து யாவர் வந்து எந் தப்பொருளை நாடிக்கேட்டபோதிலும் இல்லையென்னுமல் அறம்புரி

ந்துகொண்டு வருகின்றாளாம், ஆகையினாலே அந்தக் கற்பகவல்லியென்னும் தருமபுத்திரியைத் தரிசிக்கவேண்டி பிரயாணப்பட்டிந்தப் பெரியோருடன் வந்தனன் சுவாமியென்று விளம்பினன். இளவரசன் இயம்பிய மொழியைக்கேட்ட இந்திர மூர்த்தியானவர் இயம்பத்தொடங்கினார். கேளாயப்பா மன்னரசனே அவ்விதமே நீ சென்று மறவாமல் வந்து தெய்வநாயகத்தைத் திருமணம்புரிந்தழைத்துக்கொண்டுபோய் உனது தேயத்தில் வாழ்துவதாகவிருந்தால் எனக்கேதேனும் உறுதிமொழி சொல்லும் பிள்ளாயென்று இந்திர பகவானவர் வினவினார்.

அமரர் தலைவனறைந்த மொழியைக்கேட்ட அவனிமன்னன் கூறுகின்றான். தேவர்கட்டலைகோனே கேளும் நான் சென்று எனது எண்ணத்தை முடிவு செய்துகொண்டு வந்து தெய்வநாயகத்தை எவ்விதத்திலும் மணமாலை யிடுகின்றேன். இது உண்மையான வாக்கியம். ஆகையினாலே யாங்களிருவரும் மண்ணுலகத்திற்குப் போவதற்காக எங்களிருவரையுங்கொண்டுபோய் முன்னம் நாங்களிருந்தவனத்தில் எங்களைவிட்டுவிடச் செய்வதுதான் போதுமானவுபகாரமாகையினாலே, இதொன்றுதான் நீவிர் சகாயஞ்செய்யவேண்டியதென்று அறத்தாளனுரைத்தனன். மண்ணரசன் சொன்ன மொழியை விண்ணரசன்கேட்டு நல்லதப்பா அறத்தாளனே! உங்களிருவரையும் தூக்கிக்கொண்டுபோய் நீங்களிருந்த வனத்தில் தானேவிட்டுவிடச் செய்கின்றேன். நீங்கள் சென்று உங்கள் காரியங்களை முடித்துக்கொண்டு திரும்பிவருகும்போது இப்போது நீங்களிறங்குகின்ற வனத்திற்கு இரவில் வந்துதங்கி தெய்வநாயகியென்று நீ அழைக்கவேண்டும். அப்படிக்கு வந்து அங்ஙனம் தங்கி இந்த மங்கையின் நாமதேயத்தைக் கூவியுரைக்காமல் உனது பட்டணத்திற்குச்சென்று சிம்மாதனத்தில் அமர்வாயானால், உனது சிரசு ஆயிரஞ்சுக்கலாக வெடித்து மடியக்கடவாயென்று சாபமிட்டு அருகிலிருந்த காவலனையழைத்து, இவர்களிருவரையும் வியாசர்பாடியென்னும் பட்டணத்திற் கருகிலிருக்கின்ற காட்டில்விட்டுவிட்டு வாருங்களென்று இரண்டுகாவலனையேவிவிட்டு இந்திர மூர்த்தியானவர் மாளிகைக்குச் சென்றுவிட்டார்.

தேவராஜனானவர் அரண்மனைக்குச் சென்று விட்டவுடனே தெய்வநாயகமானவளெழுந்து அறத்தாளமகாராஜனின் கரத்தைப் பிடித்துக்கொண்டு [illegible]தன்பிற்கினிய திருமணக்கோலமே

கேளும்! அடியாளை மறந்துவிடப்போகிறீர். அதிக சுருக்காய்வந்து என்னையழைத்துக்கொண்டு போகும்படியான எண்ணமிருக்கவேண்டும். இதோ இந்தக் காவலர்களோடு போய்வாரும் சுவாமி யென்று தேவேந்திரமகாராஜனின் புதல்வியாகிய தெய்வநாயகமானவளுரைத்துவிட்டுப் பாங்கிப்பெண்களை யழைத்துக்கொண்டு அரண்மனைக்குள்ளாகச் சென்று தந்தையாகிய இந்திர பூசுரனைக்கண்டு வந்தனஞ்செய்து கேளும் பிதாவே! அடியாளுக்குஞ் சேடிப்பெண்களுக்கும் என்ன கட்டளையிட்டருளுகின்றீரோ வென்று கேட்டுக்கொள்ள வந்தேனையனே யென்று புத்திரியுரைத்த வார்த்தையைக் கேட்ட அமரேசன் கூறுகின்றார்.

கேளாயம்மணி தெய்வநாயகமே அந்த அறத்தாளனை நீ மாலையிடுகின்ற பரியந்தம் உனக்கும் உனதுதோழிப்பெண்களுக்கும் யானிட்டசாபம் விமோசனமாகாதாகையினாலே, அறத்தாளனை யின்னமொருமுறை நீ யிங்ஙனம் அழைத்துக்கொண்டு வருகுமளவும் நீங்களெல்லோரும் மானிடலோகத்திலிருக்கின்ற விருட்சத்தின் கிளைகளில் முன்னம்போலவே தலையுருவாகத் தொங்கிக்கொண்டிருந்து அன்னவனை யிங்ஙனம் கொண்டுவருகுவீர்களானால், அந்நாளிலுங்கள் சாபம் விலகுமேயன்றி மற்றப்படிக்கு விலகாது. போங்களம்மாவென் றுரைத்துவிட்டு தேவராஜனானவர் கொலுமுகத்திற்குச் சென்றுவிட்ட பின்பு, பாவைமார்களெல்லோரும் தங்கள் காரியங்களைப்பார்த்துக்கொண்டு அரண்மனையில் வீற்றிருந்தனர்.

இங்ஙனம் நிற்க தேவேந்திரனாலேவப்பட்ட காவலாளிகணங்கள் இளவரசனையும் பண்டாரக் கிழவனையுந் தூக்கிக்கொண்டுவந்து மானிடலோகத்தில் வியாசர்பாடியென்னுந் தேயத்திற்கடுத்த வனத்தில் விட்டுவிட்டு, கணங்கள் தெய்வலோகஞ்சென்றதின் பின்பு, அறத்தாள மகாராஜனானவர் ஆண்டிப்பெரியோரை நோக்கி கேளுமையாசுவாமி பெரியோரே! முன்னம் நாமிருந்த வனமானது இதுதானோ பாருமையாவென்று மண்ணுலகுச் சக்ரவர்த்தியாகிய அறத்தாள மகாராஜன் வினவும்போது கதிரைவேற்பண்டாரங் கழறுகின்றார்.

மன்னாதிமன்னவர்கள் போற்றும்படியான மண்டலேஸ்பரனாகிய அறத்தாள மகாராஜனே! கேளாயப்பா நீயும் நானுந் தங்கியிருந்து என்னைவிட்டு நீ பிரிந்துபோன வனம் இந்த வனமல்ல. அந்த வனமானது இங்ஙனமிருந்து நான்குநாள் பிரயாணத்திற்கப்பால்

கிழக்குத்திசையில் இருக்கின்றது அப்பா மகாராஜனே இந்த வனமானது வியாசர்பாடியென்னும் பட்டணத்தைச் சேர்ந்த வனம். இந்த வனத்தில்தான் நான் வைத்துக்கொண்டிருந்த எனது பொன் பொருள் மூட்டையை இவ்வனம் ஆடுமாடு மேய்த்துக்கொண்டிருந்த ஒரு ஆயர்க்கிழவனிடத்திற் கொடுத்துவிட்டு, அவனிடம் வார்த்தையாடிக்கொண்டிருக்கும்போது இதற்கு முன்னம் உனக்கு வந்த கதியானது எனக்கும் வந்தெய்தியது. கேளாயப்பா வேந்தனே! நமக்கு வந்த துன்பமானது உனது தரும குணத்தினாலே விலகிப் போய் தெய்வலோகத்தில் பெரும் புகழுமடைந்து முன்னம் நானிருந்த வனத்திற்கு உனது கருணாகர குணத்தினாலே வந்து சேர்ந்துவிட்டோம். இனி யாதொரு துன்பமும் வந்தணுகப் போகிறதில்லை. ஆகையினாலே நமது பொருள் மூட்டையைக் கொடுத்த கிழவனைத் தேடிப் பிடித்து மூட்டையைப் பெற்றுக்கொண்டு பட்டாம்புரியை நோக்கிப் போகலாமப்பா. இந்த வனத்தில் அந்தக் கிழவனைத் தேடிப்பார்ப்போம் வாருமப்பாவென்று ஒருவர் கரத்தையொருவர் பிடித்துக்கொண்டு சோலை சாலை சூழ்ந்த வனத்திற்குள்ளாகப் புகுந்து ஆடுமாடுகள்மேய்ந் துலாவுவதைக்கண்டு ஓஹோ! அந்த ஆயர்க்கிழவனாகிய பரசுராமக் கோனாரானவர் இங்குதான் இருப்பாரென்று களிகொண்டு ஓ பரசுராமக்கோனாரே! ஐயா ஆயர்குலப்பெரியவரேயென்று ஆண்டிப்பண்டாரமானவர் உரத்த வோசையாய்க்கூவியழைக்குங் குரலோசையை ஆயர்க்கிழவன் கேட்டு! ஓஹோ முன்னம் பொருள்மூட்டையைக் கொடுத்துவிட்டுப்போன பண்டாரக்கிழவனெங்கையோ காற்றிலகப்பட்டு மெலிந்து நம்மைத்தேடிக்கொண்டு வருகின்றானென்று தெரிந்து டேயா-டேய எவண்டாவவன் எம் பேரைக்கூவுகிறவனென்கிற குரலோசையை அதிகமாக நீட்டிக்காட்டிக்கொண்டு கரத்திலிருக்கின்ற கழியையோங்கிப்பிடித்துக்கொண்டு இருவருக்கு மருகில் வந்து யார்காணும் யாரைத்தேடுகிறீர், என்ன விசேடம் நீங்களிருப்பதெந்ததேயம் என்னகாரியமாக எந்ததேயத்திற்குப் போகப்போகிறீர்கள் கூறுங்களையாவென்று ஆயர் குலாதிபனை பரசுராமக்கோனாரானவர் வினவியருளினர்.

ஆயர்கிழவனறைந்த மொழிகளைக்கேட்ட இருவர்களில் ஆண்டிக்கிழவனானவர். இடையனைநோக்கி யேனையா ஆயர்குலப்பெரியோரே யானுமக்குத் தெரியவில்லையா ஒருமாதத்திற்கு முன்பு எனது பொருள்மூட்டையையுனது கரத்திற்கொடுத்துவிட்டு இதோ இந்த மகாராஜனைப் பற்றித் துக்கவார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கும்

போது உன்னையும் என்னையும் காற்றுவந்து அடித்துக்கொண்டு போய்விட்டதே. அந்தச் சேதியானது வுனக்குக் கவனமில்லையா, ஏனையா பெரியோரே கூறுமையாவென்று ஆண்டிப்பெரியோரறைந்தமொழியைக்கேட்ட ஆயர்க்கிழவனானவன் குஞ்சரத்தின்மீது கோளரிபாய்ந்ததைப் போலாகக் கர்ச்சனைசெய்து அடே யாரடா பிச்சைக்காரப்பண்டாரப் பயலே! உனக்குண்பதற்கு உணவேயில்லை. யாகையினாலே யுனக்கு பொன்னேது பொருளேது அடே ஆண்டிப் பயலே நீயா என்னிடத்தில் பொருள்மூட்டை கொடுத்தவன், பொங்கித் தின்னும்படியான ஓட்டைச்சட்டிப் பானைகள் நான்கோ ஐந்தோ கோணிப்பையில் கட்டிக்கொண்டு வந்து கொடுத்த மூட்டையானது அதோ நான் படுக்கும்படியான விடத்தில் நீ எவ்விதமாக வைத்துவிட்டுப்போனாயோ, அந்த விதமாகவே அதோ விருக்கின்றது. அதனை யான் இத்தனை நாளாக காப்பாற்றிவைத்திருந்ததற்கு முப்பதுபணம் வாய்தா கொடுத்துவிட்டு எடுத்துக்கொண்டு போடா போ! தடியாலடிப்பேன். தலையை யுடைப்பேன். ஓடிப்போடாவென்று அதட்டிக் கழியினாலே ஓங்கியடிக்கும்போது அருகிலிருந்த சக்ரவர்த்தியாகிய அறத்தாள மகாராஜனானவர் திடீரென்று கழியைப் பிடித்திழுத்துத் தனது கரத்திற் கழியைப்பிடுங்கிக் கொண்டார்.

மன்னவனானவர் கழியை யிடது கரத்திற் பிடித்து வலது கரத்தினால் ஆயர்க்கிழவனின் இடது கரத்தைப் பிடித்துக்கொண்டு அந்தக் கிழவனின் முகத்தைத நோக்கி ஐயா பெரியவரே! ஏனையா! இத்தனை கோபங்கொள்ளுகின்றீர். ஆண்டிப்பெரியோரானவர் விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களும் பொன் பணங்களும் மூட்டையாகக் கட்டிக் கொடுத்ததாகக் கூறுகின்றாரே. ஓட்டை சட்டிப்பானை நாலோ ஐந்தோ கொடுத்ததாகத் தாங்கள் சொல்லும்சேதியானது தரும நூலுக்கொவ்வா தாகையினாலே அவர்கொடுத்த பொருள்மூட்டையை யெடுத்துக்கொண்டு வந்து கொடுத்துவிடுமையாவென்று வேந்தன் விளம்பிய வாக்கியத்தை ஆயர்க்கிழவன் கேட்டு, கடுஞ்சினங்கொண்டு அடே யாரடா பயலே! கொடுக்கும்போது பார்த்துக்கொண்டிருந்த சாட்சியைப்போலக் கொஞ்சமாகிலும் நெஞ்சமஞ்சாமற்படிக்குப் பண்டாரங்கொடுத்த பொருளை யெடுத்துக்கொண்டுவந்து கொடுமென்று கூறுகின்றவாக்கியத்தைப் பார்த்தால், நீங்களிருவருங்கூடி என்னை யடித்துப்புடைத்துவிட்டு ஆடுமாடுகளை வேலையாக்கிக் கொண்டுபோகவந்த கள்ளப்பயல்களைப்

போலக் காண்கின்றது. அல்லது இதோ உங்கள் மதத்தைப்பற்றும் பொருட்டாக ஆச்சலை பண்ணுகின்றேன் பாருங்களென்று உரைத்துக்கொண்டே, ஒவென்று கூக்குரலிட்டு ஆட்டுமந்தையில் கள்ளன் வந்துபுகுந்தான், கள்ளன் வந்தான், இதோ கள்ளன் வந்துவிட்டான், வந்துவிட்டானென்று கூவியுரைத்த ஓசையை வியாசர்பாடியிலிருக்கப்பட்ட மனிதர்களெல்லாங் கேள்விப்பட்டு, வனத்தில் ஆட்டுமந்தையில் கள்ளன்வந்து புகுந்தானாம் எல்லோரும் வாருங்கள் வாருங்களென்று ஒருவர்க்கொருவர் கூவியழைத்துக்கொண்டு வியாசர்பாடிப்பட்டணத்து ஜனங்களெல்லா மொன்றுசேர்ந்து, ஓட்டமும் நடையுமாக காட்டிற்கோடிவந்து ஆயர்க்கிழவனைக்கண்டு ஏனையாபரசுராமக்கோனாரே ஏதுக்காக இரைச்சலிட்டுக் கூவினீரென்று குடிஜனங்கள் கேட்கும்போது, இதோ இந்தக்கள்ளப் பயல்கள் இருவர்களும் என்னிடத்தில் பொருள் கொடுத்ததாக வழக்கோரஞ் செய்கின்றார்கள், இதனை விசாரியுங்களையாவென்று ஆயர்ப்பெரியோனுரைத்தமொழியைக் கேட்ட குடிமக்களில் விவேகசாலியாகிய ஒருவன் ஆண்டிக்கிழவனை நோக்கி ஐயா பண்டாரப்பெரியோரே நீங்களிருவரும் யாவர் எந்தவூர் உங்கள் நாமதேயமென்ன இந்தப் பெரியவரிடத்திலேன் வம்புசெய்கின்றீர் சொல்லுமையாவென்று கேட்கும்போது பண்டாரக்கிழவன் பகருகின்றார்.

கேளாயப்பா உத்தமபுருஷனே! ஒருமாதத்திற்கு முன்னம் யானிந்த வனத்திற்குத் தனியாக வரும்போது ஒருமூட்டையொன்றெடுத்துக்கொண்டு வந்தேன். அஃதென்ன மூட்டையென்றால், இந்த மண்ணுலகமாத்யந்தமும் விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களும் கோடானுகோடி பொன் பணங்களும் மூட்டையாகக் கட்டிக்கொண்டுவந்து, மாலைப்பொழுதுவேளையில் இந்தஆயர்க்கிழவனைக்கண்டு, சிலது நேரம் வார்த்தையாடிக்கொண்டிருந்து நேயவிடயமாகச் சந்தித்து, அன்றிரவு இந்தப்பெரியவரின் மனையில் தங்கி, பொழுது விடிந்து பிரயாணப்பட்டுப் போவதாகத் தீர்மானஞ்செய்துக்கொண்டு, எனது பொருள் மூட்டையை யவரிடங்கொடுத்துவிட்டு நாங்களிருவரும் சிலது இரகசியமும் பேசிக்கொண்டிருக்கும்போது, மேல்காற்றானது பிறந்து உலக ஆத்யந்தமும் உருட்டிப் பிரட்டி படித்துக்கொண்டு போகும்படியான காற்றிலகப்பட்டுத் திகைதப்பி, இத்தனை நாளாக வூருராயலைந்து, இப்போது வந்துகேட்டால் வம்புதும்பாக வார்த்தையாடிக்கொண்டு அடிக்கவருகின்றனே. இதென்ன அநியாயமாக விருக்கின்றதென்று ஆண்டிப்

பெரியோ ரக்ரமாக வுரைத்தவாக்கியத்தைக்கேட்ட, அருகிலிருந்த அறத்தாள மகாராஜனானவர், ஆண்டியின் கரத்தைப் பிடித்துக் கொண்டு ஐயா பெரியவரே! யானுமதருகிலிருக்கும்போது அந்தப் பொருளைப்பற்றி வெகுவாகத் துயரங்கொள்ளுகின்றீரே, அந்தப் பொருளானது போனால்போகட்டும். அந்தப் பொருளுக்குமேலாக பதின்மடங்கு அதிகமாகிய பொருள் யான் தருகின்றேன், வாருமை யாவென்று கரத்தைப் பிடித்தழைத்துக்கொண் டிருக்கும்போது, வியாசர்பாடிப் பட்டணத்தை யாளப்பட்ட நேசதூத மகாராஜனுக்கு இந்த வனத்தின் சேதியானது காதினில் வீழ்ந்து மகாராஜன் காவல்காரரையேவி, இவர்களெல்லோரையும் பிடித்துக்கொண்டு வரும்படியாகக் கட்டளையிட்டருளினவுடனே, காவலர்கள் ஓடோடியுஞ்சென்று வனத்திற்கு வந்து ஆயர்க்கிழவனையும் அறத்தாளச் சக்கரவர்த்தியையுங் கரத்தைப்பிடித்து வாருமென்றழைத்து, மூவரையு மழைத்துக்கொண்டு அரசன் முன்னிலையில் நிறுத்தி, இவர்கள் மூவர்கள்தான் வனத்தில் கலகஞ்செய்துக்கொண் டிருந்தவர்களையனே யென்று, தலைக்காவலனோதிய சேதியை நேசதூத மகாராஜாவானவர்கேட்டு, மூவர்களையு மருகிலழைத்து ஐயா பெரியவரே! நீங்களிருவரும் யாவர்கள்? உங்கள் தேசமெது? உங்கள் நாமதேயமென்ன? இந்தச் சிறுவன் யாரையா! நீங்கள் மூவர்களும் இயாதுக்காக விரோதங்கொண்டீர்கள் கூறுங்களையாவென்று உரைத்து பண்டாரத்தை நோக்கிப்பார்த்து ஐயா ஆண்டிப்பெரியவரே! நீவிர் எந்தவூர்? உமது பேரென்ன? யேதுக்காகக் கலகஞ்செய்தீர் கூறுமையாவென்று நேசதூத மகாராஜாவானவர் கேட்கும்போது ஆண்டிப்பெரியோ ரறைகின்றார்.

கேளுமையாசுவாமி மகாராஜனே! நானோ, பண்டாரப்பரம்பரையானதினாலே எனக்கு நாடுநகரமும் வீடுவாசலுங்கிடையாதையா. நான் இத்தனைகாலமாகத் தேசதேசங்களாகத் திரிந்து மன்னாதி மன்னர்களிடத்திலும், இரத்தின வியாபாரிகளிடத்திலும் உலகமாத்யந்தமும் விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களும், பட்டுப் பட்டாடைகளும் கோடானுகோடி பொன் பணங்களும் பெற்றுக் கொண்டு அவைகளையெல்லா மொருமூட்டையாகக்கட்டிக்கொண்டு, ஒருமாதத்திற்கு முன்பு இந்த ஊரையடுத்த வனத்தில் தனிமையாக நடந்து வருகும்போது இந்த ஆயர்க்கிழவனைக் கண்டு வார்த்தையாடி நேசித்து, அன்றைய இரவிற்கு இந்தக் கிழவன் மனையிற் றங்கியிருந்து, பொழுது விடிந்து பிரயாணப்படுவதாக நாங்கள் இரு

வரும் பேசிச் சம்மந்தத்தை முடிவு செய்துகொண்டதின் பின்,
இந்தக் கிழவனானவன், தான் தலையின்மீது வைத்துக்கொண்டிருந்த
மூட்டையைப் பார்த்து, அந்த மூட்டையைத்தாரும். நானெடுத்
துக்கொண்டு வருகின்றேனென்று கேட்கவும், நானந்த மூட்டையை
இந்தக் கிழவனிடத்திற் கொடுத்து நானுங்கிழவனும் வேறுமார்க்
கம் பேசிக்கொண்டிருக்கும்போது பாழாய்ப்போன மேல்காற்று
னது வந்து எங்கேயோ திசைதப்பிக்கொண்டுபோய் விட்டுவிட்டது.
அதன் பின்பு யானெழுந்து தேசதேசங்களாகச் சுற்றியலைந்து, இப்
போது வந்துசேட்டால் உடைந்துபோன வோட்டை சட்டிப்பானை
களைக் கொடுத்ததாகச் சாதனைசெய்து தடிகொண்டடிக்க வருகின்
றானையாவென்று முதியோராகிய கதிரைவேற் பண்டாரமானவர் கழ
ன்றருளினர்.

பண்டாரமுரைத்த சேதியைக்கேட்ட நேசதூத மகாராஜாவா
னவர் பின்னும் பண்டாரத்தை நோக்கி ஐயா ஆண்டிப்பெரியவரே !
உமது இடப்பாகத்தில் நின்றுக்கொண்டிருக்கின்ற சிறுவன் யாரை
யா? அன்னவனுக்கு இடதுகரமெவ்வாறாக அற்றுப்போய்விட்டது.
என்னகாரணம்? கேளுமையா நேசதூத மகாராஜனே! இவர்யாரென்
றால், இந்த தேயத்திற்குக் கீழ்த் திசையிலிருக்கப்பட்ட ஞானபுரி
யென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாள மகாராஜனென்ப
வர் இவர்தானையாவென்று பண்டாரமுரைத்த வாக்கியத்தைக்கேட்
ட நேசதூத மகாராஜனானவன்? திடீரென்று சிம்மாதனத்தை விட்
டெழுந்து ஆ ஹா! இவர்தானோ? அறத்தாள மகாராஜனென்பவரென்
றுரைத்துக்கொண்டே கொலுமண்டபத்தை விட்டு இறங்கிவந்து
அறத்தாள மகாராஜனின் பாதத்தில் விழுந்து பணிந்தெழுந்து
இருகரத்தையுங் கட்டிக்கொண்டு கேளும் சுவாமி மண்ணுலகாதி
பதிச் சக்ரவர்த்தியே! இந்நேரம் வரையிலும் தாங்களின்னாரென்றறி
யாத இவ்வடிமையை யாதரித்தாட் கொள்ளும் தருமபூபதியே யெ
ன்று வந்தன வாக்கியங்களுரைத்து, அஞ்சுதலைகொண்டு நின்றுகொ
ண்டிருக்கின்ற நேசதூத மகாராஜனின் அடக்கவொடுக்கங்களைக்
கண்டறிந்த இளஞ்சக்ரவர்த்தியானவர் களிப்புகொண்டு ஐயா அர
சனே! அதுவெல்லா மிருக்கட்டும். இந்த ஆயர்க்கிழவனை தீரவிசாரி
யுங்களையாவென்று இளவேந்தன் இயம்பிய மொழியைக்கேட்ட
நேசதூத மகாராஜனானவன், சக்ரவர்த்தியின் இரண்டு கரத்தையும்
பிடித்துக்கொண்டு வாருமையாவென்று பெரியவரையு மழைத்துக்
கொண்டுபோய், அறத்தாள மகாராஜனை சிம்மாதனத்தி லமர்த்தித்
தானுமருகிலமர்ந்து பெரியவரையு மமரச்செய்து மற்றுமுன்னோர்

'களையெல்லாங் கையமர்த்தி ஐம்பத்தைந்து தேயங்கட்குஞ் சக்ரேஸ்பரனாகிய அறத்தாள மகாராஜனை நோக்கி நேசதூத மகாராஜன் பேசத்தொடங்கினர்.

மன்னாதி மன்னவர்களின் மன்னவனே! கேளும். தாங்கள் ஐம்பத்தைந்து தேயங்களையாளப்பட்ட சக்ரேஸ்பரனாகவிருந்து ஆடையாபரணங்களில்லாமலும், இடது கரமிழந்து வாகனமற்றுப் படைகளில்லாமலும் கால் நடையாகப் பரதேசிவேடம்பூண்டு, இந்தப்பண்டாரக் கிழவனோடுகூட எங்ஙனம்போகின்றீர் கூறுமையாவென்று வியாசர்பாடியை யாளப்பட்ட மன்னவனுரைத்த வாக்கியத்தைக் கேட்ட மண்ணுலகிந்திரனாகிய அறத்தாள மகாராஜன் நேசதூத மகாராஜனைநோக்கி ஐயா மகாராஜனே! எனது நாடு நாகரங்களை விட்டு பாதசாரியாகப் பரதேசி வேடம்பூண்டு, இந்த ஆண்டிப் பெரியோருடன் வந்ததேதுக்கென்றால், பட்டாம்புரி யென்னும் பட்டணத்தை யாளப்பட்ட கட்டழகு மகாராஜனின் புதல்வியாகிய கற்பகவல்லியென்னும் பெண்மணியானவள் தருமக்கோட்டை யொன்று கட்டிக்கொண்டு, மிகமின்றித் தானதருமங்கள் புரிந்து கொண்டு, யாவர்களாகிலும் வந்து எந்தபொருளை நாடிக்கேட்ட போதிலும், இல்லையென்னாமல் அறம்புரிகின்ற தருமகுமரியைக் கண்டு தரிசிக்கலாமென்று நினைவுகொண்டு, இந்தப் பண்டாரத்தோடுகூடப் பிரயாணப்பட்டுப் போகின்றேனையாவென்று இளவேந்தனியம்பிய வார்த்தையை வியாசர்பாடிவேந்தன் கேள்விப்பட்டு, சக்ரவர்த்தியை நோக்கி கேளுமையா இளஞ்சக்ரவர்த்தியே! பட்டாம்புரிக்கு நீவிர்போனால் போய்வாரும். நான் சிலது தண்டுதளங்களையும் முடனனுப்பி வைக்கின்றேன். தாங்களும் இதோ இந்தப்பட்டுப்பட்டாடைகளையுடுத்திக் கொண்டு இந்த ஆபரணங்களையெல்லா மெடுத்துப்பூண்டுக் கொள்ளுமையாவென்று நேசதூத மகாராஜன் மொழிந்த மொழியை இளவரசமன்னவன் கேட்டு ஐயா மகாராஜனே! தருமகாரியமாகப் பிரயாணப்பட்டுப் போகப்பட்டவனாகிய எனக்கு, ஆடையாபரணங்களும் வாகனங்களும் தண்டுதளங்களும் வேண்டுவதில்லை. இதோ இந்த ஆயர்க்கிழவனை விசாரணை செய்தால் அதுதானெனக்குப் போதுமான வுபகாரமென்று மகாமன்னன் விளம்பினன். சக்ரவர்த்தியின் வாக்கைக்கேட்ட நேசதூதமகா ராஜனானவன் கடுஞ்சினங்கொண்டு ஆயர்க்கிழவனை நோக்கிப்பார்த்து அடே இடைக்கிழவா நடந்த சேதிகளை யுண்மையாகத் தெரிவிக்கின்றனையா அல்லது ஆக்கினைவிதிக்கட்டுமாவென்று பயமுறுத்திக்கேட்கும்போது ஆயர்க்கிழவன் கூறுகின்றான்.

கேளுமையா சுவாமி மகாராஜனே! இந்த ஆண்டிப்பெரியோரின் மனதைச் சோதித்தறியும் பொருட்டாக இதுநேரம் வரையிலும் சாக்குப்போக்குகள் சொல்லி வீண்வார்த்தைகள் பேசிக்கொண்டிருந்தேன். இப்போது எந்த ஆளையாவது ஒரு ஆளையென்னுடன் கூட அனுப்புவீரானால் பண்டாரங்கொடுத்த பொருளைக் கொடுத்தனுப்புகின்றேனென் றுரைத்தவுடனே, அருகிலிருந்த காவலனையேவி அடேயப்பா காவலனே! நீ இந்த ஆயர்க்கிழவனுடன் சென்று பொருள் மூட்டைகொடுப்பார், எடுத்துக்கொண்டு வாரும்பிள்ளாயென்று கட்டளையிட்டவுடனே. காவலனானவன் ஆயர்க்கிழவனின் கரத்தைப்பிடித்து வாருமையாவென் றழைத்துக்கொண்டு, கொலுக்கூடத்தைக் கடந்து வெளியில் வந்து பொருள் மூட்டை யெங்கனம் வைத்திருக்கின்றாய். இப்போது ஏனையோனையெங்ஙன மறைத்துச் செல்லுகின்றாய் சொல்லுமையாவென்று ஆயர்க்கிழவனானவன் காவலனை யழைத்துக்கொண்டு வனத்திற்கு வந்து, தான் வைத்துவைத்திருக்கின்ற ஓட்டைச்சட்டிப்பானை மூட்டையை எடுத்து, காவலனின் சிரசில் தூக்கி வைத்துவிட்டு அப்பா காவலனே! இந்த மூட்டையை யெங்கேனும் அவிழ்த்துப் பார்க்கவேண்டாம். மீறி அவிழ்த்துப் பார்ப்பீர்களானால் அதிலிருக்கப்பட்ட பொருள்களிலேயேதாவது குறையுமானால் உன் மீதுதான் களவுநாடும். ஆகையினாலே அந்தமூட்டையை யவிழ்க்காமற்படிக்கு அப்படியேயெடுத்துக் கொண்டுபோய் உங்களரசனிடத்தில் கொடுத்துவிடு மப்பாவென்று காவலனை யனுப்பிவிட்டு ஆயர்க்கிழவனானவன் ஆடுமாடுகளைமடக்கியோட்டிக்கொண்டு அரண்மனைக்குவந்து சேர்ந்து விட்டான்.

காவலனானவன் மூட்டையைத் தூக்கிக்கொண்டுபோய் இராஜசபையின் நடுவில் வைத்துவிட்டு நேசதூதமகாராஜனைப் பார்த்து போற்றிபோற்றி மகாராஜனே! இதோ ஆயர்க்கிழவன் கொடுத்த மூட்டையை யெடுத்துக்கொண்டு வந்தேன். இதோபாரும் சுவாமியென்று மூட்டையைச் சுட்டிக்காட்டிவிட்டு காவலன் நின்றுக்கொண்டிருக்கும்போது நேசதூதமகாராஜனானவன் காவலனைநோக்கி அப்பா காவலனே! அதோ அந்த மூட்டையை யவிழ்த்து அதற்குள்ளிருக்கும்படியான பொருள்களை வெளியினிலெடும்பிள்ளாயென்று வேந்தன் விளம்பியவுடனே காவலனானவன் மூட்டையை யவிழ்த்து அதற்குள்ளாக விருந்த ஓட்டைசட்டிப் பானைகளை யெடுத்து வெளியில் வைத்தவுடனே, நேசதூத மகாராஜனானவன் பார்த்து பண்டாரத்தை நோக்கி ஐயா ஆண்டிப் பெரியோரே! இந்தப்

பொருளானது உம்மிட பொருள்தானா, பாருமையாவென்று வியாசர்பாடி வேந்தன்கேட்கும்போது ஆண்டிப்பெரியோ ரறைகின்றார்.

கேளுமையா மகாராஜனே நான் கொடுத்த பொருளானது இதோ இந்தப் புண்ணியவான் பூணும்படியான ஆடையாபரணங்களும் இன்னும் மன்னாதி மன்னர்களின் பொருள்களும் கோடானுகோடிப் பொன் காசுகளும் ஒரு ஆள் பாரமுடைய மூட்டையாகப் பட்டு கம்பளத்தில் கட்டிக்கொடுத்தேனையா, அவைகளை யெடுத்தொளித்து வைத்துக்கொண்டு அந்தக்கிழவனானவன் இந்த ஓட்டைசட்டிதான் கொடுத்தேனென்று சாதிக்கின்றானையா, அந்தக் கிழவனை இலேசாக விடப்போகாதென்று கதிரைவேற்பண்டார முரைத்த வுரையைக் கேட்ட நேசதூத மகாராஜனானவர், கடுங்கோபங்கொண்டு காவலனைப்பார்த்து அடே விவேகமற்ற மூடக்காவலனே, ஓட்டை சட்டிப் பானைகளைக்கூட மூட்டையாகக் கட்டி தூக்கிக்கொண்டு வருகும்படியான மூடர்களில் உன்னைப்போன்ற மூடர்கள் உலகத்திலொருவருமே யில்லையடா விவேகமற்றவீணனே! அந்தக்கிழவன்தான் கொடுத்தபோதிலும் இந்தப்பொருள்களை எந்தவிதமாக நீ யெடுத்துக்கொண்டு வந்தனையடா மதியற்ற பாமரக்காவலனே! சீ இங்ஙனம் நிற்காதே அப்புற மோடிப்போடா வென்று வெறுத்துரைத்து விட்டுத் தலைக்காவலனை யழைத்து அப்பா காவலதிகாரியே! நீ அதிக சுருக்காகச்சென்று ஆயர்குலத்தோனாகிய பரசுராமக்கோனாரைக் கழுத்தைப் பிடித்து நெட்டித்தள்ளிக் கொண்டு இங்ஙனம் கொண்டு வாரும்பிள்ளாயென்று கட்டளையிட்டருளினவுடனே, தலைக்காவலனானவன், பின்னும் நான்கு காவலர்களை யழைத்துக்கொண்டு ஆயர்பாடிக்குச் சென்று பரசுராமக்கோனாரைக் கரத்தைப் பிடித்திழுத்து வாருங்காண் மோசக்காரக் கிழப்பிணமே! யென்று கழுத்தில் கரம்போட்டு நெட்டித்தள்ளிக்கொண்டு வந்து கொலுமுகத்தில் நேசதூத மகாராஜன் முன்னிலையில் நிறுத்தினவுடனே மகாராஜாவானவர் ஆயர்கிழவனைக் கண்டு அடே கிழத்தேவடியாள்மகனே! இந்தப் பண்டாரமானவர் உன்னிடத்தில் கொடுத்தது மன்னர்கள் பூணும்படியான விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களும் எண்ணற்ற பொன் பணமும் ஒரு ஆளின் பாரமுள்ள பொருள்மூட்டையை யெடுத்து மறைத்து வைத்துக்கொண்டு உபயோகமற்ற வோட்டைப்பாண்டத்தைக் கொடுத்தனுப்பினையல்லவா, அடே கிழப்பயலே இந்தப் பெரியவரின் பொன்பொருளைக் குறைவின்றித் தருவாயானா லுன்னை விட்டுவிடுவேன். இல்லாமற்போனா லுன்னைக் கழுவிலேற்றி

விடுவேனென்று உண்மையாக நினைத்துக்கொள்ளடா, கிழப்பயலே சொல்லடா ஆண்டிப்பெரியோரின் பொருள்மூட்டையைத் தருகின்றயா இல்லையாவென்று வேந்தன் வினவும்போது ஆயர்க்கிழவன் கூறுகின்றான்.

கேளுமையா மகாராஜனே இவர்களிருவர்களும் பொங்கி யுண்பதற்கு யாதொரு பாண்டமுமில்லாமல் வெறுங்கையோ டிருக்கின்றார்களேயென்று பரிதாபப்பட்டு, எங்கள் மூன்றாவது பாட்டியார் ஆண்டுக்கொண்டிருந்த சட்டிப்பானைகளை இவர்களின் குணத்திற்காக அதனை யிவர்கட்குக் கொடுத்தனுப்பினேனேயன்றி, இவர்களையல்லது மற்றெவர்களாக இருந்தபோதிலும், அந்தச் சட்டிப்பானைகளைக்கொடுக்கவேமாட்டேன். இஃது பெரியோர்களாண்ட பாண்டமாச்சுதே யென்று இவர்கட்குக் கொடுத்தால் இதனை வேண்டாமென்கின்றார்க ளல்லவா நல்லது இதோ இதனையெடுத்துக் கொள்ளுகின்றேன் என்னுடன்கூட வுமது ஆளையனுப்பிவையுமையா கொடுத்தனுப்புகின்றேனென்று ஆயர்க்கிழவன்கூறினவுடனே, ரேசதூத மகாராஜனவர் தலைக்காவலனை யழைத்து அப்பா காவலதிகாரியே! இந்தக் கிழவனுடன் நீசென்று அவன் கொடுக்கும்படியான பொருள்மூட்டையை யெடுத்துக்கொண்டு சுருக்காக வாரும் பிள்ளாயென்று ஆக்ஞாபித்தவுடனே காவலனானவன் கிழவனை யழைத்துக்கொண்டு வாருமையாவென்று அரசனது கொலுமண்டபத்தை விட்டு வெளியில் வந்து கிழவனை நோக்கி ஐயா ஆயர்குலாதிபனே! அந்தப் பொருள்களை யெங்ஙனம் வைத்து வைத்திருக்கின்றீர். என்னை எவ்விடத்திற்கழைத்துக் கொண்டு போகின்றீர் புகலுமையாவென்று காவலனானவன் கேட்கும்போது ஆயர்த்தலைமகன் கூறுகின்றான்.

கேளாயப்பா காவலனே! முன்னம் நீ வந்து என்னை யழைத்துக்கொண்டு வந்தனையே! அந்த மனைக்குத்தான் போகின்றேன் வாருமப்பாவென்று காவலனையழைத்துக் கொண்டு தனது மனையின் வெளிப்புறத் திண்ணையின்மீது குந்தவைத்துவிட்டு, பரசுராமக்கோனார் மனைக்குள்ளாகப்புகுந்து தான் கொண்டுவந்த மூட்டையை யவிழ்த்து ஓட்டை சட்டிப்பானைகளை யெல்லா மெடுத்தெறிந்துவிட்டு, புதுப்பாண்டமாய்ச் சட்டியும் பானையுமாக எடுத்து, ஒவ்வொரு பானையிலும், சட்டிகளிலும், பூனைமலமும், எலிப்புழுக்கையும், கழுதைப்புட்டையும் எருமைச்சாண முதலியதெல்லாம் வைத்

திரப்பி, அந்தப்பாண்டங்களையெல்லாம் கோணிப்பையி லெடுத்து வைத்து வாய்ப்புறத்தை நன்றாக இழுத்து இறுகக்கட்டி முத்திரைபோட்டு தூக்கிக்கொண்டு வெளியில்வந்து காவலனையழைத்து அப்பா காவலனே! இதோ இந்த மூட்டையை வாங்கிக்கொள்ளுமப்பாவென் றுரைத்து, தான் தூக்கிக்கொண்டுவந்த மூட்டையைக் காவலனின் சிரசில் வைத்து அப்பா காவலனே நீ இந்த மூட்டையை வழிமார்க்கங்களில் அவிழ்த்துப் பார்க்காமலும், அதிலிருக்கப்பட்ட பொருள்களைக் களவாடாமலும், பதனமாக வெடுத்துக்கொண்டுபோய் நமது நேச தூதமகாராஜனிடத்தி லொப்பிவையுமையா இதோ வுனது பின்பற்றியானும் வருகின்றேன். போமையாவென்று மூட்டையைக் கொடுத்துக் காவலனையனுப்பிவிட்டு, ஆயர்க்கிழவனுமவன் உண்டு உறங்கினன். காவலனுனவன் மூட்டையைத் தூக்கிக்கொண்டு போவதற்குள்ளாக கொலுக்கூடங் கலைந்து, ஆங்குள்ளவர்க ளெல்லோர்களும் விடைபெற்றுச் சென்றதின்பின்பு, நேச தூதமகாராஜாவானவர் இளஞ்சக்ரவர்த்தியையும் கதிரைவேற் பண்டாரத்தையும் அழைத்துக்கொண்டு, அரண்மனைக் குள்ளாகப்புகுந்து காற்கரங்கள் சுத்திசெய்துக்கொண்டு மூவர்களும் அமர்ந்து அறுசுவையுங் கூட்டி முப்பழமொடு பாலன்னமும் படைக்கச்செய்து மூவர்களுமுண்டெழுந்து பள்ளிமனைக்குச்சென்று ஒவ்வொருவரும் தனித்தனியாகப் பஞ்சணையின்மீது படுத்துக் கண்ணுறங்கினார்கள்.

(இக்கதையை வாசிக்கப்பட்ட ஆசைமித்திரக் குழாங்களே கேளுங்கள்) தலைக்காவலனுனவன் ஆயர்க்கிழவன் வீட்டிலிருந்து தூக்கிக்கொண்டுவந்த புதுப்பாண்டங்களின் மூட்டையைத்தனது வீட்டிற்றுனே பதனமாக வைத்துக்கொண்டு, தானுமுணவருந்தியதின்பின்பு பாய்மேற்படுத்து துயில்செய்துக்கொண் டிருந்தனன். பஞ்சமா பாதகரின் நெஞ்சைப்போன்ற இரவு முழுவதுங் கலைந்து பொழுதுவிடிந்து அருணன்பிறந்து பட்சிப்பறவைகளெல்லாம் படபடவென்று இறகையடித்துக் கொண்டு வெளிப்படுகின்ற வோசையைக்கேட்டு நேசதூதமகாராஜனும், அறத்தாளச்சக்ரவர்த்தியும், ஆண்டிப்பெரியோரும் விழித்தெழுந்து காலைக்கடனுதி நேமநிஷ்டைகளையெல்லாங் குறைவின்றி நிறைவேற்றிக் கொண்டு முப்பழஞ் சருக்கரையும் பஞ்சாமிர்தமும் மூவர்களுமுண்டு எழுந்து கொலுமூகத்தை நாடி வந்து அறத்தாள மகாராஜனை சிம்மாதனத்திற் குந்தவைத்துவிட்டு, நேசதூத மகாராஜனும் ஆண்டிப்பெரியோரும்

அருகிலமர்ந்த வுடனே, தலைக்காவலனானவன் மூட்டையைத் தூக்கிக்கொண்டு வந்து கொலுமண்டபத்தில் நேசநூத மகாராஜன் முன்னிலையில் வைத்துவிட்டு நின்றுக்கொண்டிருக்கும்போது, நேசதூதனானவன் தலைக்காவலனை யழைத்து அப்பா காவலனே! எமதோ அந்த மூட்டையை யவிழ்த்து அதற்குள்ளாக இருக்கின்ற பொருள்களை யெல்லா மெடுத்து வெளியினில்வையும் பிள்ளாயென்று ஆக்ஞாபித்தவுடனே, காவலனானவன் மூட்டையையவிழ்த்து புதுப் பாண்டங்களை யெடுத்துவைத்து, அந்தப்பாண்டங்களிலிருக்கின்ற பூனைப்புழுக்கையும் நாய்ப்புழுக்கையும் எலிப்புழுக்கையும் கழுதை புட்டையும் எருமைச் சாணமும் எடுத்துத் தரையில் வைத்த வுடனே நேசதூதமகாராஜன் பார்த்து கடுங்கோபங்கொண்டு தலைக் காவலனை நோக்கி அடே காவலதிகாரியே! உனக்கு தலைக்காவலனென்கிற பட்டம் பொறுக்காது. அதேதுக்கென்றால், நேற்றையதினம் வாயற்படிக் காவலன்சென்று ஓட்டைச்சட்டிப்பானைகளை தூக்கிக் கொண்டு வந்தான், அன்னவனை மூடர்களிலும் முழுமூடனென்று மதித்துக் கொண்டேன். இப்போது நீ கொண்டுவந்ததைப் பார்த்தால் மூடர்களின் சங்கத்திற்கு உன்னைத்தான் தலைமையுபாத்தியாயனாக நியமிக்க வேண்டியது. அடே மூடசிரோன்மணியே இதுவென்னடா? ஆடையாபரணங்களும் பொன்பொருள்களும் கட்டிவைத்திருக்கின்ற மூட்டையை வாங்கிக்கொண்டு வாருமென் றனுப்பினதற்கு கழுதைப்புட்டையும் குதிரைப்புட்டையும் பூனைப்புழுக்கையும் நாய்ப்புழுக்கையும் எலிப்புழுக்கையுமாகப் பாண்டத்தில் வைத்தெடுத்துக் கொண்டுவந்த காரணமொன்றும் விளங்கவில்லையேயென்று நேசதூதமகாராஜன் கேட்கும்போது காவலனானவன் சொல்லுகின்றனன்.

கேளுமையா சுவாமி மகாராஜனே! அந்த ஆயர்க்கிழவனானவன் இதுதான் பொருள்மூட்டையென் றுரைத்து எனது தலையின்மீது வைத்து எடுத்துக்கொண்டுபோய்த் தங்களிடத்தி லொப்பிவைக்கச் சொன்னானையனே. ஆகையினாலே யெடுத்துக்கொண்டு வந்தேன், மகாராஜனே யென்று காவலனோதிய சேதியை வியாசர்பாடியின் அரசன் கேட்டு கடுஞ்சினங்கொண்டு தலைக்காவலனை நோக்கிப் பார்த்து அடே பாமரச்சிரோன்மணியே! நீயே சென்று அந்த ஆயர்குலக் கிழத்தேவடியாள் மகனை இழுத்துக்கொண்டு வாரும் பிள்ளாயென்று கட்டளையிட் டருளினவுடனே, காவலனானவன் ஓட்டமும் நடையுமாக வோடிச்சென்று ஆயர்க்கிழவனைக் கண்டு

கழுத்தில் கரத்தைப் போட்டு நெட்டித்தள்ளிக்கொண்டு கொலு முகத்திற் கழைத்துக்கொண்டுவந்து அரசன்முன்னிலையில் கிழவனை நிறுத்தினவுடனே, நேசதூத மகாராஜன் ஆயர்க்கிழவனை நோக்கி அடே மடக்கிழப்பயலே! நல்லது உனது மதத்தை யொடுக்குகின்றேனுகட்டும். நேற்றையதினம் ஒட்டைசட்டிப் பானைகளைக் கொடுத்தனுப்பினுய் இன்றையதினம் இதோ இந்தத் தகைமையாகக் கொடுத்தனுப்பி யிருக்கின்றாய், உண்மையாக இன்றையதினம் பண்டாரப் பெரியோரின் பொருள்களை பகல் பதினைந்து நாழிகைக்குள்ளாகக் கொடுக்கக் கூடாமற்போனுல் பதினாறும் நாழிகைக்கு உன்னைக் கழுவிலேற்றி உயிர்வதை செய்குவேனடா என்ன சொல்லுகின்றாய் சொல்லுங்கிழவனே யென்று அரசன் கேட்கும்போது ஆயர்க்கிழவன் அறைகின்றான்.

கேளுமையா சுவாமி மகாராஜனே முன்னம் கொடுத்ததுதான் ஓட்டைச் சட்டிப்பானையென்றும் உதவாதென்றும் விலக்கிவிட்டீர். இந்தப்பாண்டங்களெல்லாம் புதுப்பாண்டங்களாக விருக்கின்றது. அதிலும் இந்தப்பாண்டங்களில் சில பிச்சம்பழங்களும் சிலது இலந்தங்கனிகளும் சீத்தாக்கனிகளும் வைத்திருக்கின்றேன். அந்தக் கனிகளை இந்தப்பாண்டத்தி லேன்வைத்து அனுப்பினேனென்றால், இந்த ஆண்டிப்பெரியவரும் அறத்தாள மகாராஜனும் நெடுநாளாக வுணவு புசிக்கவில்லையென்று கேள்விப்பட்டு இவர்களுக்காகப்பரிதாபங்கொண்டுகொடுத்தனுப்பினதேயன்றி பரிகாசத்திற்காகக் கொடுக்கவில்லையையனே, அந்தக்கனிகளை அவர்கள் வேண்டாமென்றால் தாங்களாகிலும் சிலது கனிகளை யெடுத்துண்டு பாருமையனேயென்று ஆயர்க்கிழவன் கூறினான்.

கோனர் கூறிய மொழியைக் கேட்ட நேசதூத மகாராஜனனவர் கடுங்கோபங்கொண்டு தனது முதல் மந்திரியை யழைத்து கேளும்பிள்ளாய் மந்திரி! இந்த இடக்கிழவனானவன் நம்மை அலட்சியமாக நினைவுகொண்டு இராஜசபையில் நம்மையும் இந்தச் சக்ரவர்த்தியையும் ஏளனமாகப் பரிகாசஞ்செய்கின்றான். ஆனதினாலே யிந்தக் கிழப்பயலுக்கு முன்விலங்கு பின்விலங்கு பூட்டி இவனை யிழுத்துக்கொண்டுபோய் இவனது சொந்த மனையிலும் இவன் பந்துக்களின் மனையிலும் இன்னும் உனக்கு சந்தேக மிருக்கின்றவிடங்களிலெல்லாம் சோதனை செய்து பண்டாரப்பெரியோரின் பொருள்களைக் கண்டு பிடித்தெடுத்துக்கொண்டு வந்ததின் பின்பு, இந்தக்

கிழப்பயலைக் கழுவிலேற்றி யுயிர்வதை செய்யக்கடவாயென்று அரசனுரைத்த வாக்கியத்தைக் கேட்டுக்கொண்டிருந்த ஆயர்க்கிழவனானவன் நேசதூத மகாராஜனை நோக்கி கேளும் சுவாமி இராஜபரமேஸ்பரா, இந்நேரம் ஆண்டிப்பெரியோரைப் பரிகாசஞ்செய்ததேயன்றி மற்றெவர்களையும் பரிகசிக்கவில்லையையனே. இந்தப் பண்டாரமானவர் கொடுத்த விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களும் பொன் பணங்களும் எனது மனையில்தான் இருக்கின்றது. நானந்தப் பொருளை மோசஞ்செய்து இந்தப் பெரியவரை வஞ்சிப்பேனானல்லவோ எனக்கு விலங்கிடவேண்டியது. ஆண்டியானவரென்னிடம் பொருள்கொடுத்தது உண்மையுண்மைதான். இப்போதென்னைத் தனிமையாக அனுப்புவீரானால், நான் சென்று அந்தப்பொருள்மூட்டையை யெடுத்துக்கொண்டு அரைநாழிகைக்குள்ளாக இங்ஙனம் வந்து சேர்கின்றேன். அவ்விதமே அரைநாழிகைக்குள்ளாகப் பெரியவரின் பொருள்மூட்டையை யெடுத்துக்கொண்டு இங்ஙனம் நான் வராவிட்டால் உண்மையாக என்னை யுயிர்வதைசெய்துவிடுமையனே யென்று ஆயர்க்கிழவன் அறைந்த வாக்கியத்தைக் கேட்ட அரசனானவர் நல்லதென்று சிரசையசைத்து ஆயர்க்கிழவனை நோக்கி ஐயா கோனாரே! உண்மையில் நீவிர் சொன்ன நாழிகைக்குள்ளாகப் பொருள்மூட்டையை யெடுத்துக்கொண் டிங்ஙனம் வந்துசேர்வதானால் சுருக்காகப்போய் வாருமையாவென்று வேந்தன் விளம்பியருளினார்.

ஆயர்க்கிழவனானவன் அரசனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு கொலுமண்டபத்தைக் கடந்து ஓட்டமும் நடையுமாக ஓடிச்சென்று பொருள்மூட்டையை யெடுத்துத் தலையின்மீது வைத்துக்கொண்டு ஓடோடியுங் கொலுமண்டபத்திற்கு வந்து நேசதூத மகாராஜனின் முன்னிலையில் பொருள் மூட்டையை வைத்துவிட்டு கேளும் சுவாமி மகாராஜனே! பண்டாரத்தின் பொருள் மூட்டையிதுதானையனே பார்த்தருளுமென்று ஆயர்த்தலைவனுரைத்த சேதியை யரசன் கேட்டு பண்டாரத்தை நோக்கிப்பார்த்து ஐயா பெரியவரே! இந்த மூட்டை யும்முடைய மூட்டைதானா பாருமையாவென்று வேந்தன் கேட்கும்போது, பண்டாரமானவர் மூட்டையைப் பார்த்து, ஆம் இந்தமூட்டை யென்னுடைய மூட்டைதானென்றுரைத்தவுடனே, நேசதூதனானவர் அருகிலிருந்த காவலனை நோக்கி அடேயப்பா காவலனே! அதோ அந்த மூட்டையை யவிழ்த்து அதற்குள்ளாக இருக்கப்பட்ட பொருள்களை யெல்லாம் வெளியினிலெடுத்து

வையும் பிள்ளாயென்று அரசனறைந்த மொழியைக்கேட்ட காவலனவன், அந்த மூட்டையை யவிழ்த்து அதிலிருக்கப்பட்ட ஆடையாபரணங்களையும் பட்டுப்பட்டாடைகளையும் பொன்பணங்களையுமெடுத்து அரசன் முன்னிலையில் வைத்தவுடனே, நேசதூதனென வன் விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களைப்பார்த்து ஆண்டிப்பெரியோரை நோக்கி ஐயா பண்டாரப்பெரியோரே! இந்தப்பொருள்களெல்லாம் உம்முடைய பொருள்கள்தானா? பார்த்தெடுத்துக் கொள்ளுஞ் சுவாமியென்று அரசனறைந்தவுடனே, பண்டாரப்பெரியோரெழுந்து ஆடையாபரணங்களையெல்லாமெடுத்து மூட்டையில் வைத்து ஆயிரம்பொன் பணமெடுத்து ஆயர்க்கிழவன் கரத்திற் கொடுத்து ஆயர்க்கிழவனைச் செல்லும்படியாக விடைகொடுத் தனுப்பிவிட்டு, மற்றுமுள்ள பணிகளையும் பணங்களையும் மூட்டையில் வைத்துக்கட்டி விட்டு கொலுகலைந்தவுடனே நேசதூத மகாராஜனும் அறத்தாளச் சக்ரவர்த்தியும் ஆண்டிப்பெரியோருமாக மூவர்களும் அரண்மனைக்குச்சென்று அசனம் புசித்து அன்று பகலுமிரவுங்கழித்து பொழுது விடிந்தவுடனே பண்டாரமானவர் தனது பொருள்மூட்டையை நேசதூத மகாராஜனிடத்திற் கொடுத்து வைத்து வைக்கச்செய்துவிட்டு அறத்தாளச் சக்ரவர்த்தியும் ஆண்டிப்பெரியோரும் நேசதூத மகாராஜனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அரண்மனையைக் கடந்து வெளியில் வந்து வியாசர்பாடியென்னும் பட்டணத்தைவிட்டு, இருவருங் காடு கானகங்களில் நடந்து எட்டுநாளிரவும் பகலுமாக வனசஞ்சாரஞ் செய்துக்கொண்டு ஒன்பதாநாள் காலையில் நவரத்தினவனமென்றொரு வனமுண்டு அந்தவனத்திற்கு இருவர்களும் வந்து சேர்ந்தார்கள்.

அறத்தாள மகாராஜனும் ஆண்டிக்கிழவனும் நவரத்தினவனத்திற்குள்ளாகப்புகுந்து அங்ஙனம் செழிப்பாகத் துளிரும் தழையும் இலையும் பூவும் பிஞ்சும் காயுங் கனியுமாக விளைந்திருக்கின்ற விருட்சங்களைக்கண்டு சக்ரவர்த்தியானவர் களிப்புகொண்டு பண்டாரத்தை நோக்கி கேளுமையா பெரியவரே! இந்த வனத்தில் விருட்சங்களிலிருக்கின்ற இலைகளையும் பூப்பிஞ்சுகளையும் காய்கனிகளையு முற்றுப் பாருமையா ஆ ஹா என்ன சோதிமயமாக நவரத்தினக் கற்களைப் போல பிரகாசிக்கின்றன. இரும் சுவாமி இந்த மாமரத்தின் மீதிலே சில காய்கனிகளைக் கொய்துக்கொண்டு வருகின்றேனென் றுரைத்துவிட்டு, இளவரசனனவர் மாவிருட்சத்தின் மீதிலேறி காய்கனிகளை யறுத்துக் கரத்தால் நசுக்கிப் பார்க்கும்போது, அந்தக்காய்

கனிகளெல்லாம் கருங்கல்லைப்போல அழுத்தமாகவும் மாணிக்கக் கற்களைப் போல ஒளிவீசுவதை மன்னன் கண்டு, இஃதேது அதிசயமாக விருக்கின்றதென்று இலைகளை யறுத்துப் பார்க்கும்போது அதிலுள்ள இலைகளெல்லாம் தங்கத்தகட்டைப்போல வுறப்பாக விருக்கின்றதை வேந்தன் கண்டு விருட்சத்தின்மீ திருந்தபடியா ஆண்டிப் பண்டாரத்தை நோக்கி ஐயா பெரியவரே! இதோ இந்த விருட்சத்தின் காய்கனிகளையும் இலைகளையும் அறுத்துப்போடுகின்றேன். இதனை யெடுத்துப் பாரும் சுவாமியென்று தானறுத்துவைத்திருந்தவைகளையெல்லாம் பூமியிற்போட்டு அரசனும் விருட்சத்தை விட்டுத் தரையிலிறங்கி ஏனையா பெரியவரே பார்த்தீரா! இவைகளென்ன கனிகளா அல்லது இரத்தினக்கற்களா வுற்றுப்பாருஞ் சுவாமி! இதோ இந்த இலைகளானது விருட்சத்தினிலைகள் தானா அல்லது தங்கத்தகடுகளா நன்றாய்ப்பார்த்து உரைசெய்யுமையாவென்று வேந்தன் கேட்கும்போது ஆண்டிப்பெரியோ ரறைகின்றார்.

கேளாயப்பா மன்னர் பெருமானே! கேளும். இஃதென்னமோ விந்தையாகத் தோற்றுகின்றதே! யான்பிறந் திதுகாலபரியந்தம். எத்தனையோ வனங்களையும் எத்தனையோ விருட்சங்களையுங் கண்டிருக்கின்றேன். விருட்சத்தில் நவரத்தினக்கற்கள் விளைகின்றதை என்னாயுள் பரியந்தம் இன்னேர வரையிலும் நான் கண்ணினால் கண்டதுமில்லை பிறர் சொல்லவுங் கேள்விப்பட்டதுமில்லை. எந்த நூற்களிலும் பார்த்ததுமில்லை. இஃதென்னமோ அதிசயமாக விருக்கின்றது. நல்லது இந்த மாமரத்தின் கனிகள் இத்தன்மையாக விருக்கின்றதல்லவா? அதோ அந்த கதலிக்கனியைக் கொண்டு வாரும் பிள்ளாய் அவைகளெவ்வா றிருக்கின்றனவோ பார்க்கலாமென்று பண்டாரப் பெரியோருரைத்த மொழியைக் கேட்ட பாராளும் மன்னனாகிய அறத்தாள மகாராஜனானவர், நல்லதென்று தலையையசைத்துக்கொண்டு சரேலென்று சென்று கதலிக்கனியைக் கொய்து பார்க்கும்போது அதுவும் நவரத்தினக்கற்களில் ஒன்றாகவிருக்கக்கண்டு அவைகளைக்கொண்டுவந்து ஆண்டிப் பெரியோரிடத்திற் கொடுத்து ஏனையா சுவாமி! இந்தக் கதலிக் கனிகளெவ்வாறிருக்கின்றதென்று மன்னன் கேட்கும்போது பெரியோர் கூறுகின்றனர்.

கேளும்பிள்ளாய் மன்னாதி மன்னனே! இஃதென்ன இந்தவனத்திலிருக்கின்ற கனிகளெல்லா மிவ்வாறுதா னிருக்குமோ? நல்லது நீ இங்ஙனம் வாரும். இதோ இந்தப் பலாவிருட்சத்தின் மீதிலேறி பெருத்த கனியாக ஓர் பலாக்கனி யறுத்துக்கொண்டு வாரும் அத

ணையும் சோதித்தறிந்ததின் பின்பு யோசித்துணரலாமென்று பெரியோரறைந்த வுரையைக்கேட்ட அரசனானவர் சரியென்று சென்று பலாவிருட்சத்திலேறி தனது விழிக்குப் பெரிதாகத் தோற்றப்பட்ட ஓர் கனியை இருகரத்தினாலும் பிடித்திழுத்துப்பார்த்து, ஓ கோ இதென்ன இந்தப் பலாக்கனியும் கல்லைப்போலவே யிருக்கின்றதே யென்று, அந்தக் கனியை விட்டுவிட்டு அந்த விருட்சத்திலிருக்கப்பட்ட கனிகளைப் பிடித்துப்பார்த்து சகல கனிகளும் கற்களாகவே யிருக்கக்கண்டு, முதலில் பிடித்த கனியையறுத்து விருட்சத்தின் மீதிலிருந்தபடியாகவே பெரியவரை யெச்சரிக்கை செய்து அறுத்த கனியைத் தரையிலெறிந்த வுடனே, அந்தக் கனியானது பூமியில் விழுந்தபோது கைலாய கெண்டாமணியி னோசையைப்போல கணீலென்று பெருத்தவோசை யுண்டாகினது.

அரசனானவர் விருட்சத்தை விட்டிறங்கி பெரியவரை நோக்கி ஐயா எனது குருமூர்த்தமாக வெழுந்தருளிய முதியோரேகேளும் இதோ இந்தக் கனியானதைப் பாருஞ்சுவாமி இதுவிழுந்தவுடனே கிளம்பிய வோசையையச் செவியினாற் கேட்டீரா ஐயனே யென்று வேந்தன் விளம்பும்போது ஆண்டிப்பெரியோரானவர் பலாக்கனியைக் கரத்தினாற் பிடித்துப்பார்த்து வேந்தனை நோக்கி கலகலவென்று நகைபுரிந்து சிலது நேரஞ்சென்று கேளாயப்பா அரசனே இந்த வனத்திலிருக்கின்ற விருட்சத்தின் கனிகளைப்பார்த்து ஆய்ந்தறிந்தால் இந்த வனமானது தலைதொங்கி வனத்தைப்போல விந்தையாகிய வனமாகக் காண்கின்றது. நல்லது இந்தக் கனிவிழுந்த விடத்தில் பூமி மண்ணையெடுத்துப் பார்வையிடவேண்டும் பிள்ளாய் இதோ இந்தவிடத்திலிருக்கின்ற மண்ணுங் கல்லுகளை அப்புறம் விலக்குமென்று தானுமவ்விடத்தி லமர்ந்து இருவருமாக கனிவிழுந்தவிடத்திலிருக்கின்ற மண்ணையுங் கல்லையும் பெயர்த்தெடுத்து இரண்டுமுழம் அகல நீளத்திலும் நான்குமுழம் ஆழத்திலும் பள்ளந் தோண்டிப் பார்க்கும்போது அங்ஙனம் ஒருவெண்கலக் கபாடம் மூடப்பட்டிருக்கின்றதை வேந்தனும் விருத்தையோனுங்கண்டு வியப்படைந்து ஆண்டியை நோக்கி ஐயா பெரியோரே இந்த வெண்கலக் கதவின்மீதுதான் பலாக்கனிவிழுந்தது ஆகையினாலேதான் கண்டாமணி வோசைகிளம்பியது. நல்லது இந்தக் கபாடத்தைத் திறந்து பார்த்துச் சோதித்தறியவேண்டுஞ் சுவாமியென்று வேந்தனானவன் விளம்பி அந்தக் கபாடத்தின் நான்கு புறத்திலு மிருக்கப்பட்ட கல்லுமண்களை சீராக வாரியெடுத்து கபாடத்திலகப்பட்ட

தாளைப்பிடித்துத் தூக்கியெடுத்து கதவைத்திறந்து பார்க்கும்போது இருள்மூடிய குகையைப்போல விருக்கின்றதை இருவருங் கண்டு வியப்புகொண்டு வேந்தனானவர் பண்டாரத்தை நோக்கிப் பகருகின்றார்.

கேளும் சுவாமி தேவரீர் இந்தக் குகையானது எவ்விடத்திற்கு வழிமார்க்கமோ இதனையுண்டுபண்ணினவர்கள் யாவரோ தெரியவில்லையே. இதன் மூலியமாக இறங்கிச் செல்லலாமென்றால் அடியும்படியுமில்லாப் பாழுங் கிணற்றைப்போல விளங்குகின்றதே இது எந்த லோகத்திற்குப் போகின்ற மார்க்கமோ தெரியவில்லையே இதற்குள்ளாக வாசஞ்செய்யப்பட்டவர்கள் அமரரோ அரக்கரோ மானிடரோ இந்தக் குகையானது எவ்விதமாக வுண்டாயினதோ தெரியவில்லையே. நல்லது இந்த வனத்தில் இன்னுமிரண்டொரு நாளைக்குத் தங்கியிருந்து விருட்சத்தி னிரகசியத்தையும் இந்தக் குகையின் மார்க்கத்தையுங் கண்டறியாமற்படிக்கு இந்த வனத்தைவிட்டுப்போகலாகாதையனே இந்தக் கபாடத்தைச் சாற்றிவிடுமென்றுரைத்து கதவைச்சாற்றித் தாள்போட்டுக்கொண்டு பழையபடியாகவே மண்ணைத் தள்ளிப் பள்ளத்தைமூடிவிட்டு அருகிலிருந்த பலா விருட்சத்தடியினில் வந்தமர்ந்து இவர்கள் கொண்டுவந்த காய்கனிகளை யிருவர்களுமுண்டிளைப்பாறி அங்ஙனமே யிருந்து அருணன் மறைந்து இரவுபிறந்தவுடனே அரசனும் ஆண்டிக்கிழவனும் மண்மேல் படுத்து கண்களைமூடி நித்திரை புரிந்துகொண்டிருக்கும்போது இரவுபத்துநாழிகைக்கு மேலாக அந்த விருட்சத்தின்மீது கேட்போரஞ்சுதலை கொள்ளும்படியாக ஓசையொன்று பிறந்தது. அங்ஙனம் நித்திரைசெய்துகொண்டிருக்கின்ற அரசனும் பண்டாரமும் அந்த வோசையைக் கேட்டுத் திடுக்கென்று கண்விழித்துப் பார்க்கும்போது அங்ஙனம் ஜீவராசிகளொருவரையுங் காணாமையினாலே இருவருமெழுந்து விருட்சத்தின்மீதும் வனத்திலுஞ் சுற்றுமுற்றும் பார்வையிட்டு அரசனானவர் கூறுகின்றார்.

தேவரீர் கேளுமையா தலைகொங்கி வனத்தில் நடந்த நடையைப்போலவே யிந்தவனத்திலுமேதோ புதுமைகள் நடக்கின்றாற்போலக் காண்கின்றது. நல்லது நீவிர் வாருமையாவென்று பண்டாரத்தின் கரத்தைப் பிடித்தழைத்துக்கொண்டு முதலில் கனியறுந்த மாமரத்தடியினில் வந்து ஐயா பெரியவரே இங்ஙனந்தான் பள்ளிகொள்ளுமையாவென்றுரைத்துவிட்டுத் தானும் மண்மீதிலமர்ந்து பெரியவருடனே அருகினில் பள்ளிகொண்டு துயில்வாராமல் கண்

களைமூடிக்கொண்டு இருவர்களும் படுத்துக்கொண்டிருக்கும்போது பதினைந்து நாழிகையளவில் அந்த மாமரத்தின்மீது மென்மேலும் அஞ்சுதலை சொல்லும்படியான ஒரு ஓசையொன்று பிறந்தது. அந்த வோசையை யிருவர்களுங்கேட்டு மெய்கலங்கி திடுக்கென்று விழித்தெழுந்து விருட்சத்தின்மீதும் வனத்திலுமுற்று நோக்கிப் பார்த்து ஐயா பெரியவரே தலைதொங்கி வனத்தில் நடந்த காரியந்தான் இந்த வனத்திலும் நடக்கின்றதைப்போலக் காண்கின்றது. நல்லது சகலத்திற்கும் ஜெகதீசனிருக்கின்றார், நமக்கொன்றுங் குறைவில்லை நீவிர் வாரும் அந்தப் பலாமரத்தடியிலேயே போய்ப் படுத்துக்கொள்ளுவோ மென்று பெரியவரை யழைத்துக்கொண்டு போய் முன்னம் படுத்திருந்த பலாமரத்தடியிலேயே இருவர்களும் படுத்து துயிலில்லாமல் கண்களைமூடிக்கொண் டிருக்கும்போது முதலில் கிளம்பிய கூச்சலைப்போலவே பயங்கரமாகிய வோசையானது பிறந்தது. அந்த வோசையைக்கேட்டு இருவர்களும் திடுக்கென்று கண்விழித்துப் பார்க்கும்போது அங்ஙனம் எண்பத்தினன்கு லட்ச சீவராசிகளில் ஒன்றேனுங் காணப்படவில்லை.

இங்ஙன மொருவரையுங் காணப்படவில்லையே இந்தவோசை பிறந்த காரணந்தெரியவில்லையேயென்று தென்கீழ் வடமேற்றிசை நோக்கிப் பார்க்கும்போது சுக்கிரமூர்த்தியானவ ருதயமாகிவிட்டார் சுக்கிரன் பிறந்துவிட்டதைச் சக்ரவர்த்தியானவர் கண்டு பண்டாரத்தை நோக்கி ஐயா குருநாதரே வெள்ளிமுளைந்து விட்டது. இனிமேற் றுயில்செய்வதற்கு உதவாது ஆகையினாலே அதோ அண்டையிலிருக்கின்ற சோலைசாலைகளுக்குச் சென்று மலசலாதிகளைக் கழித்துவிட்டு தந்த சுத்தி முதலாகிய தெல்லாம் செய்துக்கொண்டு அங்ஙனமாகிலு முண்பதற்கு ஏதாவது காய்கனி கிழங்குகள் கிடைக்குமோ அல்லது இந்த வனத்தைப் போலவே யிருக்கின்றதோ அதையுஞ் சோதித்துக்கொண்டு வருகலாம் வாரும் சுவாமியென்று பெரியோரை யழைத்துக்கொண்டு அருகிலிருக்கின்ற சோலைக்குள்ளாகச் சென்று மலசலாதிகளை விலக்கி தந்தசுத்தி முதலிய நியம நிட்டைகளை யெல்லாங் குறைவின்றி நிறைவேற்றி வழிபடுங்கடவுளினடியை வணங்கித் தொழுதெழுந்துலாவிக்கொண்டு வருகும்போது பொழுது விடிந்து கிழக்கே கடலில் ஆயிரங் கிரணங்கள் புடைசூழும்படியாக அருணபகவான் அவதரித்தார்.

கதிரவனுதயமானவுடனே சக்ரவர்த்தியானவர் விருட்சங்களை அண்ணாந்து பார்த்து காய்கனிகள் தொங்குகின்றதைக் கண்டு களி

ப்படைந்து ஒர் மரத்திலேறி கனிகளைப் பிடுங்கிப்பார்த்து மெய்
யில்லையாக விருக்கின்றதென்று திடங்கொண்டு தனக்குவேண்டி
யவை மறுத்து இடைமடியிற் கட்டிக்கொண்டு விருட்சத்தைவிட்
டுத் தாழ இறங்கி அங்ஙனமே பெரியவரை பார்த்திட்த தானுமமர்
ந்து மடியிலிருக்கின்ற கனிகளையெடுத்து ஆண்டியாருக்கு கொடுத்
துண்ணச்செய்து தானுந்தனக்கு வேண்டுமளவும் புசித்து மிகுந்த
கனிகளையெல்லாம் பதமாக வைத்துக்கொண்டு இன்னும் பற்பல
கனிகளைக் கொய்து வைத்துக்கொண்டு பகல் முழுவதும் மனம்
போன போக்காக வனம் வனாந்திரங்களெல்லாந் திரிந்து பொழுது
மறைய இரண்டரை நாழிகை யிருக்குமுன்னதாகவே நவரத்தின
வனத்திற்கு வந்து நேற்றையதினம் முதல் படுத்திருந்த விடத்திற்
குவந்து அந்தப் பலாவிருட்சத் தடியினிலிருவர்களுமமர்ந்து காலை
யில்கொய்து வைத்திருந்த கனிகளையெடுத்து இருவர்களும் புசித்
து இளைப்பாறி அந்த விருட்சத்தடியினில் தானே படுத்துக்கொண்
டு நித்திரையில்லாமல் கண்களை மூடிக்கொண்டிருக்கும்போது இரவு
பத்து நாழிகைக்குப் பிறகு நேற்று கிளம்பியவாறாகவே ஓசைக்கிள
ம்பினது அந்த வோசையைக்கேட்ட அரசனும் பெரியோரும் மெய்
கலங்கி கிடுகிடென்று நடுநடுங்கி திடுக்கென்று விழிகளைத் திறந்த
வுடனே அங்ஙனம் ஒன்றுங் காணாமையினாலே எழுந்து விருட்சத்
தின் மீதிலும் பூமியிலுஞ் சுற்றிச் சுற்றிப்பார்த்து எந்த வுருவுமில்
லையென்று தெரிந்துக்கொண்டு பின்னும் மன்னவனுங்கிழவனும் அந்
தவிருட்சத்தடியில் தானேவந்து இருவர்களும் பள்ளிகொண்டு துயி
லில்லாமல் கண்களை மூடிக்கொண்டிருக்கும்போது முன்னம்கேட்ட
வோசையானது புறத்துறப்பிற் கேட்டவோசையைப் போலத்தோ
ன்றியது. இப்போது கேட்ட வோசையானது அகத்துறப்பாகவும்
செவியினிடங்கேட்ட வோசையைப்போலவும் காண்கின்றதென்று
இளவேந்தனும் பண்டாரமும் எழுந்திருந்து அடியும் நடுவும் முடி
வும் அஷ்டமூலைகளையு முற்றுநோக்கி யொருவருமில்லையென்று
மதித்துக்கொண்டு பின்னும் அந்த விருட்சத்தடியிலேயே தான்
வந்து இருவர்களும் பள்ளிகொண்டு கண்களை மூடிபடுத்துக்கொண்
டிருக்கும்போது இவர்களிருவருக்கு நடுவில் மார்பினிடமாக அடி
த்து முன்னம் கிளம்பிய வோசையானதுண்டாயிற்று. அந்த வோ
சையைக்கேட்டு இருவர்களும் ஆவென்றலறிக் கூக்குரலிட்டு (கழு
த்தையறுத்த ஆடுபோல) துடித்தெழுந்து ஓவென்றலறி (அடி

யற்றமரம்போல) திடீரென்று படியின்மீது விழுந்து மரணமூர்ச்சையாகி சற்றுநேரந்தெளிந்து களையும், பயமும் விலகி கண்விழித்து ஒருவர்க்கொருவர் கரத்தைப் பிடித்துக்கொண்டு ஐயா பெரியவரே அஞ்சவேண்டாம் அஞ்சவேண்டாமென்று ஆண்டியின் கழுத்தில் சக்ரவர்த்தியானவர் வலது கரத்தைப்போட்டுப் பிடித்துக் கொண்டு சிலதுநேர மங்ஙனமே நின்றிருக்கையில் மேற்குத்திசையில் சுக்கிரனுதயமானதை யிருவரும் பார்த்து சுவாமி பெரியோரே! பொழுது விடியுந் தருணமாகிவிட்டது நித்தியக்கடனை முடித்து வருவோம் வாரும் சுவாமியென்று பண்டாரத்தை யழைத்துக்கொண்டு நேற்றைய காலையிற் சென்ற சோலைவனத்திற்குச் சென்றார்கள்.

(கேளுங்களையா கதாநேயச் சிரோன்மணிகளே) இந்த இரண்டு பிரிவாக பலாவிருட்சத்திலும் மாமரத்திலும் பிறந்த வோசையானது என்னவோசையோ வென்று சந்தேகங்கொண் டிருக்கின்றீரோ. இன்னும் அரசன் செவியிலும் மார்பினிடத்திலும் பிறந்த வோசையானது அதுவென்ன வோசையோ? இந்த வோசையின் மொழிகளெல்லாம், இந்தக் கதையில் இன்னும் பின்னால் விரிவாக விளக்கிக் காட்டியிருக்கின்றேன். இன்னோர பரியந்தம் இதனது கருத்து விளங்காமல் மறைபட்டிருந்ததைப்பற்றி, ஆன்றோன்பனுகிய சுந்தர முதலியாரின் குமாரர் சு-துரைசாமி முதலியாரின் விதேயனுகிய கதாரத்னாகரங் காமனெரிந்தக்கட்சி உபாத்தியாயர் சி. நா. குப்புசாமி முதலியாரென்னும் உமது நண்பன் எச்சரிப்பு செய்தேனென் றறிவீராக.

அறத்தாள மகாராஜனும் ஆண்டிப்பெரியோரும் காலைக்கடனை விலக்கி புனலிலிறங்கி ஸ்நானபானஞ் செய்து கரையேறி நியமநிஷ்டை பூசாதிகளை யெல்லாம் முடித்துக்கொண்டு, வேந்தனானவர் கனிவிருட்சத்தின் மீதிலேறி தனக்குவேண்டி யளவும் வகைக்கு வகையாகியக் கனிகளையெல்லாங் கொய்துக்கொண்டு இரண்டு மூன்று வேளைக்குப் போதுமானதாகப் பறித்துக்கொண்டு நவரத்தின வனத்திற்கு வந்து அறுத்துக்கொண்டு வந்த கனிகளிற் சிலவற்றை யிருவர்களு முண்டு. மிகுந்தவற்றையெல்லா மூட்டையிலும் வைத்துக் கட்டிவிட்டு பெரியவரை யழைத்துக்கொண்டு அந்த வனத்தின் விநோதங்களைப் பார்த்துச் சுற்றிக்கொண்டு பகல் முழுவதுங் கழிந்து பொழுது மறைய இரண்டரை நாழிகைக்கு இருவர்களும் பலாமரத்

தடியினில் வந்து மூட்டையைப் பார்க்கும்போது அந்த மூட்டைக் கருகாமையில், தங்கத்தாம்பாளத்தி லுறுகலைபோலிக் கூடிய அசனமிருக்கவும் அதன்மீது இரண்டு தலைவாழை யிலைகளிருக்கவும், அதனருகில் பொன் செம்பினில் காரவின் அமுதமும் மற்றுமிருக்கப்பட்ட வெள்ளிப்பாத்திரங்களில் உணவிற்குதக்க பதார்த்தங்களும் புனலும் இதிய பேழையினில் தாம்பூலமு மிருக்கக்கண்டு, வேந்தர் பெருமானவர் வியப்படைந்து பண்டாரத்தை நோக்கி நேரும்சுவாமி முதியவரே இந்த உணவு பதார்த்தங்களையிந்த வனம் யாவர் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போனார்களோ தெரியவில்லை. இப்பேர்ப்பட்ட நின்ற காட்டிற்குள்ளாக எந்த மனிதர்கள் சஞ்சாரஞ் செய்கின்றார்களோ? இவைகளை யிங்ஙனம் கொண்டுவைத்தவர்கள் யாருக்காகக் கொண்டுவந்து வைத்தார்களோ நல்லது ஐயா பெரியோரே தாங்கள் இவ்விடத்தில் தானே அமர்ந்து இதுகளையெல்லாம்பதனமாகப்பார்த்துக்கொண்டிரும் யான்இந்தக்காட்டிற்குள்ளாக இன்னமொருதரம் புகுந்து யாராவது மனிதர்களிருக்கின்றார்களா இல்லையாவென்று ஆராய்ந்தறிந்து வருகின்றேனென்றுரைத்துவிட்டு வேந்தனவர் வனத்திற்குள்ளாகப்புகுந்து நான்கு மூலைகளையுஞ் சுற்றிப்பார்த்து மனிதர்களொருவரு மில்லையென்று மதித்துக்கொண்டு, பலா விருட்சத்தண்டையில் வந்து ஐயா பெரியோரே! இந்த வறுமையிலும் யாரொருவருமில்லையே. இதுவென்னமோ சொல்லவொண்ணாத அதிசயாநந்த அற்புத விந்தையாகத்தோன்றுகின்றது. இந்த வுணவானதை யாருக்காக யாவர் கொண்டுவந்து வைத்தார்களோ? இந்த வுணவைப்பார்த்தால் குறைந்தவரைக்கும் ஐந்து மனிதர்களுண்ணலாம்போலக் காண்கின்றது. ஐயா பெரியோரே இன்னுஞ்சிலநேரம் பார்த்துவிட்டு அதன் பின்பு அந்த வுணவை நாமிருவரும் உண்ணுமளவு முண்டிட்டு மிகுந்தவற்றை வைத்துவிடுவோம். ஆகிலும் இந்த அசனத்தை யுண்பதற்குச் சந்தேகமொன்றுண்டா யிருக்கின்றது. அவை யென்ன சந்தேகமென்றால். இந்த அசனத்திலும் பதார்த்தங்களிலும் நஞ்சு கலந்திருந்தாலென்ன செய்கிறது. நல்லது அவ்விதம் இந்தப் பண்டங்களிலேதாவது சூது செய்திருக்குமானால் பரமேசுரன் றுணையிருப்பார் நீரஞ்சவேண்டாம். இந்த அமுதை முதலில் அடியேன் அருந்தி சோதனைசெய்தானதின் பின்பு தாங்கள் உண்ணும் சுவாமியென்று வார்த்தைபாடிக் கொண்டிருக்கும்போது அருணமூர்த்தியானவர் மேற்குக்கடலில் பள்ளிகொண்டார்.

சூரியன் மறைந்து ஐந்து நாழிகைபரியந்தம் அரசனானவர் உணவு வைத்துவிட்டுப் போனவர்களை யெதிர்நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்து ஏழரை நாழிகையாகினவுடனே, சக்ரேஸ்வரனானவர் இரண்டு இலையுமெடுத்து பண்டாரத்திற்கு ஒரிலையைப் போட்டு தானுமொன்று போட்டுக்கொண்டு, இருக்கின்ற பதார்த்தங்களிலும் அசனத்திலும், இருவருக்கும் வேண்டுமளவு எடுத்துபசரித்துக் கொண்டு சக்ரவர்த்தியானவர் சகலவித பதார்த்தங்களிலும் அசனத்திலும் கிஞ்சித்துக் கிஞ்சித்தெடுத் துண்டுபார்த்து, யாதொரு சூதுமில்லை யென்றுணர்ந்து ஐயா பெரியவரே உண்ணுமையாவென்று அரசனுரைத்த வுடனே பெரியவருண்ணவும், மன்னவனும் உண்டெழுந்து இருவர்களும் வாய்முதற் காற்கரங்களெல்லாஞ் சுத்தஞ் செய்துக்கொண்டு, அருகிலிருந்த தம்பலப் பேழையைத் திறந்துப் பார்த்து, அது இருவர்களுக்கும் சம்மதமில்லாமையினாலே அதனை யங்ஙனமே வைத்து அந்தத் தாம்பாளத்திலும் பாத்திரங்களிலும் இருக்கின்ற வுணவுகளை யெல்லாம் அந்தப்படியே அவ்விடத்தில் தானே வைத்துவிட்டு அதற்கப்புறம் பத்துமுழத் தூலவில் இருவர்களுஞ்சென்று பள்ளிகொண்டு அன்றைக்கும் நித்திரையில்லாமல் விழிகளை மூடிக்கொண் டிருக்கும்போது, இரவு பத்து நாழிகை வேளையினில் இரண்டுநாளாகப் பிறந்த வோசையானது இருவரின் தலைப்புறத்தில் கிளம்பினது, அந்த வோசையைக்கேட்டு கண்விழித்து இருவர்களுமெழுந்து பலாமரத்தை நோக்கிப் பார்க்கும்போது ஐயா சதாசார நேயர்களே இந்தப் பலாமரத்தில் விளங்குகின்ற கண்காட்சியின் சிந்தையைக் கூறுகின்றேன் சற்று ஊக்கமாகக் கேட்டருளவேண்டும்.

இந்தப் பலாமரத்தில் பகற்காலங்களில் நவரத்னக் கற்களால் பலாக்காய்களும், இலைகளோ தங்கத் தகடாக இருக்கின்ற விருட்சமானது இலையுங்காய்கனிபூக்களு மில்லாமல் காய்ந்துலர்ந்த விருட்சத்தைப்போல கிளையுங் கொம்புமாக இருக்கவும், இந்த விருட்சத்தில் நான்கு மூலைகளிலிருக்கின்ற கிளைகள் நான்கு பருவப்பெண்மணிகளைக் கட்டித்தொங்கவிட்டிருக்கின்றது. அந்த விருட்சத்தின் இடையில் அரம்பா மாதர்கட்கும் மேன்மைவடிவுடைய பெண்மணியொருத்தியைக் கட்டித் தொங்கவிட்டிருக்கின்றது. அதிலும் இந்த ஐந்துமாதர்களையும் எந்தவிதமாகத் தொங்கவிட்டிருக்கின்றதென்றால் (கூறுவேன் கேளும்) இந்த மங்கையர்களைவர்களும் நவரத்தினமிழைத்த பணிகளை சிரசிலும் செவியிலும் நாசியிலும் கழுத்தி

லும் கரங்களிலும் பாதங்களிலும் விலைமதிக்கவொண்ணாத ஆபரணங்களைப் பூண்டு, இடையில் ஆடையில்லாமல் உந்திமுதற்கொண்டு முழங்கால் வரையிலும் வரகு வைக்கோலைத் திரித்துப் பிரியினையாகச் சுற்றி விட்டு இரண்டு கரத்திலும் விலங்குபூட்டி இரண்டு கால்களையும் தூக்கி மரத்தின் கிளையில் இறுகக்கட்டிவிட்டிருக்கின்றது. ஐந்து பெண்களின் இடையில் ஒவ்வோர் பெண்ணினிடத்திலும் ஐந்துதலை நாகங்கள் நின்றுக்கொண்டு அதன் வாயிலிருக்கின்ற மாணிக்கக்கல்லின் வெளிச்சத்தைக் காட்டிக்கொண் டிருக்கின்ற பஞ்சமாதர்களும் தலைகீழாகத் தொங்கிக்கொண் டிருக்கின்றதை ஞானபுரிச் சக்ரவர்த்தியும் ஆண்டிப்பெரியோருங் கண்களால் ஐயையோ இதென்ன பாதகமாகவிருக்கின்றதே. ஐயோ பாவம் இந்த மாதுசிரோன்மணிகள் யாரோ தெரியவில்லை. இவர்கள் கால்களைப் பார்க்கிலும் இடை நடுவில் தொங்குகின்ற மாதரசியானவள் தேவ தாரம்பைகளில் ஒருத்தியாக இருப்பாளோ ஆ ஹா பாழும் பிரம தேவனிப்பேர்ப்பட்ட நின்ற வடிவுடைய பாவையைப் படைத்துத்தலை கீழாகக் கட்டித் தொங்கவிட்டிருக்கின்றானே. ஐயோ பாவம் இந்தப் பெண்மணிகளவர்களுக்கும் இதுகாறும் திருமணமாகவில்லைபோலக் காண்கின்றதென்று வேந்தனும் கதிரைவேற் பண்டாரப் பெரியோரும் பார்த்து பரிதாபப்பட்டு, இவர்களிருவர்களும் ஒருவர்க்கொருவர் இரக்கமொழிகளாக வார்த்தையாடிக் கொண்டிருக்கும் போது அந்தப் பெண்மணிகளவர்களும் திடீரென்று மறைந்து போய்விட்டார்கள். மன்னனும் பண்டாரமும் கீழ்நோக்கிப் பார்த்து மேல்பார்ப்பதற்குள்ளாக அரிவைமார்கள் மறைந்துப்போய் விட்டதை இருவருங்கண்டு வியப்படைந்து பெரியவரை நோக்கி அரசன் பேசத்தொடங்கினன்.

கேளும் சுவாமி தேவரீர் தலைதொங்கினவனத்தில் நடந்தகாரியத்தைப் போலவேதான் இவ்வனமுங் காண்கிறது. ஆனாலும் அவ்வனந் தொங்கிக்கொண்டிருந்தவர்கள் இந்திரலோகப் பெண்களும் தேவேந்திரன் பத்தினியுமல்லவா! இங்கு இந்த விருட்சத்தில் உருவோடு தலைகீழாகத் தொங்குகின்ற பஞ்சபாவையர்களும் யாவர்களாக இருப்பார்களோ தெரியவில்லையே நல்லது இன்னும் பதினைக் குநாழிகைகூட ஆகவில்லை. ஆனதினாலே சிலநேரந் துயில்செய்தெழுந்திருப்போம் வாரும். சுவாமி! தாம்பாளத்திலிருந்த வுணவுகளெல்லாமிருக்கின்றனவா பார்க்கலாமென்றுரைத்து, அரசனவர் சென்று பார்க்கும்போது, இவர்கள்வைத்த கனிமூட்டை மாத்திரம்

அங்ஙனமிருக்கின்றதே யொழிய, முன்னம் அமுதிருந்த பாண்டங்களும் பதார்த்தங்களும் யாதொன்றுமில்லாததைக் கண்டு, ஐயா பெரியோரே! இந்த அதிசயத்தைப் பார்த்தீரா? உணவுகளிருந்த பாண்டங்களில் ஒன்றேனும் இல்லையேயில்லை. அந்த உணவானது நமக்காகத்தான் யாரோ இரகசியமாகக் கொண்டு வைத்துவிட்டு நாமிருவரும் உணவருந்தியதின் பின்பு அவைகளையெல்லா மெடுத்துக் கொண்டுபோய் விட்டார்கள். நல்லது நாளைய இரவிற்கு இந்த அதிசயத்தைச் சோதித்தறியவேண்டியது வாரும் சுவாமி பள்ளிகொள்ளலாமென் றுரைத்து, அரசனும் பெரியோரும் முன்னம் படுத்திருந்த விடத்திற்கு வந்து பழையபடியே படுத்துக் கண்ணுறக்கங் கொண்டு இருவர்களுந் துயில்செய்துகொண் டிருந்தார்கள்.

கேளீர் அன்பர்களே பொழுதுவிடிந் திருவர்களு மெழுந்து சோலைவனத்திற்குச் சென்று காலைக்கடன முதலியதெல்லா முடித்துக்கொண்டு, இருவருந் தம் வேண்டியளவு காய்கனிகளை கொய்துக் கொண்டு நவரத்தினவனத்தின் பலா விருட்சத்தினடியில் வந்து பார்க்கும்போது, நேற்றைய மாலையில் இருந்ததைப்போலவே தங்கத் தாம்பாளத்திலும் வெள்ளிச் செம்புகளிலும் சகலவித பதார்த்தங்களோடு அசனமிருக்கண்டு ஆச்சர்யங்கொண்டு, அரசனானவன் இரண்டு இலைகளையும் எடுத்து பெரியோர்க் கொன்றும் தாமொன்றுமாகப் போட்டுக்கொண்டு, உணவுகளையெல்லா மெடுத்து உண்ணுமளவாகப் படைத்துக் கொண்டு இருவரு முண்டெழுந்து, இருந்தவற்றை அங்ஙனமே வைத்துவிட்டு காற்கரங்களை யலம்பிக்கொண்டு ஜீவ சஞ்சாரமில்லாத அந்தநவரத்தினவனத்தில் அன்றுபகல்முழுவதும் சுற்றிப்பார்த்து பொழுதுமறைய இரண்டரை நாழிகையிருக்கும் வேளைக்கு பலாமரத்தடியினில் வந்து பார்க்கும்போது, புதுவமுதும் பதார்த்தங்களு மிருக்கக்கண்டு களிப்புகொண்டு அரசனானவர் பண்டாரத்தைநோக்கி ஐயா பெரியோரே, இந்த அமுதானது யாவர் கொண்டுவந்து வைக்கின்றாரோ? தெரியவில்லையே. ஒருவேளை தேவேந்திரன் புதல்வி கொண்டுவந்து வைத்துப் போகின்றாளோ யாதொன்றுந் தெரியவில்லையே. நல்லது இன்னுமிதனை ஆற அமரப்பொறுமையாக இருந்து சோதனை செய்யவேண்டியதாகையினாலே உணவருந்துவோம். வாருமென்று பெரியோரை அமரச்செய்து, இருவர்களுமுண்டெழுந்து பழையபடியாகவே மிருந்தவைகளையெல்லாம் அங்ஙனமே வைத்துவிட்டுத் தாங்கள் பள்ளிகொள்ளும்படியான பழையவிடத்திற்கு வந்து இருவர்களும் படுத்துக் கண்ணுறங்கினார்கள்.

கேளீர் பெரியோர்களே! இந்தப் பண்டாரமும் இளவரசனும் நெடுநாளாக உணவில்லாமலும் இரவு நித்திரை யில்லாமலும் கானலினும் மழையினிலும் கல்லிலும் முள்ளிலும் நடந்து வந்தவர்களாகையினாலே இரண்டு நாளாக தேவதா வுணவு உண்பதினாலே உடல் அயர்ந்து தன்னையும் மறந்து நித்திரை புரிந்து இரவு முப்பதுநாழிகையுங் கழிந்து பொழுதுவிடிந்து அருணனது வெப்பம் பட்டுத் திடுக்கென்று பண்டாரப்பெரியோர் விழித்தெழுந்து பார்க்கும் போது அருகிற் சயனித்திருந்த அரசனைக் காண்கிலோம்.

பக்கத்திற் படுத்துக்கொண்டிருந்த வேந்தனில்லாமையினாலே பண்டாரக் கிழவனானவர் அலறியெழுந்து கூக்குரலிட்டு அப்பா அறத்தாள மகாராஜனேயென்று கூவியழைத்துத் தனது தொண்டையுமுலர்ந்து மன்னனைக் காணாமையினாலே வியாகூலங்கொண்டு ஒஹோ! தலைதொங்கி வனத்தில் நேர்ந்த கதியானது இந்த வனத்திலும் நேரிடும்போலக் காண்கின்றதென்று கதிரைவேற் பண்டாரமானவர் நவரத்தின வனமுழுவதிலுஞ் சுற்றித்தேடலுற்றார்.

ஆண்டிப்பெரியோரானவர் அன்று பகல் முழுமையும் வனமெல்லாந் தேடித்திரிந்து இளவரசனகப்படாமையினாலே தனது சிந்தையிற் பற்பலவாறான வெண்ணமெல்லா மெண்ணிக்கொண்டுமுன்னம் படுத்திருந்த பலாவிருட்சத் தடியினில் வந்து அங்ஙனம் வைத்திருக்கின்ற மூட்டையை யெடுத்து அவிழ்த்து கனிகளெடுத்து தனக்கு வேண்டுமளவும் புசித்து மிகுந்த கனிகளை மூட்டையிற்றானே வைத்துக் கட்டிவிட்டு முன்னம் மன்னனுடன் படுத்திருந்த விடத்திற்கு வந்து மண்மீது அண்ணாந்து படுத்து துயில் வாராமல் கண்களை மூடிக்கொண்டிருந்தார்.

கதிரைவேற் பண்டாரமானவர் தரையிற் படுத்து கண்களை மூடிக்கொண்டு இளவரசனை மனதில் நினைந்து அப்பா சக்ரவர்த்தியே தருமவெற்றிக்கொடிபிடித்து கரத்தைவெட்டிக்கொடுத்த அறத்தாள மகாராஜனே, ஐயையோ, இந்தப் படுபாவிபின்கூடத் தொடர்ந்துவந்து கொடுமையாகிய மிடிகளை யெல்லாம் எனக்காக அனுபவித்ததுமன்றி உனது அன்பத்தாறு தேயத்தையும் வீணிலேயிழந்துவிட்டு பரதேசியைப்போல வேடம்பூண்ட மகானுபாவனே விண்ணுலகரசனாகிய தேவேந்திர மகாராஜனிடத்தில் பெருங்கீர்த்தியும் புகழும்பெற்று வந்த புண்ணியவானே இந்தப் பாழாய்ப்போன கானகத்தில் இந்தக்கிழவனைத் தனிமையாக விட்டுவிட்டெங்ஙன மொளிந்துக்கொண் டிருக்கின்றாயோ ஒ மன்னாதி மன்னனே என்னைத்தனி

மையாக விட்டுவிட்டு மாத்திரைப்போதேனும் பிரிய மாட்டாயே! எந்தப்பாவிகளுன்னை யெடுத்துக்கொண்டு போய்விட்டார்களோ எந்தலோகத்தி லிருக்கின்றனையோ ஐயையோ தெய்வமே சத்தியகுண வுத்தமப் புருடனாகிய அறத்தாள மகாராஜனை யெந்தப் பாவிகளிடத்தில் பிடித்துக்கொடுத்து விட்டாயோ. ஓ பரம்பொருளே உனக்கருளில்லையா யானென்ன செய்குவேன். மண்ணுலகிலும் விண்ணுலகிலும் தருமகேதனம் நாட்டிய ஞானபுரத்தின் அரசனை யெங்ஙனம் கண்டு தேடுவேன் எவ்விடமோடுவேன். ஓ ஜெகதீசா! அந்த இளவரசனானவன் இந்தப் பாவிக்கு ஒரு கரத்தைவெட்டிக் கொடுத்ததுமல்லாமல் எந்தனாலே நாடு நகரங்களை யெல்லாம் விட்டுவிட்டு என் பின்பற்றி வந்தானே அந்த அரசனுக்கு நானே வஞ்சகப் பாவியாகி நின்றேன். ஓ சர்வேசா! காலனையுதைத்து பாலனைக்காத்தக் கடவுளே! காமனையெரித்த கண்ணுதல் மூர்த்தியே! அன்பருக்குதவும் இன்பப்பெருக்கே! ஐயனே! அய்யனே! உளகன்பனாகிய அறத்தாள மகாராஜனை யழைத்துக்கொண்டு வந்து இந்தக் கிழப்பாவியின் கண் முன்னிலையில் விடப்போகாதாவென்று கதிரைவேற் பண்டாரமானவர் பரமனைக்கோரி பற்பலவாறுகத் துக்கங்கொண்டு புலம்பித் தன்னையு மறந்தயர்ந்து துயில் செய்துவிட்டார்.

ஆண்டிப்பெரியோரானவர் நித்திரை புரிந்துக்கொண்டிருக்கும் போது இரவு பதினைந்து நாழிகை வேளையளவினில் அந்தப் பலா விருட்சத்தின் மீதினில் அண்டகோளகை வெடித்தாற்போல படீலென்று ஓரோசையொன் றுண்டாயினது. அந்த வோசையைக் கேட்ட ஆண்டிப் பெரியோரானவர் திடுக்கென்று கண்விழித்துப் பார்க்கும்போது பலாவிருட்சத்தின் மீது கோடிசூரிய ருதயமானாற்போல கோடானுகோடி தீபங்கள் சோதிமயமாக எரிந்துகொண்டிருக்கவும். அந்த விருட்சத்தில் நான்கு மூலைகளிலும் நான்கு பெண்களை தலைக்கீழாகக் கட்டித் தொங்கவிட்டிருக்கவும் இடைநடுவில் வடிவிற் சிறந்த பிடியிடை மாதரசியையும் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட் டிருக்கின்ற பெண்மணியின் மார்போடு மார்பணைந்தாற்போல ஞானபுரத்தரசனாகிய ஐம்பத்தாறு தேயங்கட்கு மதிமதிபதியாகிய அறத்தாள மகாராஜனையும் தலை கீழாக்கி கட்டித் தொங்கவிட்டிருக்கின்றதைப் பண்டாரக் கிழவன்கண்டு ஓவென்றலறிக் கூக்குரலிட்டு இருகரத்தாலுந் தனது வயற்றிலு முகத்திலு மோதி யறைந்துகொண்டு ஐயையோ! மகாராஜனே நீவிர் என்ன குற்றம் செய்தீரென்றும்மை இந்த விருட்சத்தில் தலைகீழாகக் க

டித் தொங்கவிட்டவர்கள் யாரோ? ஓ பரமசிவமே! ஐயையோ இஃதென்ன அநீதமாக விருக்கின்றதே. தன்னுயிரைப்போலவே மன்னுயிர் யாவையும் பாதுகாத்திரவும் பகலும் தருமசிந்தனையோடு வீற்றிருக்கப்பட்ட வேந்தர் வேந்தனை வினைக்காளாக்கி தலைகீழாக விருட்சத்திற் கட்டித்தொங்கவிட்டிருக்கின்றாயே. ஓ ஜெகதீசா இந்தத் தொழிலானது உனக்கு நன்றாக விருக்கின்றதா பரம்பொருளே காரும் காரும் கயிலை வாழ்வே உனதடியேனாகிய இளவரசனை யாதரித்தாட்கொள்ளுங்கருணையங் கடலேயென்று பெரியோரானவர் பரமத்தியானஞ் செய்துக்கொண்டிருக்கும்போது விருட்சத்திற்றொங்கிக்கொண்டிருந்த வுருவுகளெல்லாம் திடீரென்று மறைந்துப்போய் விட்டது.

அரசனும் பஞ்சமாதர்களும் மறைந்துப்போய் விட்டதைப் பெரியோர்கண்டு ஓஹோ! இந்தவிருட்சத்தின் தொழிலானது தலைதொங்கி வனத்தின் தொழிலாகவே யிருக்கின்றதேயன்றி மாறுபாடாகவொன்றுமில்லையென்று நினைந்துக்கொண்டு விழிகளைமூடி நித்திரை புரிந்து பொழுதுவிடிந்தவுடனே யெழுந்து மலசலாதிகளை விலக்கி அருகிலிருக்கின்ற வனங்களிற் சென்று காய்கனி கிழங்குகளைக்கொய்துண்பதும் மாலைப்பொழுதுக்கெல்லாம் இந்தப் பலாமரத்தடியினில் வந்து படுத்துக்கொண்டு தினந்தினமும் தனதரசனை இரவில் தலைகீழாகத் தொங்கப்பார்த்துப் பரிதாபப்பட்டுக்கொண்டு பத்து இரவாகப் பார்வையிட்டுக்கொண்டு வருகும்போது பதினோராநாள் காலையில் நித்திரை விலகி யெழுந்து குந்திக்கொண்டிருக்கும்போது இவர்க்கு நேராக ஒருநாழிகை வழிதூரத்தில் ஒரு பெரியோரானவர் நடந்து வருகின்றதைக்கண்டு அதோ யாரோ ஆள் வரவைப்போலக் காண்கின்றது. அவர்களை விசாரணைசெய்துவிட்டு அதன்பின்பெழுந்துச் செல்லலாமென்று அங்ஙனமே வீற்றிருக்கும்போது துலைவில் வந்தபெரியோரானவர் அருகில் நெருங்கி வருகும்போது ஆண்டிப்பெரியோர் கண்டு ஓஹோ! இவராரோமுனிபுங்கவரைப்போலக் கனிவுடைய பெரியோராக விருக்கின்றாரென்று நினைவுகொண்டு திடீரென்றெழுந் தெதிர்நோக்கி நடந்து சடாமகுடதாரியாகச் சிவச்சின்னங்க ளணிந்துக்கொண்டு வருகின்ற மகானின் பாதாரவிந்தத்தில் பண்டாரப் பெரியோரானவர் வீழ்ந்து தொழுதெழுந்து சுவாமி அடியேனை யாட்கொள்ளும் பொருட்டாக இவ்வனத்திற் கெழுந்தருளியப் பரம்பொருளே! தாங்களின்னார்களென்று திருவாய் மலர்ந்தருளக் கோருகின்றேனையனேயென்று பண்டாரப்

பெரியோர் வினவும்போது சிவச்சின்னங்களைப் பூண்டுக்கொண்டிருக்கின்ற மகானவர் மொழிகின்றார்.

கேளீரையா பண்டாரமே யானிருப்பது தென்பொதிகாசலம் எனது நாமதேயம் சம்புமுனிவனென்று கூறுவார்கள். யான் ஈரேழுபதினான்கு லோகத்தையும் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருகும் பொருட்டாகப் பிரயாணப்பட்டு பாதாளம், மகாதலம், இரசாதலம், தராதலம், சுதலம், விதலம். அதலம் முதலாகிய லோகங்களையெல்லாம் பார்வையிட்டுக்கொண்டு வந்தேன். இனிமீது மேலுலகேழையுஞ்சுற்றிக்கொண்டு வருவதற்காகப்போகின்றேனென்று சம்புமுனிவர் புகன்ற மொழியைக் கதிரைவேற் பண்டாரமானவர் கேட்டுப்பின்னும் அம்முனிபுங்கவர் கழலில் விழுந்து தொழுதெழுந்து, சுவாமி. முனிசிரேஷ்டரே அடியேன் பரதேசியாகையினாலே மண்ணுலகு தேயசஞ்சாரஞ் செய்துக்கொண்டு வருகின்ற நாளில், ஞானபுரமென்னும் பட்டணத்திற்கேகி அந்தப் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாள மகாராஜனாகிய இளவரசனை அறத்தின் மார்க்கத்திற் சோதனைசெய்து, அன்னவனின் இடது காத்தைத் துணித்துக் கொடுக்கும்படியாக வாங்கிக்கொண்டு திரும்பும்போது, அந்த வேந்தனானவன் பாதேசிவேடங்கொண்டு என்னுடன்கூடத் தொடர்ந்துவந்துவிட்டான். நாங்களிருவரும் ஞானபுரத்தை விட்டுப் பிரயாணப்பட்டு அறுபது நாளைக்குக் குறையாமலிருக்கும், ஆகையினாலே அந்தமன்னனானவனென்னைவிட்டுப் பிரிந்து இன்றுடன் ஐந்துநாளாகின்றது. அதைப்பற்றி அடியேனிக்கு தனிமையாகப் பாதவித்துக் கொண்டிருக்கிறேனென்று ஆண்டிப்பெரியோரானவர் அறைந்தவுரையைக்கேட்ட முனீஸ்வரர், பண்டாரத்தை நோக்கி ஐயா பெரியவரே! உன்னுடன்கூடவராத மன்னவனானவன் உன்னைத் தனிமையாக விட்டுவிட்டு எங்ஙனம் சென்று விட்டான் சொல்லுமையாவென்று முனிநாதர் கேட்கும்போது ஆண்டிப்பெரியோரறைகின்றார்,

தேவரீர் முனிநாதரே கேளும். அறத்தாள மகாராஜனானவனென்னைவிட்டு மாத்திரைப் போதேனும் பிரியாதவன். சுவாமி, அன்னவன் இந்த ஐந்துநாளாக இரவில் அதோ இருக்கின்ற பலாவிருட்சத்தின் மீதி லேங்கு மாதர்கள் தலை கீழாகத் தொங்குகின்றார்கள். வேந்தனும் அந்த மாதர்களைப்போலவே தலைகீழாகத்தொங்கிக்கொண்டிருக்கின்றானேயனே. அந்த அரசனை அவ்விதமாகக் கட்டிவைத்தவர்கள் இயாவர்களோ தெரியவில்லையே. அம்மன்னன் தலைகீழாகத்

தொங்கும்போது யானழைத்தால் என்னிடத்தில் மறுமொழியொ
ன்றும் பேசாமல் திடீரென்று மறைந்துப்போய் விடுகின்றார்கள்.
இதுயாது காரணமோ எனக்கொன்றுந் தோன்றவில்லையையனே
யென்று ஆலஸ்டிபோ னோதின செதியைக்கேட்ட ஆன்றோராகிய சம்
புமுனிவர் சாற்றுகின்றனர்.

கேளாயப்பா பண்டாரமே, ஓகோ! அந்தப்பலா விருட்சத்தில்
தலைகீழாகத் தொங்குகிற பெண்மணிகளெல்லாரும் நாகலோகத்து
நங்கைமார்களாகையினாலே, அந்த விருட்சத்தில் இடைநடுவில் தொ
ங்குகின்ற பெண்மணியொருத்தி மாத்திரம் நாகராஜனின் குமாரத்தி
யாகையினாலே அன்னவளின் நாமதேயம் நாககன்னியென்று கூறு
வார்கள். உனது வேந்தனைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டவர்
கள் அந்த நாககன்னிகையே யன்றி வேறொருவருமல்லவேயல்ல.
ஆனதினாலே அந்த அரசனானவன் பழையபடியே யுன்னிடம் வந்து
சேரவேண்டுமானால், யான் கூறும்படியான மார்க்கத்தைப்போல நட
ந்தியங்குவாயானால் பத்து தினத்திற்குள்ளாக வேந்தன் வந்து விடு
வான். ஆனதைப்பற்றி அதோ அந்தப் பலாமரத்திற்கு நேர்மேற்
கில் இருபதுமுழுந் துலைவில் பூமி மட்டமாக விருக்கின்ற வெண்கல
க்கபாடத்தைத் திறந்து, அந்தப் பலாக்கனிகளைக் கொய்து காலை
மாலை யிருவேளைகளிலும் இரண்டு கனிகள் அந்தச் சுரங்கத்தில்
போட்டுக்கொண்டு வருவாயானால், ஒன்பதுநாள் சென்று பத்தா
நாளில் நீயும் நாகலோகத்தைப் பார்வையிட்டு உனதரசனை அங்ஙன
மிருந் தழைத்துக்கொண்டு வரலாகுமையா பண்டாரமே. இந்தக்
காரியத்தைத் நாளையமுதற்கொண்டு மறவாமல் நடாத்திவாருமையா
வென் றுரைத்துவிட்டுச் சம்புமுனிவரானவ ரந்தரத் தியானமாக
மறைந்து விட்டனர்.

முனிமகானானவர் மறைந்து போனதைக் கண்ட பண்டாரமா
னவர் திடுக்கிட்டு மெய்நடுங்கி ஓஹோ! இப்போது வந்த முனிபுங்க
ரானவர், உண்மையில் முனிவரல்ல. அறத்தாளனைக் காக்கும்பொ
ருட்டாக பரமேசுரரே வந்தாரே யன்றி மற்றப்படிக்கு வேறொரு
வருமல்லவென்று திடங்கொண்டு கடவுள் சொன்னமொழியை
நடாத்த வேண்டுமென்று நினைவுகொண்டு அன்றிரவு கழிந்து பொ
ழுதுவிடிந்த வுடனே யெழுந்து நித்தியக்கடனுகளைச் சுருக்கஞ்செ
ய்துக்கொண்டு பலாவிருட்சத்தின் மீதிலூர்ந்து, பெருங்கனியாக ஒரு
கனியை யறுத்தெடுத்துக் கொண்டு சுரங்கப் பலகையினிடத்தில்
வந்து வெண்கலக் கபாடத்தைத் திறந்து கொய்துக்கொண்டு வந்த

பலாக்கனியை குகைக்குள்ளாகப் போட்டு, கபாடத்தைச் சாற்றித் தாள்போட்டுக் கொண்டு, அருகினிற் றோற்றுகின்ற வனங்களிற்சென்று கிழங்கு காய் கனி முதலியவைகளைக் கொய்து உண்டுகொண்டு அன்று பகல்முழுவதுங் கழித்து பொழுது மறையுந் தருணத்தில் நவரத்னக்கல்லாகிய பலாக்கனியை யறுத்துக்குகையிற்போட்டு கதவைச் சாற்றிக் கொண்டுபோய் அன்றிரவுங் கழித்து விடிந்தபின் பின்பு தினந்தோறுங் காலைமாலையிருவேளைகளிலு மிரண்டுபலாக்கனிகள் கொய்து சுரங்கத்தில் போட்டுக்கொண் டிருக்கின்ற நாளில் இந்தக்கனியானது குகையின் மார்க்கமாகச்சென்று நாகராஜன், கொலு முன்னிலையில் வந்து நின்றது. தினந்தோறுங் காலைமாலையில் தனக்கு முன்னிலையில் நவரத்தினப் பலாக்கனி வந்து நிற்கின்றதை நாகராஜன் கண்டு, ஓர் பட்சங்களிப்பு மற்றோர்பட்சம் சினமுங்கொண்டு அங்ஙனம் காவல் காக்கின்ற அரக்கர் தலைவனை யழைத்து அப்பா காவலதிகாரியே! நமது குகையின் மார்க்கமாக இரத்தினப் பலாக்கனிகள் நாளொன்றுக்கு இரண்டு கனிகள் வந்து விழுந்துக்கொண்டிருக்கின்றது. அந்தக் குகையின் கபாடமானது திறந்திருக்கின்றதோ, அல்லது யாராகிலும் மானிடர்கள் திறந்து இந்தக் கனிகளைப் போடுகின்றார்களோ என்னமோ? ஏதோ சூதுமார்க்கமாக விருக்கின்றது. ஆகையினாலே நீ சென்று இதனைச் சோதித்தறிந்துகொண்டு மானிடர்களாகிலு மிருப்பார்களானால் அன்னவர்களை யியாதொரு துன்பமுஞ் செய்யாமற்படிக் கிங்ஙனந் தூக்கிக்கொண்டுவாக் கடவாயென்று ஆக்ஞாபித்த வுடனே, அரக்கர் தலைவன் சென்று குகையின் மேற்புறத்தின் கபாடத்தைப் பார்க்கும்போது, அந்தக் கதவானது திறந்திருப்பதைக் கண்டு ஓகோ மானிடர்கள் யாரோ இந்தக் குகையைப் பார்த்து விட்டார்கள். நல்லது பலாக்கனியைப் போடப்பட்டவர்களை யெவ்விதமாகிலுந் தேடிப்பிடித்துக கொண்டுபோய் நமது நாகராஜனிடத்தி லொப்பிவைக்க வேண்டுமென்றரக்கனானவன் குகையை விட்டு மானிடலோகத்திற்கு வந்து அந்தக் குகைக்கு வடபாரிசத்திலிருக்கின்ற ஆலாவிருட்சத்தின் மீதிலேறிக்கொண் டிருக்கும்போது, காலையிலருணன் பிறந்திரண்டரை நாழிகைக்கு ஆண்டிக்கிழவனானவன் சம்பு முனிவர் மொழிந்த மொழியை மனதிலோர்ந்து பலாமரத்தின் மீதிலேறி ஓர் கனியைக் கொய்தெடுத்துக்கொண்டு சுரங்கத்தண்டையில் வந்து அமர்ந்ததை ஆலா விருட்சத்தின் மீதிலிருக்கின்ற அரக்கனானவன் கண்டு ஓ ஹோ! சுரங்கத்தினிடமாக பலாக்கனிகளைப் பிரதி தினமும்

போடப்பட்டவன் இந்தக் கிழவன்தான் இன்றும் களவில் போடு வதற்காகக் கனியைப் பறித்துக் கொண்டுபோய் வைத்திருக்கின்றானல்லவா. நல்லது இந்தக் கிழவனை விடப்போகாதென்று அரக்கனானவன் விருட்சத்தை விட்டுக் கேசரிமார்க்கமாகக் கிளம்பி குகையண்டையில் வந்து கிழவனை மூர்ச்சையாக்கி கிழவனையும் பலாக் கனியையும் தூக்கிக்கொண்டுபோய் நாகராஜன் கொலுமுன்னிலையில் வைத்துவிட்டு அரக்கனானவன் நாகராஜனை நோக்கி, கேளும் சுவாமி! நாகராஜனே! கனிகளை போடப்பட்ட கள்ளனையும், கனியையும், கையும் பிடியுமாகப் பிடித்துக்கொண்டு வந்தேன். அதோ! பாருஞ்சுவாமி யென்று, அரக்கனறைந்து விட்டுவிலகி நின்றான். கொலுமுன்னிலையில் நிற்கின்ற பண்டாரத்தை நாகராஜனானவன் கண்டு ஏ! ஆண்டிக்கிழவனே, நமது நவரத்தின வனத்திலிருக்கின்ற இரத்தினப் பலாக்கனிகளைக் கொய்து களமார்க்கமாக ஏன் போட்டுக்கொண்டிருந்தாய் சொல்லும் பிள்ளாய்க் கிழவனே. உனதுநாமதேயமென்ன நவரத்தின வனத்திற்கு யாதுகாரியமாக வந்தனை. உனது நாடுநகரங்களின் பேரென்ன? உண்மையாகக்கூறுங் காணுமென்று நாகராஜனானவன் கேட்கும்போது சதிரைவேற் பண்டாரக் கிழவன் பகர்கின்றார்.

கேளீர் சுவாமி! அரவலோகாதிபதியாகிய நாகராஜனே கேட்டருளும், யானொரு பரதேசியாகையினாலே, எனக்கு நாடுநகரமும், வீடுவாசலும், மனைமக்களுங் கிடையாதாகையினாலே, அடியேன் தேயசஞ்சாரஞ் செய்துக்கொண்டு வருகின்ற நாளையில், ஞானபுரமென்னும் பட்டணத்தையாளப்பட்ட அறத்தாள மகாராஜனைச் சோதித்தறியும் பொருட்டாக அந்தப் பட்டணத்திற்கேகி அன்னவனைச் சோதித்தறியும் பொருட்டாக அறத்தின் நிலையிலவனது இடது கரத்தையும் வெட்டிக் கொடுக்கும்படியாகப் பெற்றுக்கொண்டு யான் திரும்பும்போது. அந்தச் சக்ரவர்த்தியானவர் இந்தக் கிழவனை நம்பிக்கொண்டு தனது நாடுநகர முதலாகிய செல்வப்பொருள்களை யெல்லாம் விட்டுவிட்டு என்னுடன் கூடப்பிரயாணப்பட்டு வந்துவிட்டான், அந்த வேந்தனும் யானும் பிரயாணப் பட்டறுபது நாளைக் கதிகமாகின்றதையனே! நாங்களிருவரும் பட்டாம்புரியென்னும் பட்டணத்திற்குப்போகவேண்டுமென்று வந்தோமையா. வழிமார்க்கந் தெரியாமல் திசைதப்பிப் பதினைந்து நாளைக்கு முன்னம் நவரத்தின வனத்திற்கு வந்து அங்ஙனமிருக்கின்ற விருட்சங்களையுங் காய் கனிகளையுங் கண்டு வியப்படைந்து இரண்டு மூன்று

நாள் பரியந்த மிரவும் பகலுமந்த வனத்திற்றானே சஞ்சாரஞ் செய்துக்கொண்டிருக்கும்போது, ஓர் நாளிரவிலெனதருகிற் சயனித்துக்கொண்டிருந்த அறத்தாள மகாராஜன் திடீரென்று காணாமற் போய்விடவும் அடியேனந்த மகாராஜனைக்காணும்பொருட்டாக நவரத்தின வனமுழுவதுந் தேடியலைந்து வாடி வதங்கி நின்று அன்றிரவு பலா விருட்சத்தினடியிற்றானே படுத்துக் கொண்டிருக்கும் போது அண்டகோளகையி னிடியைப்போலப் பெருந்தவோசைபானது கிளம்பவும், அந்த வோசையை யடியேன் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துப்பார்க்கும்போது அந்தப்பலாவிருட்சமானது அளகாபுரிக்குமமராவதிக்கு மேன்மையாகிய பட்டணம்போல விளங்கவும், நான் குழைகளிலும் நான்கு பெண்மணிகளை தலைகீழாகக் கட்டித்தொங்கவிட்டிருக்கவும், இடைநடுவில் வடிவிற்சிறந்த மாதரசியையும் தலைக்கீழாக தொங்கவிட்டிருக்கவும், இந்தப் பெண்மணியினது மார்புடன் மார்பணைந்தாற்போல எனதரசனையுங் கட்டித்தொங்கவிட்டிருந்ததையனே. அதனைக் கண்டேன் மனதானது தீயில்பட்டகிருமியைப்போற் றுடித்துக்கொண் டிருக்கும்போது பொதிகைமலையில் வாழப்பட்ட சம்புமுனிவரானவர் தரிசனந் தந்து, அடியேனையாட்கொண்டு, எனதரசனைச் சந்திக்க வேண்டுமானால் இரத்தினப் பலாக்கனிகளைக்கொய்து சுனையில் போட்டுக்கொண்டிரும் பிள்ளாயென் றந்த மகானானவர் திருவாய் மலர்ந்தருளியதைப் போல, அடியேன் தினமொன்றுக் கிரண்டு கனிகள் கொய்து போட்டுக்கொண்டிருந்தேன். மகாராஜனே யென்று ஆண்டிப்பெரியோரறைந்த வுரையைக் கேட்டநாகராஜனானவன் கூறுகின்றான்.

பண்டார முரைத்த வாக்கியத்தைக் கேட்ட நாகராஜனானவன் அருகிலிருந்த காவலனை யழைத்து அடேயப்பா தலைக்காவலனே நீ சென்றெனது புத்திரியாகிய நாகவேணியையும், அவளது சேடிப் பெண்களையு மிங்ஙன மழைத்துக்கொண்டு வாரும் பிள்ளாயென்று கட்டளையிட் டருளினவுடனே, தலைக்காவலனானவ னோடோடியுஞ் சென்று நாகவேணியைக் கண்டு அம்மா இராஜ புத்திரியே! தங்களையும் தங்களின் பாங்கிப்பெண்கள் நால்வர்களையுந் தங்கள்பிதாவாகிய நாகராஜ னழைத்துக் கொண்டு வருகச்சொன்னார். சுருக்காக வாருங்க ளம்மமார்களே யென்று காவலனழைத்த சேதியைக்கேட்ட மாதர்களைவர்களுந் திடீரென் றெழுந்து இதோ வருகிறோமப்பா காவலனே யென்றுரைத்து, அரண்மனைக் குள்ளாகப்புகுந்து விலைமதிக்கவொண்ணாத ஆடையாபரணங்களை யணிந்துகொண்டு பஞ்ச

மாதர்களும் பணியாளனின் பின்பற்றிக் கொலுமுகத்திற்கு வந்து தந்தையைக்கண்டு நாகவேணியும் சதுர்மாதர்களும் வந்தனம்செய்து நின்றுக்கொண் டிருந்தார்கள்.

ஐந்து மாதர்களும் வந்து நின்றுக்கொண் டிருக்கின்றதைக் கொலுவிலமர்ந்திருக்கின்ற நாகராஜனானவர் கண்டு, பெண்களெல்லோரையும் அருகிலழைத்துத் தனது புதல்வியை நோக்கி கேளாயம்மா நாகவேணியே! நீயுமுனது சேடிமார்களும் முன்னமொரு காலத்தில் மானிட லோகம் பார்க்கவேண்டு மென்று கேட்டீர்களல்லவா அதற்காகத் தானே மானிடலோகத்தி லிருக்கின்ற நவரத்தின வனத்தில் பலா விருட்சத்தில் இரவிலைந்து நாழிகை வரையிலும் தலைகீழாகத் தொங்கும்படிக்குச்சாபமிட்டருளினேனே. இப்போது மானிடன்மீ திச்சைகொண் டிருக்கின்றபடியினாலே ஏ அம்மணி நாகவேணியே இப்போது நீ மறைத்துவைத்துக்கொண் டிருக்கின்ற மானிடனை யிங்ஙன மழைத்துக்கொண்டு வாருந் தாயே யென்று நேரில் பார்த்தறிந்தவரைப்போல ஓதிய சேதியை மாது சிரோன்மணியாகிய நாகவேணி கேட்டு இதோ அழைத்துக்கொண்டு வருகின்றேனென் றுரைத்து, அங்ஙனமிருந்து சரேலென்று நடந்து தனதரண்மனைக் குள்ளாக வொளித்து வைத்திருக்கின்ற அறத்தாள மகாராஜனின் கரத்தைப்பிடித் தழைத்துக்கொண்டு, தந்தையினது கொலுமுன்னிலையில் வந்து நின்றவுடனே, நாகராஜனானவர் மண்ணுலகு மன்னனைக் கண்டு அருகிலழைத்து ஓர் சிற்றாசனத்தி லமரச் செய்து அறத்தாளனை நோக்கி, கேளும் பிள்ளாய் மானிடக்கரசனே! இதோ நிற்கின்ற எனது புத்திரியாகிய நாகவேணிக்கு மானிடர்களின்மீது நினைவிருப்பதினாலே, நீ சத்திய வுத்தம புருடனென்று ஓர்ந்துணர்ந்துன்னைக் களவிலெடுத்துக் கொண்டு வந்துவிட்ட சேதியானதெனக்குத் தெரியவராது. இதோ இந்தப் பலாக்கனிகள் வந்து வீழவும், இதனாலே யிந்தக்கிழவ னிங்குவருகவும் கிழவனார் வாக்கின் மூலியமாக நீ யிருப்பதை யானுணர்ந்து இப்போதுன்னை யழைப்பித்தேன். கேளாயப்பா வேந்தனே! எனது குமாரத்தியை நீயே திருமணஞ் செய்துக்கொண்டு உனது நாட்டுக்கழைத்துக் கொண்டு போம்பிள்ளாயென்று நாகராஜனோதிய சேதியைக் கேட்ட இளவரசனானவர் கூறுகின்றனர்.

கேளுமையா சுவாமி நாகராஜனே! அடியேன் பட்டாம்புரியென்னும் பட்டணத்திற்குப் போகவேண்டி பரதேசிவேடம் பூண்டு அதோ அந்தப் பெரியவரோடு கூட யானும்பிரயாணப்பட்டு

வந்தனன். ஆனபடியினாலே யான் சென்றெனது காரியத்தைச்சித்தி செய்துக்கொண்டு திரும்பும்போது இங்ஙனம் வந்து உமது புதல்வியைத் திருமணஞ் செய்துக்கொள்ளுகின்றேனென்று சிறந்தோனறைந்த வாக்கியத்தைக்கேட்ட நாகராஜனானவர், இளவேந்தனை நோக்கி நேரும்பிள்ளாய் அறத்தாளனே! நீ சென்று திரும்பினாலும் சரி, திரும்பி வாராவிட்டாலும் சரி, எனது புதல்வியை மணமாலை சூட்டாதமுன்பு எந்தப் பெண்ணினிடத்திலேனும் கைபோகஞ் செய்வாயானால் உனது அங்கம் ஆறாயிரவாகப் பிளந்து மரணமாவக்கடவாய். இதுதானுனக்கு யான் கொடுத்த சாபம். அப்பா அறத்தாளனே நீ வந்து எனது குமாரத்தியை மணமாலை சூட்டும் பரியந்தம் அன்னவளுக்கு யானிட்டிருக்கின்ற சாபவிமோசனமாகாது. நீ வந்ததின் பின்புதான் சாபம் விலகும் ஆனதினாலே இன்றைய இராவிற்கு இங்ஙனம் தங்கி அந்தப்பெரியோரும் நீயுமுணவருந்தி நாளையகாலையில் நீ கோரியபடியே போகலாமப்பாவென்றுரைத்து, நாகராஜனானவர் மகளுக்கும் பாங்கிப்பெண்களுக்கும் விடைகொடுத்தனுப்பிவிட்டு கொலுக்கலைந்து அறத்தாளனையும் ஆண்டிப்பெரியோரையுமழைத்துககொண்டு, புனலாடுமனைக்குட் சென்று காற்கரங்கள் திருத்தஞ்செய்துக் கொண்டு மடப்பள்ளி மனைக்குள்ளாகப் புகுந்து மூவர்களும் மூன்றிலையிலமர்ந்து முக்கனிசருக்கரைத்தேன் பாலொடு மறுசுவையோடுங்கூடிய அசனம் புசித்தெழுந்து, மூவரும் தனித்தனியே பஞ்சணையின்மீது பள்ளிகொண்டு துயில்செய்துக் கொண்டிருக்கும்போது, இரவு பதினைந்து நாழிகைக்கு நாகவேணியானவளெழுந்து தங்கத்தாம்பாளமொன்றெடுத்துக்கொண்டு மடப்பள்ளிமனைக்குள்ளாகப் புகுந்து அங்கொருவருமறியாமற்படிக்குப் பண்டுபலாதி பதார்த்தங்களுள்ளதெல்லாந் தனக்குவேண்டுமளவுமெடுத்துத் தாம்பாளத்தில் வைத்துக்கொண்டு, தலைவாழையிலை இரண்டெடுத்துத் தாம்பாளத்தை மூடிக்கொண்டு வெள்ளிப் பாத்திரத்தில் கோவின் பாலெடுத்துக்கொண்டு தாம்பாளத்துடனே அறத்தாள மகாராஜன் நித்திரைபுரிகின்ற அரண்மனைக்குள்ளாகப் புகுந்து வந்து தாம்பாளத்தையும் பாத்திரத்தையுமருகிலிருக்கின்ற பஞ்சணையின்மீது வைத்துவிட்டு கபாடத்தைச் சாற்றித் தாள் போட்டுக்கொண்டு வேந்தனின் மஞ்சத்திற் கருகினில் வந்து நின்று அயர்ந்து துயில்செய்கின்ற அறத்தாள மகாராஜனின் திருமுகத்தைப் பேறவிறங்கச் சற்றுநேரமுற்றுநோக்கிப்பார்த்து ஆஹா! இந்த சுந்தர புருடனின் ரூபலாவண்யத்தைப் பிரமதேவனெவ்வாறுகச்

சிருட்டி செய்தானோ தெரியவில்லையே இந்த மன்னவனின் முகவடி வைக்கண்டாற் றுறவுபூண்ட பெரியோர்களின் றேவிமார்களெல்லாம் வலிதிற் கலந்தலைய என்றுவார்களே யன்றி, இந்தவடிவழகனைக் கண்ட பெண்கள் மார்கள் பின்வாங்கமாட்டார்களே இப்பேர்க்கொத்த திருவுருவுடைய சத்திய மன்னனை நமது தந்தையானவர் நமக்குப்புருடனாக நியமித்துவிட்டாரே. இனிமேது நமக்கென்ன அஞ்சுதலையிருக்கின்றது. இந்த வேந்தனானவர் நமக்கு மாலையிட்டாலும் புருடன் புருடன் தான். மாலையிடா விட்டாலும் மணவாளனே யன்றி வேறல்ல. இவரோ அதிக நித்திரையிலிருக்கின்றார். துயில் செய்பவரை யெழுப்பலாகாதென்று மனுநீதிதேவர் மனுஸ்மிருதியிலுரைத்திருக்கின்றாரே. இதற்கென்ன செய்வதென்று சற்றுநேரம் வரையிலும் நின்று ஆலோசனை செய்துக்கொண்டிருந்து நித்திரை புரிகின்ற அறத்தாள மகாராஜனி னருகிலமர்ந்து, வெண்சாமரை யெடுத்து பன்னீரில் நனைத்து அரசன் றிருமுகத்தில் வாயுவேறும் பொருட்டாக விசிறிக்கொண்டிருந்தாள்.

நாகராஜனின் புதல்வியாகிய நாகவேணியென்பவள் விசிறிக்கொண் டிருக்கும்போது மண்ணுலகேகந்திரனாகிய அறத்தாளச் சக்ரவர்த்தியானவர் விழித்துப் பார்த்து, அருகிலமர்ந்திருக்கின்ற பெண்மணியைக் கண்டு திடுக்கென்றெழுந்து உற்றுநோக்கி நாகராஜனின் புதல்வியென் றறிந்து, ஏ மாதுசிரோன் மணியே! யான் தான் பட்டாம்புரிக்குச் சென்று திரும்பி வருகும்போது இங்ஙனம் வந்து உன்னைத் திருமணம்புரிந் தழைத்துக்கொண்டு போவதற்காக வுனது பிதாவிற்கு வாக்கு கொடுத்திருக்கின்றேனே. அவருமெனக்குச் சாபங் கொடுத்திருக்கின்றாரே. ஆகையினாலே இந்த நடுச்சாமவேளையில் நெஞ்சங் கலங்கும்படியான நேரத்தில் தனிமையாக நீ இங்ஙனம் வந்த காரியத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று சக்ரவர்த்தியானவர் கேட்கும்போது நாகலோகத்தரசன் புதல்வியாகிய நாகவேணி யென்பவள் கூறத்தொடங்கினள்.

ஓ எனதாசைக்குகந்த அமுதப் பெரும்பிழம்பே! மாதர்க்கணிகலப் பொக்கிஷமே! வானவர்கோன் சிந்தாமணியே! கேளும், அடியாள் ஓர் நினைவுகொண்டு தனிமையாக வந்தனன். தாங்கள் கருணைகூர்ந்து எனதெண்ணத்தை நிறைவேற்றவேண்டும் நாதனே. அடியாளின்மனதிலெண்ணத்தை முடிவுசெய்யும் பொருட்டாக அதனை

விடுவிப்பதற்கு விடைகொடுப்பீரானால் அதனைத் தெரிவிக்கின்றேன் பத்தாவே யென்று உத்தமப்பெண்ணாகிய நாகவேணி நவின்ற மொழியைக்கேட்ட இளவேந்த னியம்புகின்றான்.

கேளாய் மாதே நாகவேணியே! நீ இங்ஙனம் கோரிவந்த கோரிக்கையை யபாயமாகவும் வெளிப்படையாகவும் விளம்பும் பெண்ணே யென்று வேந்தர் வேந்தனாகிய அறந்தாள மகாராஜன் கேட்கும்போது, நாகவேணி மன்னனை நோக்கி கேளுமென தன்பிற்குகந்தவின்பத் திறையே! மன்னாதிமன்னர்களின் துரையே! அடியாளும்மைக் கண்ட நாள் முதற்கொண்டு சித்தசன் கணையினாலே சித்தமது வதங்கி மெத்தவும் பித்தமையால் உச்சிக்கேறி உம்முடன் கூடிக்கலந்து களி காமலீலை புரிந்தெழுந்திருக்கும் பொருட்டாக ஒருவருமறியாம லோடி வந்தேன் சுவாமி. அதிலும் எனது தந்தையானவர் நீதானெனக்கு மணவாளனென்று முறைத்திருக்கின்றமையினாலே மணமென்பது பிரமமணம், பிரசாபத்தியமணம், ஆரிடமணம், தெய்வமணம், காந்திருவமணம், அசுரமணம், இராக்கதமணம், பைசாசமணமென்றுசொல்லப்பட்ட அஷ்டமணங்களில் நாமிருவரும் இப்போது காந்தருவமணம் புரிந்துகொண்டு, அதன் பின்பு, தெய்வமணஞ் செய்துகொள்ளலாம் எழுந்திரும் சுவாமி யென்று நாகவேணியானவள் மன்னன் கரத்தைப் பிடித்தெழுப்பும்போது பெண்மணியை நோக்கி வேந்தனானவர் பேசத்தொடங்கினார்.

ஏ நாகவேணியே கேளும் பெண்ணே! யானெண்ணி வந்தகாரியமானது இரண்டிலொன்று விளங்காமற்படிக் கெந்தப் பெண்ணினிடத்திலும் கலவித்தொழில் புரிவதில்லை. ஆகையினாலே நான்சென்று வந்ததின் பின்புனது மனதினெண்ணத்தை நிறைவேற்றுகின்றேன். எனக்குத் துயில்மீறி வருகின்றது நீ விடைகொள்ளும் பெண்ணே யென்று வேந்தர்கோமான் விளம்பிய மொழியைக்கேட்ட நாகவேணி யென்பவள், புருடனின் கரத்தைப்பிடித்துக்கொண்டு தான் கொண்டுவந்த பண்டு பலாதிகளிருக்கின்ற தாம்பாளத்தை யெடுத்து, இருவருக்கு மிடையில் வைத்து ஓ! எனதாசைக் குகந்த அரசே! இப்போது என்னுடன் கூடிக் காந்தருவ விவாகஞ் செய்துகொள்ளுமென்று [illegible] ன்றீரல்லவா நல்லது உமது வாக்கியத்தைப் [illegible] அங்ஙனமேசென்று வந்து [illegible] திருமணஞ் செய்துகொள்ளும் நாதனே. இப்போது இந்தா இந்தப் பண்டு பலாதிகளையுண்டு களிகொண்டு,

இன்றிரவு கழித்துப் பொழுது விடிந்தவுடனே போய்வாரும்சுவாமி யென்று நாகவேணியானவளுரைத்துக்கொண்டுதாம்பாளத்திலிருக் கின்ற பண்டு பலாதிகளை யெடுத்து அரசனது வாக்கில் வைத்துண் ணச்செய்து, தானுமிரண்டோர் கவளங்களை மன்னவன் முன்னிலையிலுண் டெழுந்து, பால் பாத்திரத்தை யெடுத்து வேந்தன் கரத்திற்கொடு த்து அருந்தினதின் பின்பு தாம்பாளத்தையும், பாத்திரத்தையுங் கரத்திலெடுத்துக்கொண்டு அரசனை நோக்கிப் பெண்ணரசியான வள் பேசத்தொடங்கினாள்.

கேளும் சுவாமி பிராணநாயகரே! இதற்கு முன்னம் மாளிட லோகத்தில் நவரத்தின வனத்தில் பலாவிருட்சத்தடியினில் உண் பண்டம் முதலாகிய பண்டு பலாதிகளும் அறுசுவையோடுங் கூடிய அசனமும் ஆங்கிருந்ததல்லவா. அதனைத் தாங்களும் தங்களுடன் வந்த பெரியோரு முண்ணவில்லையா? நீவிர் அன்னக்கிளியாக விருக் கின்றீரென்றுணர்ந்து அந்த வுணவுகளை அடியாள்தா னுமக்காக ஆங்கு கொண்டுவந்து வைத்தனன் நாதனே! நீவிர் பள்ளிகொள் ளும் சற்றுநேரந் துயின்றெழுந்து பொழுது விடிந்தவுடனே பிர யாணப்பட்டுப்போய் அதிக சுருக்காக வந்துவிடுந் துரையே! யான் போய் வருகின்றேனென் றுரைத்துவிட்டுப் பள்ளிமனையைக் கடந் து நாகவேணியானவள் தனது மனைக்குச் சென்று பஞ்சணையின் மீது வஞ்சிநல்லாள் படுத்து மணவாளனை மனதிலெண்ணிக்கொண்டு கண்களை மூடியயர்ந்து நித்திரை போய்விட்டாள்

(கேளீர் கதாநேய நண்பர்களே) இளவரசனானவன் கிழவனை விட்டுப்பிரிந்த தினமுதற்கொண்டு இதுநாள் பரியந்தம் எங்ஙனமி ருந்தானோவென்கின்ற சந்தேகமொன் றிருக்கின்றதல்லவா? அச்சந் தேகந் தெளிவாகும் பொருட்டாக மன்னனிருந்த நிலைமையைக் கூறுகின்றேன் கேளுமெனதன்பர்க் குழாங்களே! ஆண்டிக்கிழவனு டன் கூடப்படுத்திருந்த அறத்தாள மகாராஜனை நித்திரையில் மூர்ச் சையாக்கி, நாகவேணியானவள் தூக்கிக்கொண்டுபோய் தனதரண் மனையில் ஒருவருமறியாமற் பகல் முழுமையு மொளித்து வைத் துக்கொண்டிருந்து, இராவில் பதுநாழிகைக்கெல்லாம் பலாவிருட் சத்தில் தலைமூலாகத்தூக்கிக் கொண்டிருப்பதாகவும், பகலில் மனை யிலிருப்பதாகவும் நடத்திக்கொண்டு வருநாட்போது, தெய்வானு கூலத்தினாலே கிழவனும் வேந்தனும் நாகராஜனிடத்தில் அருள் பெற்றுக்கொண்டு நித்திரை புரிந்து அருணன் பிறந்து பொழுது

விடிந்தவுடனே பொழுந்து, நாகராஜனைக் கண்டிருவரும் வணங்கி வந்தனஞ் செய்துகொண்டு நின்றிருக்கும்போது, நாகராஜனென வர், அருகிலிருந்த அரக்கர்த் தலைவனை யழைத்து அடேயப்பா காவலதிகாரியே, இருவரையுந் தூக்கிக்கொண்டுபோய் மானிடலோகத்திலிருக்கப்பட்ட நவரத்தின வனத்தில் விட்டுவிட்டு வாரும் பின்னா லென்றுச்சரித்தவுடனே அரக்கர் தலைவனானவன், அறத்தாளனை யுமாண்டிக்கிழவனையுந் தூக்கிக்கொண்டுவந்து குகைக்கு வெளியில் பனைவிருட்சத்தினடியி லிறக்கிவிட்டு காவலனானவன் சென்றுவிட்ட தின் பின்பு இளவேந்தனானவர் ஆண்டியை நோக்கிப்பார்த்து, ஐயா, பெரியவரே! நாம் பிரயாணப் பட்டிதுகாலமாகப் படாதபாடுகளை யெல்லாம் பட்டு வந்தோமாகையினாலே இனிமீது பட்டாம்புரிக்குச் செல்லும்படியான மார்க்கத்தைப் பாரும் சுவாமி யென்று வேந்தனானவர் பகர்ந்தருளினர்.

இளமன்னனியம்பியமொழியைக் கதிரைவேற் பண்டாரமானவர் கேட்டு நலலதப்பா வேந்தனே! இனிமேதெங்கனமேனுந் தங்காமலும் காலதாமதஞ் செய்யாமலு மிரவும் பகலுமாக நடப்போமானால், இன்னும் எட்டுநாளைக்குள்ளாக பட்டாம்புரிக்குப் போய்ச் சேரலாகுமாதலால், நீமாத்திரம் பின்வாங்காம லென்னுடன்கூட நடந்து வருகவேண்டுமென்று ஆண்டிப் பெரியோரானவர் முன்னம் நடக்கவும், அரசன் பின்பற்றி நடந்து, இருவரு மெட்டுநாளாக இரவும் பகலுநடந்தொன்பதா நாட்காலையில் கற்பகவல்லியம்மாளின் தருமக்கோட்டைக்கு அருகாமையில் வந்து, ஐயா! ஞானபுரத் தரசனே! இது தான் கற்பகவல்லியம்மாளின் தருமக் கோட்டை இந்தக் கோட்டையின் அகல நீளத்தையுஞ் சற்று வுற்றுப் பாருமையா சக்ரவர்த்தியே! யென்று பெரியோர் பகர்ந்தருளிய வுடனே, ஐம்பத்தைந்து தேசத்திற்கு மதிபதியாகிய அறத்தாள மகாராஜனானவர் அந்தத் தருமகோட்டையைச் சற்றுநேரமேறவிறங் கவுற்று நோக்கிப் பார்த்து பெண்மணியானவள் தருமம் செய்யும் படியான அரண்மனையே இப்பேர்க்கொத்த நவரத்தின மயமாக விளங்குகின்றதே, இந்தப் பெண்ணின் தந்தையானவன் அரசுபுரியும்படியான அரண்மனை யெவ்வாறாக விருக்குமோ நல்லது ஐயா! பெரியவரே! இந்தத் தருமகோட்டைக் குள்ளாகச் செல்லுவோம் வாருமையா வென்று வேந்தனழைக்கும்போது, இதோவருகின்றே னப்பாவென்று கதிரைவேற் பண்டாரமானவர் அரசனின் கரத்தைப்

பிடித்துக்கொண் டிருவருமாகக் கோட்டைக்குள்ளாகப் புகுந்து, முதல் வாயிலுக்குச் சென்றவுடனே, அங்கிருக்கப்பட்ட சேவகர்கள் கண்டு திடுக்கென்றெழுந்து வெள்ளிப் பாத்திரத்திற் புனல் கொண்டுவந்து இருவரையு நாற்காலியின்மீ திருத்திவைத்து, கொண்டுவந்த ஜலத்தை யிருவரின்பாதத்திற் சொரிந்து, மாசுநீங்கத் துலக்கி யலம்பியதின்பின்பு இள மன்னனையும் பெரியோளையு மழைத்துக்கொண்டு, இரண்டாவது மாளிகைக்குப் போய் ஆசனத் திலமர்த்தித் தங்கப் பாத்திரத்தில், ஆயாசந் தீருவதற்காகப் பாயாசங் கொண்டுவந்து அருந்தச் செய்து, இவர்களும் பாயாசமுண்டதின் பின்பு, அங்கிருக்கப்பட்ட ஏவலாளிகளிற் சிலரெழுந்து சவரியும் வெண்சாமரமுங் கொண்டுவந்து, இருவருக்கும் களை நீங்குப்பொருட்டாக விசிறிக்கொண்டிருந்து, சற்றுநேரஞ் சென்று, இருவரையு மழைத்துக்கொண்டு மூன்றாவதரண்மனைக்குச் சென்றவுடனே, அங்கிருக்கப்பட்ட ஏவலாளிகளெழுந் திருவர்களையுங் கரத்தைப் பிடித்துக் கொண்டு இவர்களுடுத்திக் கொண்டிருக்கின்ற கலைகளைக் களையும்படியாகச் செய்து, சிங்கமுக நாற்காலியின் மீதமரச்செய்து. இரண்டு பொற்கிண்ணத்தி லெண்ணெயெடுத்துக் கொண்டுவந்து, இருவருக்குஞ் சிரசிலுந் தேகமுழுவதிலுந் தேய்த்து புனலாடுமனைக்கழைத்துக் கொண்டுபோய் அப்பங்க ஸ்நானஞ்செய்துவைத்து, சலவைக் கலைகளைக்கொண்டுவந்து இருவர்கட்கும் உடல் முழுவதுந் துடைத்து ஈரத்துகிலை வாங்கியெறிந்துவிட்டு, பட்டுப் பட்டாடைகள் கொடுத்து கட்டிக்கொள்ளச் செய்து, பூசைமனைக் கழைத்துக் கொண்டுபோய்விட்டு நீங்களிருவருமுமக்கான பூசையை முடித்துக்கொண்டு வாருங்களையா வென்றேவலாளிக ளுரைத்தவுடனே, இளவரசனும், பண்டாரமும், பூசைமனைக்குள்ளாகப் புகுந்து திருவெண்ணீறணிந்து வழிபடுங் கடவுளடியை வணங்கித் துதித்துத் தொழுதெழுந்து வெளியில் வந்தவுடனே, அங்கிருந்த ஏவலாளிகள் இருவர்களையு மழைத்துக்கொண்டு மடைப்பள்ளிமனைக்குச் சென்று, தங்கமணையின் மீதிருவர்களையு மமர்த்தி, இருவருக்கு மிரண்டு நிலவாழையிலையை யெடுத்துப் போட்டு, முக்கனி சர்க்கரை தேனுந் தினைமாவுமறுசுவைபொருந்தக் கூடிய அசனமும் படைத்து, பாயச முதலியதெல்லாங் கொடுத்துண்ணச் செய்து, இருவர்களுமுண்டெழுந்ததின் பின்பு ஏவலாளிகளோடிவந்து இருவருக்கும் சாந்தம் முதலியவெல்லாம் அமைப்பப்பட்டுத் தண்டத்தாற் றடைத்து. பள்ளி மனைக்கழைத்துக் கொண்டுபோ யிருவர்களையும்

இரண்டு பஞ்சணையின்மீது படுக்கவைத்துவிட்டு, தலைக்காவலனானவன், ஆண்டியை நோக்கி ஐயா, பெரியவரே! உமதருகினில் மாதர்களியாவர்களாகிலும் மனைவியாக இருக்கவேண்டியதாக வுமக்குப் பெண்வேண்டுமானாற் றெரியப் படுத்துஞ் சுவாமி! யென்று தருமக் கோட்டைத் தலைக் காவலன் கேட்கும்போது, ஆண்டிப் பெரியோ ரறைகின்றார்.

கேளாயப்பா காவலதிகாரியே! யானோ, விருத்தனையாகிய கிழவனானபடியினாலே எனக்குப் பெண்டாட்டியும், மனையாட்டியும், வேண்டியதில்லை. இந்த மனைக்கு அண்டைமனையிற் பள்ளிகொண்டிருக்கின்ற இளவரசனை விசாரியுமையா வென்று பெரியோருரைத்த மொழியைக்கேட்ட காவலனானவன், நான்கு ஆட்களையேவி பண்டாரத்திற்குக் காற்கரங்களைப் பிடிக்கும் பொருட்டாகவும், பின்னும் இரண்டாட்களை விடுத்து வெண்சாமரம் வீசும்படியாகக் கட்டளையிட்டருளிவிட்டு, அம்மனையைக் கடந்து அண்டை மனைக்குள்ளாகப் புகுந்து இளவேந்தனைக் கண்டு ஐயா! பரதேசியே, உமக்கருகினில் பெண்டுவேண்டுமா? மனைவியாக இருப்பதற்கு வேண்டுமாவென்று காவலன் கேட்கும்போது இளவேந்தனெழுந்து கூறுகின்றார்.

கேளாயப்பா காவலதிகாரியே! மனைவி வேண்டுமென்றுதான் இங்ஙனம் வந்தேன். அதிலும், இன்றைய தினத்திற் கென்னிடம் வருகப்பட்ட பெண்ணானவள் என்ன தன்மையாக விருக்கவேண்டு மென்றால்? வடிவில் ஈரேழு பதினான்கு லோகத்திலு மிருக்கப்பட்ட மாதர்களுக்கெல்லாம் சிறந்தவளாகவும், சகலவிதமார்க்கமாகிய கல்வி கேள்விகளிற் றேர்ந்தவளாகவும், தனதான்ய சம்பத்துடையவளாக வும், எந்தக்காலத்திலும் பிணியில்லாதவளாகவும், எனக்குமனைவிமு றையாகவும், மணமுடைய திரேகமுள்ளவளாகவும், அச்சம், நாணம், மடம், பயிர்ப்பென்னுந் தத்துவத்தைக் கைக்கொண்டவளாகவும், விவேகத்தில் வியாழபகவானுக்கு இணையாகவும் கல்வியில் வேசிக்கு நிகராகவும், காப்பதில் ஈன்ற அன்னைக்குமேலாகவும் மங்கைப்பருவ முடைய பெண்மணியாகவுமிருந்தால் மாத்திரம், என்னிடம் அனுப் புமையா. இல்லாவிடி லெனக்குப் பெண்டுவேண்டுவதில்லை யென்று அரசனுரைத்த வாக்கியத்தைக்கேட்ட தலைக்காவலனானவன், இதோ அழைத்துக்கொண்டு வருகின்றேனென்றுரைத்துவிட்டு, அந்த மனை யைக் கடந்து வெளியில் வந்து, கன்னிகா மடத்திற்குள்ளாகப் புகு ந்து, அங்ஙன மிருக்கப்பட்ட ஆயிரம் பெண்களிலும் தனது மதிக்

குசந்தபெண்மணியையழைத்துக்கொண்டுவந்தால் அம்மணி காதரத்தாவது மாளிகையிற் பள்ளியறையிலே தடையில்லாமல் வாயிற் பாதுகை பொருவர் வந்து படுத்துக்கொண்டிருக்கின்றார். அவ்வனம் நீ சென்று பயபக்தியோடுங்கூடி, காது கற்பகவல்லியம்மாளின் தருமக்கொடியானது நீடூழியாக வாழும்பொருட்டாய் அக்கப் பரதேசிக்கு நீ பணிவிடை புரிந்து அவரின் அனுமதி பெற்றுக்கொண்டு உனது மனைக்கு வந்து சேரவேண்டும் பெண்ணே யென்று காவலனுரைத்துவிட்டுச் சென்றுவிட்டான்.

தலைக்காவலன் சென்றதின் பின்பு அந்தப் பெண்மணியானவள் தங்கத்தாம்பாளத்திற் பண்டிகாரம் முதலிய தின்பண்டங்களெல்லா மெடுத்து வைத்துக்கொண்டு கரத்திற் பசும்பாலெடுத்து பிடித்துக் கொண்டு ரத்தாவது மாளிகையி லிருக்கின்ற பள்ளியறைக் குள்ளாகப் புகுந்து, கரத்திலிருந்த தாம்பாளத்தையும், பாத்திரத்தையும், பஞ்சணைக் கெதிரில் காற்காலியின் மீது வைத்துவிட்டு மன்னனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து கேளுஞ் சுவாமி! அடியாளும்மிடங்கூடிக் கலந்திருக்கும் பொருட்டாக வந்தனன் நாதனே யென்ற பணிப்பெண்ணானவள் பகர்ந்த மொழியைக் கேட்ட அரசனானவர். அந்தப் பெண்மணியை நோக்கி ஏ மாதுசிரோன்மணியே! நீ யார்? உனது நாமதேயமென்ன? இங்ஙனம் இயாது காரியமாக வந்தனை? கூறும்பெண்ணேயென்று பரதேசியாக விருக்கின்ற அரசனறைந்த வுரையைக்கேட்ட பெண்ணானவள் மன்னனை நோக்கி விளம்புகின்றாள்.

கேளுஞ்சுவாமி பிராணநாதா! இந்தக்கோட்டைக் கதிபதியாகிய கற்பகவல்லியம்மாளின் வழியப் பெண்களிலும் அடியாளடிமைப் பெண்ணாகையினாலே, காவலதிகாரியின் ஆக்ஞைபின்படியே உம்முடன் கூடியிருந்து போகவேண்டுமென் றுத்திரவுபெற்றுக் கொண்டு வந்தேனாதலால் உமதன்டையி லடியாளுக்குக் கிஞ்சித்திடந்தரவேண்டும் நாதனே யென்றிரக்கச் சொல்லாகவியம்பின வாக்கியத்தைச் செய்யலார் கேட்டு ஏளாய் பெண்ணே! உமது நாச்சியாராகிய கற்பகவல்லியம்மாளின் முககரிசனத்தைக் காணும்பொருட்டாக விங்ஙனம் யான் வந்ததேயன்றி, இந்தத் துன்மார்க்கத் தொழிலுக்காக வருகவில்லை நல்லது என்மீதுனக்குப் பட்சமிருக்குமானாலுனதரசியின் திருமுகத்தை யெனக்குக் காண்பிக்க வேண்டும். அவ்விதம் கற்பகவல்லியின் முகத்தை யெனக்குக் காட்டுவாயானால்

நீதானென்னுடன் கூடப் பிறந்த சோதரி யென்றுள்ளத்திற் களிப்பு கொள்வேன். இல்லாவிடின் நீ பொசிக்கத்தக்க முறைமையிலும் சேர்க்கையானவளல்ல. ஆகையினாலே, அந்த தருமபத்தினியின் திருவுருவத்தைத் தெரிசிக்கச் சம்மதிக்கின்றாயா? இல்லையா? சொல்லும் பெண்ணே யென்று வேந்தனவன் வினவும்போது மங்கைப்பருவப் பெண்ணானவள் கூறுகின்றாள்.

கேளுமையா பரதேசியே! அடியாளும்முடன் கூடிக்கலந்து புருடமுறைபெற்றுப் போகலாமென்று நினைவுகொண்டு வந்தேன். அடியாளைச் சகோதரியாகப் பாவித்துக்கொண்டீர். ஆகிலும் பெரிதல்ல தாங்களின்னாரென் றடியாளுக்குத் தெரியப்படுத்துவீராகில் அதன் பின்பு யாதொருசேதியுங் கலந்து பேசிக்கொள்ளலாமையனே யென்று பணிப்பெண்ணானவள் பகர்ந்த மொழியைக் கேட்ட வேந்தன் பணிப்பெண்ணை நோக்கி கேளாய் மாதுசிரோன்மணியே! இதற்கு நேர் கிழக்குத்திக்கில் ஞானபுரியென்னும் பட்டணத்தைப் பரிபாலனஞ் செய்யப்பட்ட அரத்தாள மகாராஜனென்பவன் யான்தான். எனது நாடுநகரங்களை விட்டுவிட்டுப் பரதேசி வேடம்பூண்டு, ஆண்டிப்பெரியோருடன் கூடிக் கற்பகவல்லியம்மாளின் முகதரிசனத்தைப் பார்க்கும் பொருட்டாக விங்ஙனம் வந்தேனம்மணி யென்று அரசனானவன் உரைக்கக் கேட்ட பணிப்பெண்ணானவள் பின்னும் மன்னனுக்கு வந்தனஞ் செய்து கூறுகின்றாள். கேளுமையா சுவாமி ஞானபுரத்தரசே! கேட்டருளும் கற்பகவல்லியம்மாளின் திருமுகதரிசனங் காண்பதற்கும்மைப்போன்ற மன்னாதிமன்னர்களாலும் முடியாதகாரியமாகையினாலே, அடியாளை உடன் பிறந்த சகோதரியைப் போலப் பாவித்துக் கொண்டமையினாலே, அரசியின் முகதரிசனத்தைக் காண்பதற்கு ஒரு தந்திரமிருக்கின்றது. அந்த மார்க்கஞ்செய்குவீராகில் தொண்ணூறுவது மாளிகையில் கற்பகவல்லியைக் காணலாகுமையனே. யான் கூறுகின்ற மார்க்கத்தைப்போல நடப்பதற்குச் சம்மதமிருக்குமானால் அதற்கு யானே உளவாக விருந்து நடத்திவைக்கின்றேன். சொல்லுமன்னா வென்று பணிப்பெண்ணானவள் பின்னுங் கூறுகின்றனள்.

ஐயபத்தைந்து தேசங்கட்கு மதிபதியாகிய அண்ணலே! கேளும் பொழுது விடிந்தவுடனே நாடொறு மெழுந்து ஒவ்வொரு மாளிகையாகச் சென்று தங்குமிடங்களிற் றங்கி, பெத்தனை நாளானபோதிலும் உம்முடன் கூடவந்த கிழவனைக் கூட்டிக்கொண்டு போகாமல்

தாங்கள் மாத்திரந் தனிமையாகத் தொண்ணூற்றாவது மாளிகைக்கு வருகுவீரானால், அங்ஙனம் நான் வீற்றிருப்பேன் ஓ அன்றியே! அநேகராகங்களுடன் பாடல்கள் தெரிந்திருக்குமானால், பாடு மென்று ஒருவரைக்கண்டவுடனே நீ பாடுவாயானால் உனது தொனியைக் கேட்டு கற்பகவல்லியானவள் வந்து உனதருகில் குந்தும்படியாகச் செய்கின்றேன். அதிலும் தொண்ணூற்றாவது மாளிகைக்கு இரவில் வருகவேண்டும். அங்ஙனம் நீ வருகும்போது காவல்காரனிட்டால் அந்த மாளிகை வாசற்படி வலதுபுறத்திலிருக்கின்ற அரண்மனை வெள்ளி கபாடத்தைத்திறந்துகொண்டு யாதொன்றுக்கு அஞ்சாமல் மனைக்குள்ளாக வருகுவீரானால் அங்ஙனம் அடியாளிருப்பேன் இது தான் சேதியென்னவே அடியாள் போயவருகின்றேனென்றுரைத்து பண்டுபலாகிகளை யெல்லாமங்ஙனமே வைத்துவிட்டு, பணிப்பெண் ணானவள் பள்ளிமனையைக்கடந்து வெளியில்வந்து தனதரண்மனைக் குள்ளாகப் புகுந்து, தனது காரியத்தில் வீற்றிருந்தாள்.

(சேளுங்கள் கதாநேய நண்பர்களே) அறத்தாள மகாராஜனை பெரியோரை யழைத்து ஐயா, ஆண்டிப்பெரியவரே! நீவிரிந்த மாளி கையிற்றானே வீற்றிருப்பீரானால், யான் தொண்ணூறு மாளிகைவ ரையிலுஞ் சென்று நடக்கின்ற காரிய உபசாரங்களைக் கண்டு தெரி ந்து வருகின்றேன். யான்வருவதற்குச் சிலது நாளானபோதிலும் தாங்களிந்த மாளிகையை விட்டுவிட்டெங்குஞ் செல்லாமலிருக்கவே ண்டியது. கடவுளின் கிருபையாற் கற்பகவல்லியின் திருமுக தரிச னமகப்படுமானால், அதையும் பார்த்துக்கொண்டு வருகின்றேன். நீவிர் மாத்திரம் நாம் வந்த இரகசியத்தைப் பிறருக்குச் சேதி தெரி விக்காமலிருக்கவேண்டும் போமைய போய்ப் பள்ளிகொள்ளும் சுவாமியென்று வேந்தனவர் பெரியோரை யனுப்பிவிட்டுத் தானு மயர்ந்து துயில் செய்துக்கொண்டிருந்தார்.

பொழுதுவிடிந்தவுடனே அறத்தாள மகாராஜனவரெழுந்து வெளியில் வந்ததைக் கண்ட வேவலாளர்கள் அரசனின் கரத்தைப் பிடித்துக்கொண்டுபோய் காலைக்கடனைக் கழிக்கும்படியாக விட்டு விட்டு நின்றுக்கொண்டிருக்கும்போது வேந்தனவர் மலசலாதிக ளைக்கழித்து தந்த சுத்தி முதலிய தெல்லாஞ் செய்துக்கொண்டு ஆறாவது மாளிகைக்குச் சென்று நியமை நிஷ்டை ஜபதபாதிகளைக் குறைவின்றி நிறைவேற்றிக் கொண்டு ஏழாவது மாளிகைக்குச் சென் றவுடனே ஆங்கிருக்கப்பட்ட ஏவலாளர்கள் திடீரென்றெழுந்து அர சன் கரத்தைப் பிடித்துக்கொண்டு படைப்பள்ளிக் கழைத்துக்

வந்தேன் சுவாமி, உடையாளின் மனதின்னென்னைக்கை நித்திரைசெய்யும் படியாக உமதருகில் யான் பள்ளிகொள்ளுதற்கெனக்கு இடந்தர வேண்டும் நாதனே! என்றுரைத்துக்கொண்டு தேவென்றெறிசி அரசனிருக்கின்ற மஞ்சத்தின்மீது மன்னனிருகாலையும் பிடித்துக் கொண்டாள்.

பணிப்பெண்ணானவள் பஞ்சணையில் பக்கத்திலமர்ந்ததை வேந்தன் கண்டு ஏமாறுகின்றான் மணியே! நீரும் நீ பொழுது வந்த எண்ணமானது இவ்வளவும் இப்போது முடியாது அதேனென்றால் நானோ காமமுள்ள பாதகியாக இருக்கின்றேனே நீ என்னைக் கூடும்பொருட்டாக வந்தனையே எனக்கோ ஒரு சரமில்லையே உன்னைக்கட்டியணைவதற்குக் கிடமில்லையே அதிலும் விவாகம்புரியலாகாதென்றும், பெண்களுடன் கூடிக்கலவி செய்யலாகாதென்றும், வைராக்கியங்கொண்டு விரதம் பூண்டிருக்கின்றேன் ஆனதினாலே நீயெனக்குச் சோதரியாக வேண்டும்மணியென்று வேந்தன் விளைவிய சொற்களைக் கேட்ட மாதானவள் மன்னனை நோக்கி, கேளுமையா, பரதேசியே! அடியாளும்முடன் கூடிக்கலந்து ஆசையோடுசெய்து போகலாமென்று நினைவுகொண்டு வந்தனன் என்னெண்ணத்தைத் தவிர்த்து இந்தமங்கையைத் தங்கைமுறையாகக் கொண்டருளினீர். ஆகிலும் பெரிதல்ல, இதோ உமக்காக யான் கொண்டு வந்த பண்டு பலாதிகளையுண்டு பாலருந்தியதின் பின்பு, பள்ளி கொள்வீராக அடியாளும் சென்று விடுகின்றேனென்றுரைத்துக், கனிவர்க்கங்களை யெடுத்து மன்னன் கரத்திற் கொடுத்துண்ணச் செய்து, பாலருந்தியதின் பின்பு, தாம்பாளத்தையும் பாத்திரத்தையு மெடுத்துக்கொண்டு பெண்மணியானவள் வேந்தனிடத்தில் விடை பெற்றுக்கொண்டு பள்ளியறையைக் கடந்து, தனதிருப்பிடத்திற்குச் சென்றுவிட்டவுடனே, அரசனானவர் மஞ்சத்தில் சயனித்து அயர்ந்து துயில் செய்துவிட்டார்.

பொழுது விடிந்தவுடனே அறத்தாள மகாராசனானவர் தினக் கடனை யொழித்து விட்டு ஸ்நாந முதலாகிய நியமங்களெல்லாஞ் சுத்தி செய்துகொண்டு, ஒன்பதாவது மாளிகைக்குச் சென்றங்கனமிருந்து நாளுக்கு நாளாக ஒவ்வொரு மாளிகையாகக் கடந்து கொண்டு எண்பத்தொன்பதாம் மாளிகைக்குச் சென்று அவ்விடமிருந்து அன்று பகல்முழுவதும் [illegible] பிறந்தவுடனே, அங்கிருக்கப்பட்டவர் [illegible] படிக்குத தொண்ணூறாவது மாளிகைக்குச்சென்று, வெள்ளிக்கபா

டமிருக்கின்ற மனையைக்கண்டு, அந்தக்கதவைத்திறந்து உட்சென்று போகும்போது, கபாடந் திறந்த வோசையைக்கேட்ட பணிப்பெண் ணானவள் ஓடோடியும் வந்து வேந்தனைக்கண்டு வந்தனஞ் செய்து வாருமண்ணே யென்று கரத்தைப்பிடித்தழைத்துக் கொண்டு, அரண் மனைக்குள்ளாகப் புகுந்து அசனை பொற்பீடத்தி லுட்காரவைத் துத் தானுமெதிரிலமர்ந்து வேந்தனை நோக்கி, விளம்புகின்றாள்.

ஓ அண்ணே! ஞானபுரததரசே கேளும் நீவிர் தரித்திக் கொண்டி ருக்கிற கலையை யவிழ்த்து வைத்துவிட்டிதோ இந்த வுடைகளையும் பணிகளையும் பூண்டுக்கொள்ளும் யாராவது கேட்டால் அடியா ளுக்குத் தங்கையென்றும், நீவிர் அக்காளென்றுஞ் சொல்லவேண் டும். தாங்களறுமாறி யிருக்கின்ற இரகசியத்தை யிங்கிருக்கப்பட்ட வர்களறியாமற்படிக் கபிநயித்துக்கொண்டிருந்து, நாள் தள்ளிக் கொண்டு வருதுவீராகில், எந்தநாளைக்காகிலும் ஒருநாளைக்குக் கற் பகவல்லி யிந்த மாளிகைக்கு வருவாள். அவளேனுமும்மை யாரென் று கேட்பாளாகில், யான் சொன்னவாறுபோலவே அன்னவளுக் கும் உரைசெய்துவிட்டு, அவளது ரூபலாவண்யத்தையும், வாக்கு சாதுர்யத்தையுங் கண்டு அதிகமாக வார்த்தையாடாமற் படிக்கு மௌனியாக இருந்தெழுந்து, அரண்மனைக்குள்ளாக வந்துவிடும். அதன் பின்பு, நடப்பதைப் பார்த்துக்கொள்ளலாமண்ணே! இது தான். அந்தக் கற்பகவல்லியைக் காணும்படியான தந்திரமாகையி னாலே, அரசியானவள் திடீரெனப்போது வந்துவிட்டாலும் வந்து விடுவாள். அவள் வருவது, நேரமும் நாழிகையுங் கிடையாது. எப்போது நினைவுகொள்ளுகின்றாளோ? அப்போதே! திடீரென்று வந்துவிடுவாளாதலால், அண்ணே! அதிசுருக்காகப் பெண்வேடம் போட்டுக்கொள்ளுமென்று, பணிப்பெண் ணுரைத்ததைக் கேட்ட வேந்தனானவர் திடீரென் றெழுந்து, தான் தனதிடையிற் கட்டிக் கொண்டிருக்கின்ற கலையையவிழ்த்து வைத்துவிட்டு, பாவாடை உத் தரீயம் ரவிக்கை முதலிய பட்டுப்பட்டாடைகளை யுடுத்திக்கொண்டு, பெண்மணிகள் பூணும்படியான ஆபரணங்களில் விலைமதிக்கவொண் ணாத பணிகளையெல்லாம் பூண்டுக்கொண்டு, மூன்றாம் பிறைக்கிணை யாகிய, திருநெற்றியி லிவ்வுலகந் தெரியும்படியான திலர்தப்பொட் டணிந்துகொண்டு நிற்கின்றதை பணிப்பெண்ணானவள் கண்டு வியப் படைந்து ஓ அண்ணே! இப்போதுன்னைப் பார்த்தால், தேவதாரம் பைகட்கும் மீறின வடிவமுள்ள மங்கைப் பெண்ணாகத் தோன்று கின்றது. உன்னுடைய வடிவத்திற் கெங்கள் நாச்சியாராகிய, கற

பகவல்லியம்மாளு மிணையாகமாட்டாள். உன் முகத்தைப் பார்த்தால் வர்ணித்துச் சொல்ல வொண்ணாத பெண்ணைப்போல விளங்குகின்றனையே! நல்லது யாராகிலுங் கேட்டால், நேற்றைய மாலையில் வந்ததாகவும், முன்னமே நமக்கு நான் சொன்னவாறுபோலச் சொல்லிக் காலத்தை மௌனமாகக் கழித்து வருவோமாகினன்றே அல்லாமலும் அத்தருவின் ரகசியம் வெளிப்படுமானால் என்னை சிரச்சேதஞ் செய்து விடுவார்கள். பதனம் பதனம் மௌனமாக இருக்கவேண்டும் வாருமண்ணா, நாமிருவரும் அசனம்பரிமாறி விட்டுச் சற்று நேரங் கண்ணுறங்குவோம். வாருமென்று, பணிப்பெண்ணானவள் மன்னனையழைத்துக் கொண்டுபோய் மடைப்பள்ளியிற் றங்கப்பீடத்திற் குந்தவைத்து, வாழையிலைபோட்டு முப்பழமொடு பாலன்னத்தோடுங்கூடிய அமுது படைத்து, அரசனுண்டெழுந்தபின்பு, தானுமோரிலையிற் பரிமாறிக்கொண்டு உண்டெழுந்து, இருவரும், பள்ளிமனைக்குட் சென்று தனித்தனியே, அம்சதூளிகா மஞ்சத்தின்மீது படுத்தயர்ந்து துயில் செய்துவிட்டார்கள்.

(கேளும் கதாநேயர்க் குழாங்களே! பணிப்பெண்ணும் அறத்தாள மகாராஜனும் தனித் தனியே நித்திரை புரிந்து கொண்டிருக்கும்போது, இரவு பதினைந்து நாழிகைக்கு மேல் தொண்ணூற்றாறுவது மாளிகையில், ஆராதி சூராதி மகா வீரர்களும், உருவின கத்தியை யுறையிற் போடாமற்படிக்குக் கரத்திற் பிடித்துக் கொண்டு, காவல் காத்துக்கொண்டிருக்கவும், ஆயிரந் தாதிப்பெண்கள் புடை சூழ்ந்து நெருங்கி யிருக்க கோடி சூரியர்களுதயமானாற்போலத் தூண்டாவிளக்கு எரிந்துகொண்டிருக்கவும், பஞ்சணை மெத்தை நான்கு மூலைகளிலும் நான்கு மாதர்களுருவின கத்தியை யுறையிற் போடாமல் வலது கரத்திலேந்திப் பிடித்துக்கொண்டிருக்கவும், கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் முதலாகிய நவரத்தினங்களிழைத்துப் பதித்த மஞ்சத்தின்மீது இலவம் பஞ்சை நிறைத்து, இந்திர வர்ணப்பட்டினாற் சமைத்த பஞ்சணைமெத்தையின்மீது பட்டுப்பீதாம்பரத்தை விரித்துப் போட்டு மல்லிகை, முல்லை, இருவாட்சி, பாரிஜாதம், மருவு, மருக்கொழுந்து முதலாகிய மலர்களைப் பரப்பி, புனுகு, சவ்வாது, அத்தர், பனிநீர் முதலாகிய பரிமள நீர்களைத் தெளித்து, சந்திரகாந்திச் சாலுவையைப் போர்வையாகப் போர்த்துக்கொண்டு, அயர்ந்து துயில் செய்கின்ற நாடக கதாநாயகியாகிய கற்பகவல்லியம்மாள், இரவு பதினைந்து நாழிகை

க்குக் கனவுகண்டு, கண்விழித்துத் திடுக்கென்றெழுந்து, சுற்று முற்றும் பார்த்து, வேற்றுமையாகிய ஆளொருவருமில்லையென்றுணர்ந்து, தனக்குத் தாயாகமாகிய, அருகில் சயனித்துக்கொண்டிருக்கின்ற தாதியைக் கரத்தினுற்றட்டி யெழுப்பி அடியம்மா, தாதித்தாயே! எனக்கோ, உடலெல்லாம் துடிக்கின்றதடி, உள்ளமும் நடுக்கின்றதடி, அடியம்மா! நானென்னென்று சொல்லப்போகின்றேன். எனது நாயகனவனெழுந்திருக்கும்படியான நாள் நெருங்கிவிட்டதடி, இனிமேல் நமக்கியாதொரு சஞ்சலமுமில்லை யென்று, கற்பகவல்லியம்மாள் மென்மேலுங் களிப்புக்கொண்டிருப்பதை யறிந்த தாதியானவள் நாச்சியாரை நோக்கி, அம்மா! கற்பகவல்லித் தாயே, என்ன விசேடமம்மா நீ கூறுஞ் செய்தியை யெனக்கொன்றும் தெரியவில்லையம்மணி! ஆகையினாலே, அதனை வெளிப்படையாகக் கூறுந்தாயே! என்று தாதியானவள் கேட்கும்போது, கற்பகவல்லியம்மாள் கூறத்தொடங்கினள்.

கேளாயெனதன்னைக்கொப்பாகிய அம்மணி. கேட்டருளும் ஞானபுரத்தை யாளப்பட்ட அறத்தான மகாராஜனை சொற்பனத்திற் கண்டேனே. களிகொண்டேன். எனது நாயகனவனெழுந்துலாவும்படியாகக் கண்டேன் எனது கழுத்தில் மணமாங்கல்ய மாலையிருக்கக் கண்டேன் அறத்தான மகாராஜனவர் இடது சாரியில்லாமல் எனது நேரில் நின்றிருக்கக் கனவுகண்டேனென்று, கற்பகவல்லியம்மாள் தாதியுடனே ஓதிக்கொண் டிருக்கும்போது கற்பகவல்லியின் சிரசிற்கு மேற்புறத்தில், ஓரோசையொன்று பிறந்தது. அவ்வோசையைக் கேட்டு போற்றி, போற்றி ஆகாயவாணித் தாயே! என்று இருகரத்தையுஞ் சிரசின்மேற் கூப்பி, வந்தனஞ்செய்துவிட்டு, கற்பகவல்லியம்மாள் மஞ்சத்தின்மீது மௌனமாக வீற்றிருந்தனள்.

(கேளீரென தன்பர்க் குழாங்களே! கேளும்) கதாநாயகத்தின் சிரசின்மேற் பிறந்த ஓசையானது, என்ன மொழியொடு பிறந்ததென்றால், ஓ கற்பகவல்லியே! நீ கண்ட கனவு உண்மையேயன்றி, அறத்தான மகாராஜன் உனக்கருகில் வந்திருக்கின்றான். வந்துவிட்டான், வந்துவிட்டானென்று பிறந்தது ஆகாய வாணி அறைந்த வாக்கியத்தைக் கதாநாயகமுந் தாதிப்பெண்ணுங் கேட்டுக்கொண்டிருந்து, சிலது நேரஞ் சென்று இருவர்களும் மஞ்சத்தில் சயனித்துயர்ந்து துயில் செய்துவிட்டார்கள். பொழுது விடிந்து அருணன்

னதாகத் தெரிவித்த காலைப்பதினம் மீ வருகும்போது, அவர்களிரு
வர்களையும் மெய்யுடனழைத்துக்கொண்டு வரக்கடவதென்றுரைத்
துச் சொல்லுங்களென்று ஆங்கிருந்தவர்களுக்கு விடைகொடுத் தனுப்பி
விட்டுத் தானுடைய பள்ளியறைக்குள்ளே புகுந்து, முப்பழமொடு பால
ன்னத்தோடுங்கூடிய உணவு புசித்துவிட்டு அன்றிரவும், மறுநாள்
பகல் முழுவதும் துயிலாக இரவு கழிந்தவுடனே, சகலருமுண்டி
புசித்துவிட்டு, சபாமண்டபத்திற்கு வந்து கற்பகவல்லியைச் சூழ்ந்
து ஏவற்பெண்களும் தாதிமார்களும் சேர்ந் திருக்கும்போது நேற்
றையதினம் சபையிலுரைத்த பெண்ணானவள் பணிப்பெண்களுக்
குத் தலைவியிடத்திற்குச் சென்று வணங்கி, அம்மா! பணித்தொழி
லின்றலைத்தாயே கேளும் உன்னையும், உன் தமக்கையாரையும், இந்
தட்சணத்தில், நமது நாச்சியாரழைத்துக் கொண்டு வருகச்சொன்
னள். அதிக சுருக்காகப் பிரயாணப்படுக தாயே! என்று பணிப்
பெண்ணானவள் பகர்ந்த சேதியை தலைமைப் பெண்ணானவள் கேட்டு,
அடிபெண்ணே யெனது தமக்கையார் இங்கனம் வந்திருக்கின்ற
சேதியானது. அரசிக்கு எவ்வாறு தெரியவந்தது, யாதுகாரியத்திற்
காக எனது தமக்கையை யழைத்துவரச் சொன்னாள் சொல்லும்
பெண்ணே! என்று பணியதிகாரியானவள் கேட்கும்போது, பணிப்
பெண் பகர்கின்றாள்.

கேளுமம்மா தாயே! நேற்றைய இரவில் நமது நாச்சியானவள்,
பாடல் கச்சேரிவைக்க வேண்டுமென்றும், நமது கோட்டைக்குள்
ளாக இருக்கப்பட்ட பெண்கள் யார்களில் கீதநாதத்தோடு பாடப்
பட்ட மாதர்களை யெல்லாமழைத்துக்கொண்டு வருகும்படியா. தலை
மைத் தாதிக்குக் கட்டளையிட்டருளியதை அடியாள் கேட்டுக்கொ
ண்டிருந்து, உமது தமக்கையாரின் பிரதாபத்தை யானெடுத்துரை
த்தேனம்மா. ஆகையினாலே, பாடல் கச்சேரி வைப்பதற்காக, உங்
களிருவர்களையுமழைத்துக்கொண்டு வருகச்சொன்னாள் வாருங்களம்
மமார்களே யென்று பணிப்பெண்ணானவள் அழைக்கும்போது, நல்
லதுதோ வருகின்றோமென்று அரண்மனைக்குள்ளாகப் புகுந்து, அக்
காளாகிய, அறந்தாள மகாராஜனைக் கண்டு ஓ அண்ணா! தாங்கள்
கோரிவந்த காரியம் நிறைவேறும் பொருட்டான நாள் நெருங்கிவிட்
டது. கற்பகவல்லியம்மாள் நீ வந்திருக்கின்ற சேதியையும், இங்ஙு
னம் பாடிக்கொண்டிருக்கின்றதைக் கேள்விப்பட்டு என்னையுமென்
னையுமித்தட்சணத்தி லழைத்துக்கொண்டு வருகும்படியாக ஆளை
யேவி யிருக்கின்றாள். நான் முன்னமுமக்குரைத்த சேதிகளெல்லாம்

து பாடலைக் கேட்பதற்கு அவாவுற்று, இங்ஙனமுன்னை யழைப்பித்தேனென்று கதாநாயகன் கூறியவற்றைக்கேட்ட காமிழந்த பெண்ணானவள் நல்லதிதோ பாடுகின்றேன் கேட்டருளுமரசியாரே! யென்று, பைரவி, தேவக்கிரியை, மேகவிரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, ஸ்ரீராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, இல்லிதை, தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, பங்களாம், தன்னியாசி காம்போதி, கௌளி, நாட்டை, தேசாட்சரி, காந்தாரி, சாரங்கம் முதலாகிய முப்பத்திரண்டு இராகங்களையும், பூட்டி கீதநாதங்கள் நாட்டி தனது குயிலொலிபோன்ற தொனியையெடுத்துப் பாசுரங்கள் பாடும்போது, அங்ஙனமிருக்கப்பட்ட ஆயிரம் பெண்களும், கற்பகவல்லியுங் கேட்டுக் களிப்படைந்து, இரவு, பதினைந்து நாழிகைவரையிலும் கச்சேரி நடாத்திக்கொண்டிருந்து அதன் பின்பு பணிப்பெண்களின் தலைவியை யழைத்து கதாநாயகங் கூறுகின்றாள்.

கேளாயம்மா பணியதிகாரியே! உனது தமக்கையை என்னுடன்கூடவே வைத்துக்கொண்டு எனக்கு முதல் மந்திரியாகப் பாவித்துக்கொள்ளும் பொருட்டாக விருக்கின்றேன். ஆதலால் உனது கருத்தும் உனது தமக்கையின் மனதினெண்ணமுந் தெரியவேண்டியதால் என்ன சொல்லுகின்றீர்கள். சொல்லுங்களம்மா வென்று இராஜ புத்திரியானவள் கேட்கும்போது, காமிழந்த பெண்ணனவள் கட்டழகு மகாராஜனீன்றெடுத்த கற்பகவல்லியை நோக்கி, கேளுமம்மா நானுன்னுடன் கூட இருக்கவேண்டுமானால் நாமிருவருமெந்தக்காலத்திலெவ்வித மிருந்தபோதிலும் சம்மதமே நாமிருவரும் பள்ளிக்கொள்ளும்படியான மனைக்குள்ளாக வேறொரு பெண்களுமிருக்கலாகாது. அவ்வித முனக்குச் சம்மதமானால் உன்னுடன் கூட இருக்கின்றேன். இல்லாவிடில், நானிருக்கமாட்டேனென்று காமிழந்த பெண்ணனவளுரைத்த வாக்கியத்தைக் கேட்ட கற்பகவல்லியானவள் நல்லதம்மா உனது மனதினெண்ணத்தைப் போலவே நடப்பதற்கு யானும் சித்தமாகக் காத்துக் கொண்டிருக்கின்றேனென்றுரைத்து ஆங்குள்ள பெண்களுக்கெல்லாம் விடைகொடுத்தனுப்பிவிட்டு, உருமாறியிருக்கின்ற அறத்தாள மகாராஜனை காமிழந்த பெண்ணை கதாநாயகமானவள் கரத்தைப் பிடித்தழைத்துக்கொண்டு பள்ளிமனைக்குட்சென்று அரசியானவளோர் மஞ்சத்திலமர்ந்து வாருமம்மா தாயே! நாமிருவரும் இந்த மஞ்சத்திற்றனே

படுத்துத் துயில் செய்குவோம் வாருமென்று கற்பகவல்லியம்மாளை யழைக்கும்போது கரமிழந்த பெண்மணியானவள் கூறுகின்றாள்.

கேளாய் இராஜ புத்திரியே! அடிபாளுநன்னுடன் கூடப் படுக்க மாட்டேன். அது இயாதுக்கென்றால் நீயோ! திருமணமாகாத பருவப்பெண்ணானதால் நான் மணமுடிந்த சுமங்கலியாகவிருக்கின்றதைப்பற்றி, உனது கரமானது எனது மாங்கல்யச்சரடின் மீது படுமேயானால் எனது நாயகனுக்கு அதிக சுருக்காக மரணம் நேர்ந்துவிடுமாதலால், நீயும் நானும் அணைந்துப் படுக்கலாமென்று அறத்தாள மகாராஜனுகிய இடதுகர மிழந்தப் பெண்மணியானவள் கூறின சொற்களைக்கேட்ட கற்பகவல்லியானவள் நல்லதென்று தலையையசைத்து ஓ அம்மணி! நீயுரைத்த வாக்கியமானது உண்மையான சேதியாகையினலே நானிந்த மஞ்சத்தில்தானே படுத்துக்கொள்ளுகின்றேன். அதோ அந்தப் பஞ்சணையின்மீது நீ படுத்துக்கொள்ளுமம்மாவென் றுரைத்துவிட்டு கதாநாயகமானவள் பஞ்சணையின் மீது படுத்து அயர்ந்து துயில்செய்துவிட்டாள்.

கற்பகவல்லியானவள் படுத்து நித்திரை புரிந்துவிட்டவுடனே கரமற்ற பெண்ணானவள் அருகிலிருந்த அம்சதூளிகா மஞ்சத்தில் சயனித்து தானு மயர்ந்து நித்திரை போய்விட்டாள். (கேளுங்கள் கதாபிமான நேயர்க்குழாங்களே) பள்ளிமனைக்குள்ளாக கதாநாயகமும் சக்ரவர்த்தியும் தனித்தனியாக துயில்செய்துக்கொண் டிருக்கும்போது சுக்கிரனுதயவேளைக்கு கற்பகவல்லியானவள் சொற்பனங்கண்டு திடுக்கென்றலறி யெழுந்து அண்டை மஞ்சத்திற் படுத்துக் கொண்டிருக்கின்ற வேந்தர் வேந்தனை ஓ அம்மா அம்மாவென்று கூவியழைத்து துயில்புரிகின்ற துரைவேந்தனை யெழுப்பி ஓ அம்மணி! எனதருகினில் வாருந்தாயேயென் றழைத்துத் தனது பக்கத்திற் குந்தவைத்துக் கொண்டு கேளாயம்மணி ஞானபுரியென்னும் பட்டணத்தை யாளப்பட்ட அறத்தாள மகாராஜனைவர் இங்ஙனம் வருகவேண்டுமென்று வெகு நாளாகக் கடவுளைக் கோரிக் கொண்டிருக்கின்றேன். நானிவ்விதமாக எண்ணிக்கொண்டிருக்கும் போது பத்துதினங்களுக்கு முன்பு ஞானபுரத்துச் சக்ரவர்த்தியானவர் எனது மாளிகைக்குள்ளாக வந்திருப்பதாகக் கனவுகண்டேன், அந்தப் புண்ணிய புருடனைவர் இன்னு மெந்தகாலத்தில் வருவாரோ தெரியவில்லையே யென்று கற்பகவல்லியானவள் செப்பியருளினுள்.

அரசியறைந்த வுரையைக்கேட்ட அறத்தாள மன்னனானவர் கதாநாயகத்தை நோக்கி கேளாயம்மணி இராஜகுமாரியே! நித்திரை புரிந்துக்கொண் டிருந்த அடியாளை இப்போதேது காரணத்திற்காக எழுப்பினீர். அறத்தாள மகாராஜனின் வரவை எதற்காக எதிர் பார்க்கின்றாய் சொல்லுமென்று கேட்கும்போது, கற்பகவல்லியானவள் பெண்வேடம் பூண்டிருக்கின்ற அரசனை நோக்கி கேளுமம்மா தாயே அடியாளிப்போது ஒருசொர்ப்பனங்கண்டேன். அதன் பலாபலனை தெரிந்துக்கொள்ளும்பொருட்டாக வுன்னையெழுப்பினேனேயன்றி மற்றொன்றுக்குமல்ல அம்மணியென்றுரைத்துப் பின்னுங் கூறுகின்றாள்.

கேளாயம்மாதாயே யாரோவொரு பெரியவர் சடாமகுடசாவி காம்பர தாரியாக சிவச்சின்னங்களை யணிந்துகொண்டு, எனது நேரில் வந்து நின்று, எனது கரத்தைப் பிடித்து அம்மா கற்பகவல்லியே நீகோரிய அறத்தாள மகாராஜன் உனது கோட்டைக்குள்ளாக வந்திருக்கின்றார். அவரோ அவதாரப் புருடனாகையினாலே மாறுரூபங்கொண்டு வந்திருக்கின்றார். அன்னவரைக்கண்டு பிடித்து உனது தாயின் சவப்பேழையை யவரிடத்திற்கொடுத்து அந்தச் சவத்தைத் தனது வலது கரத்தினால் தடவச்செய்குவாயானால் உடனே உன்னுடைய தாயானவள் உயிர்பெற்று நித்திரை புரிந்து விழித்த பாவனையாக எழுந்திருப்பாள். உனதன்னையை யெழுப்பப்பட்ட சீமானே உனக்கும் மணவாளனென் றுணரக்கடவாயென்று பரம்பொருளைப்போலவே பெரியோரொருவரெனது கனவிற்றோன்றி யுரைத்தனர். நானந்தக் கனவைக்கண்டு திடுக்கென்று விழித்துப் பார்க்கும்போது இந்த மனைக்குள்ளாக உன்னையன்றி மற்றெவர்களையுங் காணேனம்மா. இந்தக் கனவின் சந்தேகத்தை யறிந்து இதனது கருத்தை அடியாளுக்கு வெளிப்படையாகக் கூறவேண்டுந்தாயே யென்று கதாநாயக மானவள்கேட்கும்போது உருமாறியிருக்கின்ற காமிழந்த பெண்ணானவள் கழலுகின்றாள்.

கேளாய் இராஜபுத்திரியே! நீ கண்டது கனவல்லவேயல்ல நினைவாக இருக்கவேண்டும். அல்லது வருகும்படியான அறத்தாள மகாராஜனுக்கு வழிதெரியமாட்டாதோ வந்தால் வருகட்டுமே பார்த்துக்கொள்ளுவோமென்றுரைத்து சுக்கிரனுதயத்திற்கே இருவர்களுமெழுந்து அரண்மனைக்குப் பின்புறமிருக்கின்ற சோலைக்குள்ளாகச் சென்று தாராதாரத்திலமர்ந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு தங்

தசுத்திமுதலிய தெல்லாஞ்செய்துங்கொண்டு நேமநிஷ்டை ஜபதபாதிகளைக்குறைவின்றி நிறைவேற்றிக்கொண்டு, அரண்மனைக்குள்ளாக வந்து தாயகமாகிய தாதிப்பெண்ணை யழைத்து பாலும் பழமுங் கொண்டுவரச்செய்து இருவர்களு மருந்தியதின் பின்பு, சபாமண்டபத்திற்குச் சென்று கொலுவிலமர்ந்து தருமக்கோட்டையின் சேதிகளை விசாரித்துக் கொண்டிருந்து சிலது நேரஞ்சென்று ஏடுமெழுத்தாணியுமெடுத்து இரண்டிரவாகத் தான்கண்ட கனவின் சேதியை ஆதியோடந்தமாக ஓலையிலெழுதி சுருளாகமடித்து ஓர் பாங்கிப்பெண்ணை யழைத்து அந்தப் பெண்ணிடத்தி லோலைச் சுருளைக் கொடுத்துத், தனது பிதாவினிடத்திற் கொடுத்துவிட்டு வருரும்படியாகக் கட்டளையிட்டருளினவுடனே பாங்கிப்பெண்ணனவள் ஓலைச் சுருளைப் பெற்றுக்கொண்டு, அரண்மனையைக் கடந்து நடந்து தருமக்கோட்டையைவிட்டு வெளிப்பட்டு நடையாய் நடந்து கட்டழகு மகாராஜனிட கொலுவிற்கு வந்து, வேந்தனைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்து ஓலைச்சுருளை மன்னனிடத்திற்கொடுத்து கற்பகவல்லியம்மாள் கொடுத்ததாக வுரைத்துவிட்டு, பாங்கிப்பெண்ணனவள் கொலுமண்டபத்தைக் கடந்து தருமக்கோட்டைக்கு வந்து நாச்சியாரைக்கண்டு அரசனிடமோலையைக் கொடுத்து விட்டு வந்தசேதியை யோதிவிட்டு பாங்கிப்பெண்ணனவள் தனது காரியத்தில் வீற்றிருக்கும்போது, ஓலைச்சுருளை வாங்கி வாசித்துப்பார்த்த மகாராஜாவானவர் அன்றையதினம் மௌனமாக வீற்றிருந்து மாலையில் கொலுக்கூடங்கலைந்ததின் பின்பு, தானும் அரண்மனைக்குச்சென்று புத்திரியழைத்த சேதியை நினைந்து நாளையகாலையில் தருமக்கோட்டைக்குப்போக வேண்டுமென் றுறுதிகொண்டு தனக்குவேண்டிய வுணவுபுசித்து பள்ளிமனைக்குட் சென்று நவரத்ன மஞ்சத்திற் படுத்து மன்னனனவ ரயர்ந்து துயில் செய்துக்கொண்டிருந்தார்.

பட்டாம்புரியென்னும் பட்டணத்தை யாளப்பட்ட கட்டழகு மகாராஜனனவர் நித்திரை புரியும்போது, இரவுபதினைந்து நாழிகைக்கு அரசனனவர் கனவுகண்டு திடுக்கென்று விழித்தெழுந்து கடவுளைத் தோத்திரஞ்செய்துக் கொண்டிருக்கும்போது, அரசனின் சிரசிற்குமேலாக அசரீரிவாக்கியமொன்று பிறந்தது அந்த வாக்கியத்தைக்கேட்ட மன்னனனவர். சிரசின்மீது கரத்தைக்கூப்பி வந்தனஞ்செய்து போற்றி போற்றி ஆகாயவாணித்தாயே போற்றியென்றுபோற்றிசெய்து விட்டு மன்னனனவர் பின்னும் மஞ்சத்தின்மீது சாய்ந்து துயில் செய்துவிட்டார்.

(கேளுங்களெனது மித்திரக் குழாங்களே) கட்டழகு மகாராஜனானவர் கண்டகனவானது என்னவெனவென்றால் தனது தேவியுந் தானும் பஞ்சத்தில் படுத்துக்கொண்டிருப்பதாகவும் மணமகன் வந்து தன்னைத் தட்டியெழுப்பினதாகவுஞ் சொற்பனங்கண்டு விழித்தெழுந்து குந்திக்கொண்டிருக்கும்போது (ஓய்கட்டழகு மகாராஜனே உனது தருமகோட்டைக்குள்ளாக அறத்தாள மகாராஜன் வந்து பத்துதினங்களுக் கதிகமாகின்றது. இப்போதுனது புத்திரியுமந்தச் சக்ரவர்த்தியும் கைகலந் துலாவிக்கொண்டிருக்கின்றார்கள். உனது தேவியாகிய திட்டவேணியு மெழுந்திருப்பா ளெழுந்திருப்பாள். அப்பா மகாராஜனே உனது மாடமாளிகையின் மண்டபக் கூடகோபுரங்களுக்கேற்ற மருமகன் வந்துவிட்டான் வந்துவிட்டானென்று ஆகாயவாணித் தாயானவள் அறைந்து மறைந்தாள்.) கட்டழகு மகாராஜனானவர் துயில்செய்து பொழுதுவிடிந்தவுடனே யெழுந்து நித்தியக்கடனாதி நேமநிஷ்டைகளையெல்லாங் குறைவின்றி முடித்துக்கொண்டு பாலும்பழமுமுண்டுவிட் டாடையாபரணங் களலங்காரமாக வுடுத்துக்கொண்டு கத்தி, கேடயம், வாள், வில்லம்புமுதலியவாயுதங்களை யெல்லா மெடுத்துக் கட்டிக்கொண்டு அங்ஙனமிருந்த காவலனையேவித் தனது புரவியை யலங்கரிந்துக்கொண்டு வருகும்படியாகக் கட்டளையிட்டருளியதின் பின்பு மற்றோர் காவலனையேவி முதல் மந்திரியை யழைத்து வரச்செய்து மந்திரியார் வந்தவுடனே மன்னனானவர்கண்டு, ஐயா மந்திரித் தலைவரே நானெனது புத்திரியின் தருமக்கோட்டை சென்று வருகின்றேன். நான் வருகும்பரியந்தம் அரசை பதனமாகப் பாதுகாத்துக்கொள்ளும் பிள்ளாயென் றுக்ஞாபிததுவிட்டு மந்திரியை யனுப்பினதின் பின்பு புரவிவந்தவுடனே, அந்தப் புரவியின் நெற்றிக்கூந்தலைப் பிடித்து அதற்குகந்த வுபதேசத்தை யுரைத்துதட்டிக் கொடுத்து லகானைக் கரத்திற்பிடித்து எகிரி புரவியின்மேலாரோகணித்துப் புரவியையெச்சரித்து மனையைக்கடந்து வெளியில் வந்து தேசியைத் தூண்டி சிமிட்டா கொடுத்து வாயுவேக மனோவேகமா யோட்டிக்கொண்டு, காடுகானகங்க ளெல்லாங் கடந்து. தருமக்கோட்டைக்கு வெளியில்வந்து புரவியை நிறுத்தித் திடீரென்று புரவியை விட்டுத் தரையிலிறங்கினவுடனே, அங்ஙனமிருந்த காவலனானவன் புரவியைப்பிடித்துக்கொண்டுபோய் சாவடியிற் கட்டிவிட்டதின் பின்பு வேந்தனானவர் தருமக்கோட்டைக் குள்ளாகப் புகுந்து தொண்ணூற்றைந்தாவது கோட்டைக்குப் போகின்ற சேதியானது கற்பகவல்லி

யம்மாளின் செவியில் விழுந்தவுடனே அந்த மாதரசியானவள் திடீரென்றெழுந்து ஓடோடியும் வந்து பிதாவின் கரத்தைப் பிடித்துக்கொண்டு வாருந்தந்தையே யென்றழைத்துக்கொண்டு, தனதாண் மனைக்குள்ளாகச்சென்று கபாடத்தைச் சாற்றித் தாள்போட்டுக்கொண்டு பொற்பீடமெடுத்துப் போட்டு தந்தையை யமரச்செய்து தானுமெதிரிலமர்ந்து தந்தையை நோக்கிப் பேசத்தொடங்கினாள்.

கேளும் என்னை யருந்தவஞ்செய்து பெற்ற அண்ணலே! அடியாள் கண்ட கனவைக் கேட்டீரோ எவ்விதமாக விருக்கின்றது. சக்ரவர்த்தியானவ ரிங்ஙனம் வந்திருப்பதாக அசரீரிவாக்கியுங் கூடப்பிறந்திருக்கின்றது. இவ்விதமாகவிருக்க அவரை யிங்ஙனங் காணோமே ஒருவேளை நமது தருமக்கோட்டையிலிருக்கின்ற பெண்மணிகள் யாராகிலும் கைவசப்படுத்தி மறைத்து வைத்துக்கொண் டிருக்கின்றார்களோ வென்னமோ ஒன்றுந்தெரியவில்லை. ஆகையினாலேதானும்மை வரவழைத்தேன். நீவிரிரவில் இயாதேனும் மாறுபாடாகிய ரூபங்கள் பூண்டு நமது தருமக்கோட்டை முழுவதுஞ் சோதித்துக்கொண்டு வருகுவீரானால் எந்தவிதத்திலும் ஞானபுரத்தாசரைப் பிடிக்கலாகும். அல்லது உமது யோசனைப் படியாக நடந்தெவ்விதமாகிலும் சக்ரவர்த்தியைப் பிடியுந் தந்தையே யென்று கற்பகவல்லியானவள் செப்பியருளினாள்.

புத்திரியுரைத்த வாக்கியத்தைக்கேட்ட வேந்தனானவர் சற்று நேரம நிதானித்து யோசனைசெய்து மகளை நோக்கி கேளாயம்மா தவபுத்திரியே! இந்த இரண்டு நாளாக நீ யாருடன் கூடக்கூடி ஆடுவதும் பாடுவதும் உண்பதும் உறங்குவதும் யாரோடு தாயேயென்று கட்டழகு மகாராஜனானவர் கேட்கும்போது, பணிந்தொழிலில் தலைப்பெண்ணின் தமக்கையும் யானுந்தான் இந்த இரண்டுநாளாக இணைபிரியாம லிருக்கின்றோமென்று கற்பகவல்லி யுரைத்தமொழியைக்கேட்ட அரசனானவர் நல்லதென்று தலையையசைத்துப் பின்னுங் குமாரத்தியை நோக்கி அம்மா கற்பகவல்லித்தாயே பணிப்பெண்ணின் தமக்கையென்றுரைத்தாயே அந்தப் பெண்ணிற்கு சரீர அவயங்களெல்லாங் குறைவின்றி சரியாக விருக்கின்றதாவென்று வேந்தன் வினவும்போது, இல்லையையனே அந்தப் பெண்ணிற்கு இடதுகரமில்லவேயில்லை யென்று கதாநாயகங் கூறியவற்றையெல்லாங் கேட்ட அரசனானவர் பின்னும் சிரமசையசைத்து, நல்லது உள்ளிருக்கின்ற கள்ளனையுள்ளே பிடிக்கவேண்டுமென்று மனதிலெண்ணங்கொண்டு, புத்திரியை நோக்கி அம்மா ஆசிபே யாரொரு இரக

சியஞ்சொல்லுகின்றேன். அதனைப் பிறரிடத்தி லுரைசெய்யாதே யம்மணி அதாவதென்னவென்றால், இப்போ துன்னுடன்கூடவிருக்கின்ற கரமிழந்தபெண்ணானவள் உண்மையிற்பெண்ணல்லவேயல்ல. அடியம்மாடி நமது குடியை வாழவைக்கும்படியான ஞானபுரத்தரசன், அவர் தாண்டியம்மா மாறுவேடம் பூண்டுகொண்டு வந்திருக்கின்றாராகையால் இன்றைய இரவிற்கு நீ சோதித்தறிந்துகொள்ளுந்தாயே. அதனையெவ்விதம் சோதிக்கின்றாயென்றால் நீங்களிருவருமுண்டு பள்ளிகொள்ளப்போகும்போது உனது தாயின் சவமானது உனது பள்ளிமனையில் தானே யிருக்கின்றது. அதனை நீங்களிருவருமெடுத்து பேழையின் மேற்புறத்தை திறந்து கரமிழந்தபெண்ணினுடைய வலது கரத்தினாலந்த சவத்தின் மாசுகளை யெல்லாம் அப்பெண்ணைத் துடைக்கும்படியாகச் செப்புவாயானால், அந்தப்பெண்ணானவள் துடைப்பாள். அப்போதுனது தாயானவ ளெழுந்திருப்பாளானால் இவர்தான் அறத்தாள மகாராஜனென்னலாம் எழுந்திருக்காவிட்டால் அதற்குமேல் நடக்குங் காரியத்தில் பார்த்துக்கொள்ளலாம். அம்மா கற்பகவல்லியே இந்தச் சேதியானது மகா இரகசியத்திலிருக்கவேண்டும் யானும் இதோ இந்த மனையிற்றான் சயனித்துக்கொள்ளுவேன். உனது தாயானவளெழுந் திருந்தாளானால் ஒருவருக்குந் தெரியாமற்படிக்கு வந்து என்னை யெழுப்புமம்மாவென்றுரைத்து புத்திரியை யனுப்பிவிட்டு, தானும் புனலாடி மேல்குளித்து மடப்பள்ளிக்குச் சென்று அசனம் புசித்து இரவு பத்து நாழிகைக்குச் சகலருங் கண்ணுறங்கினவுடனே, அரசனுஞ் சென்று பள்ளிகொண்டதின் பின்பு கற்பகவல்லியுங் கரமிழந்த பெண்ணும் பள்ளிகொள்வதற்காகப் பள்ளிமனைக்குட் சென்று, கபாடத்தைச் சாற்றிக்கொண்டவுடனே கரமிழந்த பெண்ணை நோக்கி கற்பகவல்லி கூறுகின்றாள்.

கேளாயம்மணி எனது தாயானவ ளிறந்துபோய் நெடுநாளாகின்றது. அந்த சவத்தை யழியாமற்படிக்கு மணப்பொடிகளாற் சுசிகரஞ்செய்து பேழையில் வைத்து அதோ தூக்கிக்கட்டியிருக்கின்றது பார்த்தாயாவென்று மேலிருக்கின்ற பேழையைக் காண்பித்து, ஏ அம்மணி! அந்தச் சவத்திற்கு ஆறுமாதத்திற் கொருதரம் மணப்பொடி பூசவேண்டியதினால், இப்போது நாமிருவரு மந்தப்பேழையை யிறக்கி மேல்மூடியைத் திறந்து சவத்தின்மேலிருக்கின்ற மாசுகளையெல்லாந் துடைத்து மணப்பொடிதூவி பழையபடியே பேழையையிருந்தவிடத் திற்பொருந்திவிடச்செய்யவேண்டும். இது

தான் இன்றிரவிற்கு நமக்கு பெருங்கஷ்டமாகிய தொழிலம்மா. ஆகி லும் பெரிதல்ல வாருமம்மா அந்தப்பேழையை யிறக்குவோமென் றிருவரும் இரண்டேணியைப் போட்டு அதன்மீதிலூர்ந்து பேழை கட்டிய கயற்றை யவிழ்த்து பேழையை யிறக்கி மஞ்சத்தின்மீது வைத்து மேல் மூடியைத் திறந்து கற்பகவல்லியானவள் தாயின்முக த்தைப்பார்த்து அம்மா திட்டவேணித்தாயே! இன்றைக்குத் தானெ ழுந் திருக்கப்போகிறாயோவென் றுள்ளத்திலெண்ணங்கொண்டு அருகிலிருக்கின்ற பெண்ணை நோக்கி ஓ அம்மணி! இந்தச்சவத்தின் மீதிருக்கின்ற மாசுகளையெல்லா முனது ஒற்றைக் கரத்தினாற்றுடை த்துக்கொண் டிருப்பாயானால், அதோ அந்தப் பேழையில் மணப் பொடிகளிருக்கின்றது. நானதனையெடுத்துக்கொண்டு வருகின்றே னென் றுரைத்துவிட்டுப் பஞ்சணையை விட்டுத் திட்டென்று கீழே குதித்து மஞ்சத்திற்குப் பத்துமுழத் தூலிலிருக்கின்ற பேழை யைத்திறந்து மணப்பொடிகளெடுப்பதைப்போல மஞ்சத்தைப் பார் த்துக்கொண்டிருக்கும்போது, பெண்வேடம் பூண்டு வந்திருக்கின்ற அறத்தாள மகாராஜனைவர் தனது வலது கரத்தினாற் பேழையி லிருக்குஞ் சவத்தின் சிரசிற்கரம்வைத்துத் துடைக்கும்போது, நித் திரைசெய்து விழித்தவர்களைப்போல் இராஜபத்தினியானவள் திடீ ரென்று விழித்தெழுந்ததைக் கண்ட சக்ரவர்த்தியானவர் திடுக்கிட் டு அடடா இஃதென்ன புதுமையாகவிருக்கின்றதேயென்று, மஞ் சத்தைவிட்டுத் தாழ இறங்கினவுடனே இடையே இருந்துபார்த்துக் கொண்டிருந்த கற்பகவல்லியானவள் ஓடோடியும் வந்து பெண்ணு டைகளைப் பூண்டுக்கொண்டிருக்கிற சக்ரவர்த்தியின் பாதாரவிந்தத் தில் வீழ்ந்து பணிந்தெழுந்து தாயைக்கண்டு அடியம்மா அன்னை யே இவர் யாரென்று தெரிந்துக்கொண்டனையா நமது குடிமுழு தும் வாழவைக்கவந்த கோமானாகிய ஞானபுரத்தரசர் இவர்தான் தாயேயென்றுரைத்து அம்மா அன்னையே நீ யிங்குதான் நின்றுக் கொண்டிரும் நான் வெளியிற் சென்றதிக சுருக்காக வந்துவிடுகின் றேன்.

(கேளுங்கள் சுதாநேயச் செல்வச்சிரோன்மணிகளே) சக்ரவர்த் தியானவர் வலதுகரத்தினாற் சவத்தைத் தடவும்போது இவர்க்குந் தெரியாமலே இடதுகரம் வளர்ந்துவிட்டது. இதுநிற்க, முன்பு தாயினிடம் சுருக்காக வந்துவிடுகிறேனென்று பகன்றுவிட்டுப் போன கற்பகவல்லியம்மாளானவள் தந்தை துயில்புரிகின்ற மனைக் குள்ளாகப் புகுந்து இருகரத்தாலும் பிதாவைத் தட்டியெழுப்பி

ஐயா தந்தையே எனது தாயானவளெழுந்துவிட்டாள். அதனைத்
தெரிவிக்கும் பொருட்டாக ஓடிவந்தேனையனே யென்றோதின
வுடனே மகாராஜாவானவர் திடுக்கென்றெழுந்து ஆஹா! அம்
மணி! இதோ வருகின்றேன் வருகின்றேனென்று ஆடைகளை
யெல்லாம் நன்றாக வரிந்திழுத்துக் கட்டிக்கொண்டு மகளுடனே
நடந்து பள்ளிமனைக்கு வந்து பெண்ணுடைப்பூண்டு நின்றுக்
கொண்டிருக்கின்ற சக்ரவர்த்தியைக்கண்டு வந்தனம் செய்து ஐயா,
ஞானபுரத்தரசே அடிமைகளைச் சோதிக்கும்பொருட்டாக ஆண்டி
வேடங்கொண்டு வருவதென்னே? தண்டுதளங்கள் புடைசூழ ஆடை
யாபரண அலங்காரமாக வருவீராகில் உமக்கு யாராகிலும் தடங்
கல் சொல்வார்களோ? நல்லது ஐயா இளவரசே! உன்னால் எனது
தேவியானவள் உயிர்பெற்றெழுந்தமையினாலே அவள் வயிற்றிலுதி
த்த குமரியிதோ விந்த கற்பகவல்லியம்மாளைத் தாங்கள் திருமணஞ்
செய்துக்கொண்டு சுகஜீவிகளாக வாழ்குவீரென்று கோருகின்றே
னையா சக்ரவர்த்தியே உமது கருத்தென்ன சொல்லுமையாவென்று
சுட்டழகு மகாராஜன் கேட்கும்போது, நல்லதையா மகாராஜனே
அவ்விதமே உனது புதல்வியைத் திருமணஞ்செய்து கொள்ளுகின்
றேனென்றுரைத்தவுடனே வேந்தனானவர் அருகிலிருந்த தேவிமுக
த்தையுற்று நோக்கி, மனையைவிட்டு வெளியில்வந்து அங்ஙனமிருந்
த பாங்கிப்பெண்ணையேவி முதல் மந்திரியை யழைத்துக்கொண்டு
வருகும்படியாகச்செய்து, மந்திரியானவர் வந்தவுடனே மன்னன்
கண்டு மந்திரிகாத்தைப்பிடித் தழைத்துக்கொண்டு மகளின் பள்ளி
மனைக்குச்சென்று, அறத்தான மகாராஜனைக் காண்பித்து அப்பா
மந்திரி பார்த்தனையா இவர்தான் ஞானபுரத்துக்கு அதிபதியானவர்.
இதோ பார்த்தனையா என்தேவியானவள் உயிர்பெற்றெழுந்துவிட்
டாளாகையால், இந்தச் சக்ரவர்த்திக்கும் நமது கற்பகவல்லியம்மா
ளுக்கும் திருமணமாலை சூட்டவேண்டியபடியினாலே, கணிதநூல்
வேதியர்களை யழைத்து முகூர்த்தத்திற்கு நாள் நியமித்துக்கொண்
டு, ஐம்பத்தைந்து தேயத் தரசர்கட்குந் திருமணவோலை யனுப்
பி விட்டு நமது பட்டாய்புரி பட்டண முழுமையு மலங்காரஞ் செய்
யும்பிள்ளா யென்று ஆஞ்ஞாபித்த வுடனே மந்திரியானவர் மன்ன
னிடத்தில் விடை பெற்றுக்கொண்டு நடையாய் நடந்து கொலு
மண்டபத்திற்கு வந்து, காவலனையேவி கணிதநூல் வேதியர்களை
யழைத்து வருகும்படியாகக் கட்டளையிட்டருளின வுடனே காவ
லனானவனோட்டோடியுஞ்சென்று கணிதநூலந்தணரைக்கண்டு இரா

ஜகாரியமாக முதல் மந்திரியாரழைத்துக்கொண்டு வருகச்சொன்னாரென்று வேதியரை யழைத்துக்கொண்டு வந்து, மந்திரியினிடத்தில் விடுத்தவுடனே முதல் மந்திரியானவர் அந்தணர்க்கு ஆசனம் போட்டு ஆதரச் செய்து ஐயா சோதிட வேதியரே! நமது மகாராஜனின் புதல்வியாகிய கற்பகவல்லி யம்மாளுக்கும் ஞானபுரத்துச் சக்ரவர்த்தியாகிய அறக்கள மகாராஜனுக்கும் முகூர்த்தத்திற்கு நாள் குறிக்கும் பொருட்டாக, வும்மையழைப்பித்தனனாகையினாலே கணிதநூலைப்பாருஞ்சுவாமியென்று முதல் மந்திரியார் மொழிந்தவுடனே வேதியரானவர் கணிதநூலையாய்ந்து பார்த்துக் கூறுகின்றார்.

கேளாயப்பா முதல்மந்திரி சாலிவாகன சகாப்த-18-ல் நிகழாநின்ற பரிதாபிஷூ மார்கழிமாதம் இருபத்தெட்டாந்தேதி அமரபட்சம் சனிவாரம் காலை இரண்டரை நாழிகைக்கு கடக லக்கினத்தில் முகூர்த்தமும், பதினெட்டாவது யாமம் முடிவாகத் திரும்பியது ஏனையா மந்திரித்தலைவரே தெரிந்துகொண்டீரா இந்த முகூர்த்த பட்டோலை இதுதானென்று மந்திரி கரத்திற்கொடுத்துவிட்டவுடனே, மந்திரியானவர் பொக்கிஷத் தலைவனையழைத்து கணிதநூல் வேதியர்க்காயிரம்பொன் கொடுக்கும்படியாகக் கட்டளையிட்டருளி விட்டு சருனிகளையும் இராயசக்காரரையு மழைத்து ஐம்பத்தாறு தேயங்கட்கும் திருமணவோலை யெழுதியனுப்பும்படியாகக் கட்டளையிட்டு, பட்டணத் தலைக்காவலனை யழைத்து பட்டணம்புரி முழுமையுமலங்காரஞ் செய்யும்படியாக வாக்ஞாபித்துவிட்டு, அரண்மனைக்காவலனை யழைத்து அரசனது அரண்மனை யாத்யந்தமும் அலங்கரிக்கும்படியாக வுரைத்துவிட்டு, மந்திரியானவர் புரவியின்மீதூர்ந்து கணிதன் கொடுத்த ஓலைச்சுருளை யெடுத்துக் கொண்டுபோய் மன்னனிடத்திற் கொடுத்து இன்றெட்டாநாள் சனிவாரங்காலை யிரண்டரை நாழிகைக்கு முகூர்த்தமையமென்று முதல்மந்திரியானவர் மொழிந்துவிட்டு நின்றுக்கொண்டிருக்கும்போது, வேந்தனானவர் மந்திரியை நோக்கி: அப்பா மந்திரி, திருமணத்திற்கு வேண்டிய பொருள்களையெல்லாஞ் சித்தஞ்செய்யும்பிள்ளாய், திருமணமாகும் பரியந்தம் ஆசைப் பதனமாய்ப் பாதுகாத்துக்கொள்ளும். யானிவ்விடத் திலிருக்கப்போகின்றேனையா மந்திரித் தலைவனே போய்வாரும் போய்வாருமென்று விடைகொடுத்தனுப்பிவிட்டுப் புத்திரியை நோக்கி அம்மா கற்பகவல்லியே! உனது நாயகனணிந்துகொண்டிருக்கின்ற ஆடையாபரணங்களை வாங்கிக்கொண்டு ஆண் உடைகளாக

ஆடையாபரணங்கள் கொண்டுவந்து தாருந்தாயே யென்று தந்தை யறைந்த மொழியைக்கேட்ட கதாநாயகனவன் சரியென்று நடந்து வெளியேறுதலைக் குறிக்கப் பருந்து சம்ரூபமெடுத்து மேலேக கவிந்து விமலையின் கொம்புகளை ஆடையாபரணங்களை யெடுத்துக் கொண்டுவந்து, நாயகனுடைய சக்ரவர்த்தியின் கரத்திற்கொடுத்து மேலிருந்து கொண்டிருக்கின்ற ஆடையாபரணங்களை யெல்லாங் களைந்துவைத்துவிட்டு இந்த உடைகளை யுடுத்திக்கொள்ளும். உருமாறிவந்த நாயகனே யென்று உத்தமப்பெண்ணானோதிய சேதியைக்கேட்ட இராசேந்திரனவர் கல்வியோடும் சம்மதித்து அந்தப் பெண்மணியாள் கொண்டுவந்த ஆடையாபரணங்களைக் கண்டு வியப்படைந்து, அவைகளையெல்லாங் கரத்திலெடுத்துக் கொண்டு கற்பகவல்லியை நோக்கி யுமாதேவிமாதாவே! ஆயுதங்களொன்றேனுமில்லையே உடைகளைமாத்திர முடுத்திக்கொள்ளச் சொல்லுகின்றனையே யென்று வேந்தனவர் வினவும்போது, இதோ கொண்டு வருகிறேனென்று கதாநாயகனவளோடோடியுஞ் சென்று தாயகமாகிய தாதிப்பெண்ணை யழைத்து அம்மா பாங்கியே! நீ நமது இலம்பக்கூடத்திற்குச் சென்று முப்பத்திரண்டாயுதங்களையு மெடுத்துக்கொண்டு வாருந்தாயே யென்றுரைத்தவுடனே. தாதிப்பெண்ணானவள்சென்று வகைக்கொவ்வோராயுதங்களாக முப்பத்திரண்டாயுதங்களுமெடுத்துக்கொண்டுவந்து, நாச்சியார் கரத்திற் கொடுத்துவிட்டு தாதிப்பெண் சென்றபின்பு கற்பகவல்லியானவள் ஆயுதங்களையெல்லா மெடுத்துக்கொண்டுவந்து இராசேந்திரன் கரத்திற் கொடுத்தவுடனே, சக்ரவர்த்தியானவர் வாங்கிக்கொண்டு மஞ்சத்தின் மறைவிற் சென்று தானுடுத்திக்கொண்டிருந்த பெண்ணுடைகளைக் களைந்துவைத்துவிட்டு இராஜரீகவுடைகளை யுடுத்திக்கொண்டு முப்பத்திரண்டாயுதங்களையு மிடையில் கட்டிக்கொண்டு வந்தவுடனே, கட்டழகு மகாராஜன்கண்டு திடுக்கிட்டு வந்தனஞ்செய்து ஐயா இளவரசனே சக்ரவர்த்தியென்றால் உம்மொருவர்க்குத்தான் தகுமேயன்றி மற்றையோருக்கும் எவனொருவனுக்கும் பொருந்தாதேயென்று ஒருவர்க்கொருவர் வார்த்தையாடிக்கொண்டிருக்கும் போது கிழக்குக்கடலில் ஆயிரங்கிரணங்கள் புடைசூழப்படியாக அருணமூர்த்தியானவர் பிரயாணப்பட்டார்.

பொழுது விடிந்தவுடனே நால்வர்களும் வெளியில் வந்து தாயும்பெண்ணும் ஒன்றாகவும், மருகனும் மாதுலனுமொருங்குசேர்ந்து சோலைவனங்கட்குச் சென்று காலைக்கடனை நீக்கி மெய்ச்சுத்தி யுடைகளையெல்

கனதிரண்டு கரத்தினாலும் பிடித்து முகத்தில் ஒத்திக்கொண்டு ஐயா மகானுபாவரே! உம்முடைய கருணாகடாட்சத்தினாலே அடியேனுக்கு இடமும் காலமும் வளர்ந்துவிட்டது. கற்பகவல்லியையும் நேரில்கண்டேன். மனைவியாகவுங் கொண்டேன். உமது திருப்பாதங்களுக்குத் தொண்டு பூண்டேனையனே, வாரும் இதோ இந்த ஆசனத்தில் வீற்றிருமையனே யென்று, ஆண்டிப்பெரியோரைத்தங்க நாற்காலியின்மீது குந்தவைத்து விட்டு, கட்டழகு மகாராஜனும், திட்டவேணியும் அறத்தாளச் சக்ரவர்த்தியும், கற்பகவல்லியம்மாளுடன் ஆக நால்வர்களுமமர்ந்து சிலது நேரம் சோழிசொக்கட்டான் முதலிய ஆட்டாங்களை விளையாடிக்கொண்டிருந்து மத்தியானவேளை புணவிற்காக எழுந்து இவ்வரசனும் கட்டழகனும் பண்டாரமும் சென்று காரகங்களைச் சுத்திசெய்துக்கொண்டு வந்தவுடனே கற்பகவல்லியம்மாள் மூவர்கட்கும் பொற்பீடமெடுத்துப் போட்டு அமரச்செய்து பாங்கிப்பெண்ணைக் கூவியழைத்து மூவர்களுக்கு மமுதுகொண்டு வருகச்செய்து, கொண்டுவந்த அமுதை சுதாநாயகம் வாங்கி மூவருக்கும் மூன்றிலைபோட்டு, கொண்டுவந்த பண்டிபலாதி அமுதையெல்லாம் அளவோடுமூன்றிலைகளிலும் படைத்து மூவருமுண்டெழுந்தபின் பின்பு கற்பகவல்லியம்மாள் நாதிப்பெண்ணையழைத்து, ஆண்டிப்பெரியோருண்ட இலையையெடுத்துப்போட்டுவிடும்படிச்செய்து தாயுந்தானும் இரண்டிலையிலமர்ந்து இருவரும்புசித்தெழுந்து தங்கள் காரியங்களில் வீற்றிருந்தார்.

தருமக்கோட்டைக்குள்ளாக இவ்விதமாக இருக்கும்போது பட்டாம்புரிமுழுவதிலும் மாவிலைத்தோரணமும், மகுடதோரணமும், பாக்குமரப் பந்தரும், பவழமரப்பந்தரும், முதலாகிய நவரத்தினக்கால்களைநாட்டி பட்டணமெவ்விடத்திலும் பந்தர்போட்டு, அளகாபுரிக்கும் அமராபதிக்கும் எண்மடங்கு அதிகமாக அலங்காரஞ்செய்து விளங்கவும் கருணீகனானவன் திருமண ஓலையெழுதித் தூதுவரிடங்கொடுத்து, இராஜசமுகங்களில்கொடுத்துவாருங்களென்று கட்டளையிட்டருளினவுடனே தூதுவர்கொண்டுபோய் ஓலையைக் கொடுக்கவும், மணவோலை கண்டமன்னர்களெல்லாம் பட்டாம்புரிக்குவந்து நெருங்கியிருக்கவும், முகூர்த்தநாளானது நெருங்கி சுக்கிரவாரம் இரவு பிறந்தவுடனே முதல் மந்திரியானவர் புரவிமேலாரோகணித்துத் தருமகோட்டைக்குவந்து புரவியை விட்டிறங்கிச்சென்று அரசனைக்கண்டு வணங்கி வந்தனஞ்செய்து முதல் மந்திரியானவர் மொழிகின்றார்.

கேளும் சுவாமி மகாராஜனே நாளைபதினம் காலையில் இரண்டரை நாழிகைக்கு முகூர்த்தம் வைபடியினாலே ஏனின்னமும் மௌனமாக இன்னமேயிருக்கிறீரென்று பத்தினி கோமான் கேட்கும்போது இதோ பிரயாணப்படப்போகலாமப்பாவென்று ஓதியருளி தனது தேவியாகிய திட்டவேணியையும், புதல்வியையுமழைத்து, அம்மா கற்பகவல்லியே நாளைபதினங் காலையி லிரண்டரை நாழிகைக்கு உனக்கும் சாவர்த்திகனுக் திருமணமாகையினாலே நாமெல்லோரும் நமது மாளிகைக்குச் செல்லவேண்டியதால், இந்தட்சணமே நீங்களெல்லோரும் பிரயாணப்பட வேண்டியதென்றுரைத்துவிட்டு, ஆயிரந்தாதிப்பெண்களையும் மற்றுமுள்ள ஏவற்பெண்டுகளையுமழைத்து அடைபாங்கிப்பெண்களா உங்கள் நாச்சியாருக்கு நாளையதினம் விவாகமாகையினாலே நீங்களெல்லோரும் பட்டணத்திற்குப் பிரயாணப்படுங்கள் பெண்டுகளேயென்று வேந்தனவர் விளம்பிய மொழியைக்கேட்ட பெண்மணிகளெல்லோரும், தங்கடங்கள் மாளிகைக்குச் சென்று அற்புதாச்சரியகரமான ஆடையாபரணங்களணிந்துகொண்டு, எல்லோருமொருங்குசேர்ந்து கற்பகவல்லியிடத்திற்கு வந்து நாச்சியாருக்கு ஆடையாபரணங்கள் தரித்து அலங்காரஞ்செய்து நவரத்தினச் சிவிகையைக் கொண்டுவரச்செய்து அந்தத் தண்டிகையில் திட்டவேணிபெண்ணும் இராஜபத்தினியும் இராஜபுத்திரியும் தாபகமாகிய தாதிப்பெண்ணும் ஆக மூவர்களு மமர்ந்தவுடனே மற்றையபெண்களெல்லாம் பல்லக்கைச் சூழ்ந்துக்கொண்டு நிற்கவும், அரசனவர் ஓர் பாங்கிப்பெண்ணை யழைத்து நீ நமது கோட்டைக்குச் சென்று படைத்தலைவனைக்கண்டு எழுபத்தீராயிரம் போர்ப்படை வீரர்களை ஆயுதபாணிகளாக அழைத்துக்கொண்டு அதிக சுருக்காக வருகச்சொன்னேனென்றுரைத்துவிட்டுவாரும் பெண்ணேயென்று வேந்தன் விளம்பினமொழியைக் கேட்ட சேடிப்பெண்ணானவள் ஓடோடியுஞ்சென்று கோட்டைக்குள்ளாகப புகுந்து படைத்தலைவனைக்கண்டு ஐயா படையதிகாரியே எழுபத்தீராயிரம் போர்ப்படைகளை ஆயுதபாணிகளாக தருமக் கோட்டைக்கு அரசன் அழைத்துக்கொண்டு வருகச்சொன்னார். அதிக சுருக்காகத் தளங்களைக் கூட்டிக்கொண்டு வாருமையாவென்றுரைத்துவிட்டு பாங்கிப்பெண்ணானவள் சென்றுவிட்டதின்பின்பு படைத்தலைவனானவன் நடைவீரர், படைவீரர், கொடிவீரர் முதலாகிய வீரர்களையெல்லா மாயுதபாணிகளாக வருகச் செய்து, தண்டிகைகளையெல்லாம் பந்திபந்தியாய் வரிசைவரிசையாக நிற்கவைத்து

தருமக்கோட்டைக்குப் போகும்படியாக எச்சரிப்பு செய்தவுடனே
தருக்கூள், சொந்தொழும்புப்படியாகச் சேனைகளெல்லாந் தட
தட தடவென்றும், படபடபடவென்றும், நடந்து, தருமக்கோட்டை
வெளியில் வந்து நிற்கும்போது, சேனைகள் வந்த சேதியைக் கட்ட
முது மகாராஜன் கேள்விப்பட்டு தனது புதல்வியின் பல்லக்கைத
தூக்கிக்கொண்டுச் செல்லும்பொருட்டாகப் பாங்கிப்பெண்களுக்கு
ஆக்ஞாபித்தவுடனே சேடிமார்கள் சிவிகையை யெடுத்துக்கொண்டு
வெளியில் வந்தவுடனே கட்டமுது மகாராஜனும் ஞானபுரத்தரச
னும் இருவருமிரண்டு புரவியின் மீது ஆரோகணித்து, தருமக்கோட்
டையைக் கடந்து வெளியில்வந்து படைகளை யெச்சரிக்கைசெய்து
தண்டு தளங்கள் புடைசூழும் பொருட்டாகக் கற்பகவல்லியும் அற
த்தாள மகாராஜனும் மற்றுமுள்ள பேர்களும் பட்டணத்திற்கு வந்
து அரண்மனைக்குள்ளாகப் புகுந்து ஒவ்வொருவரும் தமது காரிய
த்திற் பிரவேசித்திருக்கும்போது, சுக்கிரவாரமிரவு முழுவதுங்கடந்
து பொழுதுவிடிந்து சனிவாரம் பிறந்தவுடனே. ஐம்பத்தைந்து தே
யத்தரசர்களும் வேதவேதியர்களும் மணப்பந்தரில் வந்தமர்ந்திருக்
கும்போது, கற்பகவல்லியையும் இளஞ்சக்ரவர்த்தியையும் அலங்கா
ரஞ்செய்து வேதியர்கள் முன்னிலையில் திருமணையின்மீது அமர்த்தி
னவுடனே, வேதாகம விதிப்படியாகச் சடங்கு சாந்திகளெல்லாம்
நிறைவேற்றி கற்பகவல்லியின் கழுத்தில் அறத்தாள மகாராஜனென
வர் மணமாலை தரித்ததின்பின்பு, ஆங்குள்ள பலர்கட்கும் சந்தன
புட்பத்தாம்பூலாதிகளளித்து, எல்லோரையுங் களிக்கச்செய்து சக
லருக்கும் விருந்தளித்து அருந்தியெழுந்ததின் பின்பு செல்லப்பட்
டவர்கட்கெல்லாம் விடைகொடுத்தனுப்பிவிட்டு, அன்று பகல்முழு
வதுங்கழித்து இரவு பிறந்தவுடனே அரண்மனையிலிருக்கப்பட்டவர்
களெல்லோரும் உண்டு உறங்கியதின்பின்பு, கற்பகவல்லியும் சக்ரவர்
த்தியும் பள்ளியறைக்குள்ளாகச் சென்று பஞ்சணைமெத்தையின்மீ
தமர்ந்து, இளவேந்தனென்பவர் கதாநாயகத்தை நோக்கிக் கேளாய்
பெண்ணே கற்பகவல்லியே! உனக்குமுந்தி எனக்கு இரண்டு தேவி
மார்களுண்டு அவ்விருவர்களும் யாவரென்றால், வானுலகையாள
ப்பட்ட தேவேந்திர மகாராஜனின் புதல்வியாகிய தேவநாயகமென்
னும் பெண்ணொருத்தியும், நாகலோகத்தையாளப்பட்ட நாகராஜ
னின் குமாரியாகிய நாகவல்லியும், எனக்கு மனைவிகளாகவேண்டி
யது அதினால் இன்னும் நானவர்களுக்கு மணமாலை சூட்டவுமில்லை.
அவர்களின் கற்பழிக்கவுமில்லை. உனது முகதரிசனத்தைக் கண்ட

தின் பின்பு அவ்விருவர்களை மணமாலை சூட்டுவதாக வாக்குகொடுத்து விட்டு வந்திருக்கின்றேன். அவர்களை மணமாலை சூட்டாமலுன்னுடன்கூடி யான் சம்போகஞ் செய்வேனேயாமானால் என்னுடைய சிரசானது ஆயிரஞ்சுக்கலாக பிளந்து மரணமாகும்படியாக தேவேந்திரனும் நாகராஜனுமெனக்கு சாபங்கொடுத்திருக்கின்றார்கள். அவ்விருவர்களையுந் திருமணஞ்செய்யாமற்படிக் குன்னிடத்திற் படுக்கலாகாதாகையினாலே அதோ அந்த மஞ்சத்தின் மீது நீ சயனித்துக் கொள்ளும் பெண்ணேயென் றுரைத்துவிட்டு சக்ரவர்த்தியானவர் பஞ்சணையிற் படுத்தயர்ந்து நித்திரைபோய்விட்டார்.

மன்னன் பள்ளிகொண்டதின் பின்பு மாதரசியும் வேறோர்மஞ்சத்திற் படுத்துத் தானுங்கண்ணுறங்கினள். (கேளீரன்பர்களே) அறத்தாள மகாராஜனுக்கு ஆதியில் ஜாதகங்கணிக்கும்போது மணமாகின பதினாறாவது வயதில் மரணமென்றும் கற்பகவல்லி புட்பவதியான காலத்தில் தனக்கு ஜாதகங்கணிக்கும்போது மணமாகின பதினோராவது மாதம் மணவாளனை யிழந்து மாலையிழப்பாளென்று ஜாதகங் கணித்திருக்கின்றதாகையினாலே இந்தச் சேதியானது அறத்தாளனுக்குங் கற்பகவல்லிக்குந் தெரியாதானபடியினாலே இவர்களிருவர்களும் அன்றிரவு கழித்து பொழுது விடிந்தவுடனே யெழுந்து தருமக்கோட்டைக்குச் சென்று அங்ஙனமே வீற்றிருப்பதாக இருவரும் வார்த்தையாடி முடிவுசெய்துக்கொண்டு கட்டழகு மகாராஜனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அறத்தாளனுங் கற்பகவல்லியுந் தாதிப்பெண்களையுந் தண்டுதளங்களையும் எச்சரிக்கை செய்து தானுந் தனது நாயகனும் இரத்தினச் சிவிகையிலமர்ந்து தண்டிகையைத் தூக்கிக்கொள்ளச்செய்து தண்டுதளங்களும் தாதிப்பெண்களும் புடைசூழும்படியாக நடந்து தருமகோட்டை வந்து கற்பகவல்லியானவள் தனது நாயகனுடன் சுகஜீவியாக சையோகமொன்றில்லாமல் வாழ்ந்துக்கொண்டு வருகும்போது கற்பகவல்லிக்குத் திருமணமாகி ஒன்பது திங்களும் இருபத்தியைந்து நாட்களுமாகிவிட்டது.

அறத்தாள மகாராஜனுக்கு பதினாறாவது வயது பிறப்பதற்கு இன்னும் ஐந்துநாளிருக்கின்றதாதலால் இளச்சக்ரவர்த்தியானவர் மரணமாகுவதற்கு இன்னும் ஐந்துநாள்கடானிருக்கின்றது. சக்ரவர்த்தியுங் கற்பகவல்லியும் ஒருவர்க்கொருவர் கற்பிற்குப் பின்னம் வராமல் நடந்துக்கொண்டு வருகும்போது அரசனானவன் மரணமாகுவதற்கு மூன்றுநாட்களிருக்கும்போது இரண்டாநாளிரவில்

கதாநாயகமானவள் கனவுகண்டு திடுக்கென்றெழுந்து பஞ்சணையை விட்டுத் தாழ இறங்கி அண்டை மஞ்சத்திற் றுயில்செய்கின்ற நாயகனைக் கரத்தினாற் றட்டியெழுப்பி கேளும் சுவாமி பிராணவல்லபா அடியாள் ஒரு சொற்பனங்கண்டு அங்கக்கிடுகிடென்று நடுக்கங்கொண்டு அலறியெழுந்தோடிவந்தேன், நாயகனேயென்று கதாநாயகமானவ ளோதியருளினாள். தேவியானவள் கூறினமொழியைச் சக்ரவர்த்தியானவர்கேட்டு ஏ மாதுசிரோன்மணியே! கேளும் நீ யாதோ கனவுகண்டேனென் றுரைத்தனையே அதனை விபரமாக விளம்பும்பெண்ணேயென்று வேந்தனானவர் கேட்கும்போது ஓ எனது பிராணப்தமாகிய நாயகனே யானென்னவென்று சொல்லப் போகின்றேன். நீவிர் மரணமாகி விட்டதைப் போலும் இங்ஙனே யிருக்கப்பட்ட பாங்கிப்பெண்களெல்லாம் அடியாளைக் கட்டிக்கொண்டு ஏங்கும்படியாகக் கனவுகண்டேன் பர்த்தாவே. என்னமோவேதோ யாராலே யென்ன தீங்கு நேரிடுமோ துரையே, அவ்விதம் உமக்கு மரணம் நேரிடுமானால் அடியாள் இந்த மண்ணுலகத்தில் இருக்கப்போமோ வென்று துக்கங்கொண்டு கற்பகவல்லியானவள் ஓதியருளின வாக்கியத்தைக்கேட்ட மன்னனானவர் கூறுகின்றார்.

ஏ! பெண்கள் நாயகமே கேளும். நீ கண்டது கனவல்லவேயல்ல பித்தத்தின் கூற்றாற் சித்தத்திற் கிளம்பிய நினைவே யல்லது வேறொன்றுமல்ல ஆகையினாலே நீ யாதொன்றுக்குஞ் சஞ்சலப்பட வேண்டாம் பெண்ணே, சகலத்திற்கும் ஜெகதீசுரன் துணை யிருப்பார் நமக்கொன்றுங் குறைவு வராது. நீ சென்று பள்ளிகொள்ளும் பெண்ணே வருவதெல்லாம் வருகட்டும் பார்த்துக்கொள்ளலாம் போம் பெண்ணே யென்றுரைத்துவிட்டு, மன்னனும் பஞ்சணையிற் சாய்ந்து அயர்ந்து நித்திரை போய்விட்டனர். கதாநாயகமும் ஞானபுத்தரசனுந் துயில் செய்து பொழுது விடிந்தவுடனே யெழுந்து இருவர்களுஞ்சென்று நித்தியக்கடனாதி ஜபதபங்களை யெல்லாம் முடித்துக்கொண்டு மடப்பள்ளிக்குவந்து ஆளனுந்தேவியும் பண்டு பலாதிகளுண்டுவிட்டுப் பகடைக்காயாடிக்கொண்டு வீற்றிருந்தார்கள். சேவீர் அன்பர்களே நாளைய காலையில் ஐந்து நாழிகைக்கு அறத்தாள மகாராஜன் இறந்துவிடப் போகின்றான் ஆகையினாலே இனிமேல் உதயமாகுங்கதையை பூசையோடு வாசிக்கும்பொருட்டாக எச்சரிப்புச்செய்தேனை.

அன்று பகல் முழுவதும் இரவுங்கழிந்து பொழுது விடிந்தவுடனே கற்பகவல்லியானவள் கணவனை யெழுப்பி விட்டுத் தான் சென்றதின் பின்பு சக்ரவர்த்தியானவரெழுந்து சென்று காலைக்கட

னாதிகளை முடித்துக்கொண்டு வழிப்படுங்கடவுளடியை வணங்கித் தொழுதெழுந்து மடைப்பள்ளிக்குவந்து நாயகியுடனமர்ந்து காய்கனிகளுண்டுகொண்டிருக்கும்போது, நாழிகையும் நான்கேமுக்காலாகினவுடனே, கற்பகவல்லியம்மாளும் மணமுடித்து பதினொரு மாதம் சரியாக நிறைவேறுதற்கு இன்னுங் கால் நாழி யிருக்கின்றமையினாலே அறத்தாளமகாராஜனுக்கும் பதினாறுவது வயது பிறப்பதற்குக் கால் நாழிகை யிருக்கும்போது காய்கனிகளுண்டுகொண்டிருந்த வேந்தனானவர் திடீரென்று மண்மீது விழுந்து பெண்ணே கற்பகவல்லி கறபகவல்லி யென்று இரண்டுகுரா லழைத்துக்கொண்டிருக்கும்போது சக்ரவர்த்தியின் அங்கத்தை விட்டு ஆவியானது வெளிப்பட்டுப் போய்விட்டது.

அறத்தாள மகாராஜனானவர் மரணமாகிவிட்டதையும் கற்பகவல்லியம்மாள் கதறிப்புலம்புவதையுங்கண்ட பாங்கிப் பெண்கள் ஓடோடியுஞ்சென்று, கட்டழகு மகாராஜனைக்கண்டு மருமகனிறந்துவிட்ட சேதியை யோதின வுடனே அரசன் கேட்டு ஓ வென்றலறியெழுந்து ஆ அப்பா ஞானபுரத்துச் சக்ரவர்த்தியே! எனது புதல்வியை நடுவீதியில் விட்டு விட்டுச் சென்று விட்டாயே! ஐயையோ யானென்ன செய்குவேனென்று அரசன் கதறிப்புலம்புஞ்சேதியானது, அரண்மனைக்குள்ளாக விருக்கின்ற இராஜபத்தினியாகிய திட்டவேணியானவள் கேள்விப்பட்டு அடியற்ற விருட்சத்தைப்போலத் திடீரென்று படியின்மீது விழுந்து கட கட வென்று பிரண்டுருண்டு முகத்திலறைந்துக்கொண்டு ஐயையோ மகளே அடியம்மா கற்பகவல்லித்தாயே ஆதரவற்ற அனாதியாகிறாயே! ஆளனை யிழந்துவிட்டாயே! என்று பற்பலவாறாகக் கதறிப்புலம்பிப் பாங்கிகளையழைத்து பல்லக்கைக் கொண்டுவரச்செய்து அதிலமர்ந்து தண்டிகையை யெடுத்துக்கொண்டு தருமக் கோட்டைக்குக்குச்செல்லுங்களென்று திட்டஞ்செய்தவுடனே ஏவற் பெண்கள் பல்லக்கைத் தூக்கிக்கொண்டு கட்டழகு மகாராஜனும் மற்றுமுள்ளோர்களுங் கண்கலக்கங்கொண்டு எல்லோருமாக ஒருங்கு சேர்ந்து தருமகோட்டைக்கு வந்து இறந்திருக்கின்ற அறத்தாள மகாராஜனின் முகத்தைப் பார்த்து கற்பகவல்லியைக்கட்டிக்கொண்டு கூக்குரலிட்டுச் சவத்தைச் சுற்றிலும் எங்கிப்புலம்பிக்கொண்டிருந்தார்கள்.

(கேளீர் சபாநேயர்களே) நமது சக்ரவர்த்தியாகிய அறத்தாள மகாராஜன் இறப்பதற்கு முன்னிரவில் தேவலோகத்தில் இந்திரபூசுரனின் புத்திரியாகிய தேவநாயகமென்னும் பெண்மணியான

வள் சொற்பனங்கண்டு அலறி யெழுந்து அந்தட்சணமே தனது தந்தை துயில் செய்கின்ற அரண்மனை சென்று பிதாவைத்தட்டி யெழுப்பி ஓ வென்றலறி அண்ணு! கேளும் என்னை யருந்தவஞ் செய்து பெற்ற அண்ணலே! எனது நாயகன் ஞானபுரத்தரசனுன வர் இறந்து விட்டதாகக் கனவு கண்டேன் இனிமீது கிமைப் போதேனு மிங்ஙனந் தங்க மாட்டேன். எனது மணவாளனின் ஆவி யைக்கொண்டுபோன கள்ளனை இந்தட்சணத்தில் கண்டதுண்டமாக வெட்டி யெறிந்துவிட்டு எனது பர்த்தாவின் ஆவியைக்கொண்டு வருகின்றேன். ஆகையினாலே எனக்கு உமதுடைய தேரும் சார தியும் மூன்றரைகோடி அரக்கர்ப்படைகளுங் கொடுத்தருள வே ண்டுமையனே யென்று தேவநாயகமேங்கிப் புலம்புவதைப் பிதாவா கிய தேவேந்திர மகாராஜன் கண்டு அம்மா தெய்வநாயகமே! கதறிப் புலம்பி வீணுக அஞ்சுதலைகொள்ளவேண்டாம். உனது மனதினெ ண்ணத்தைப்போலவே சகலமுங் கொடுக்கின்றேன், பெற்றுக்கொ ண்டுபோம் தாயேயென்றுரைத்து திடீரென்று மஞ்சத்தை விட்டி றங்கி வெளியில் வந்து அங்ஙனமிருந்த காவலனையேவி தனது ரதத்தையலங்கரித்து மாதலியையோட்டிக்கொண்டு போகும்படியா கச்செப்பிப் பின்னும் சாரதிக்கு எச்சரிக்கை செய்துவிட்டு அரக் கரின் கோட்டைக்குட் புகுந்து. அரக்கர் சேனுதிபதியைக் கண்டு மூன்றரைகோடிச் சேனைகளை யுத்த கோலமாகவோட்டிக்கொண்டு, அதிக சுருக்காக வரும்படியாய்க் கையுடன் அழைத்துக்கொண்டு வாரும்பிள்ளாய் யென்று தேவேந்திர மகாராஜனுனவர் திருவாய்மலர் ந்தருளினுர்.

அமரர்கோனறைந்த வாக்கியத்தைக் கேட்ட காவலனுனவன், ஓடோடியுஞ் சென்று, சாரதியைக் கண்டு அரசனுரைத்த சேதியை ஆதியோடந்தமாகவோதி எச்சரிக்கை செய்துவிட்டு, அரக்கர் கோட் டைக்குள்ளாகப் புகுந்து, சேனைத்தலைவனைக் கண்டு, வந்தனஞ் செய்து, தேவேந்திர மகாராஜனுரைத்த வுரையையுரைத்து தண்டு தளங்களைக் கூட்டிக்கொண்டு தேவேந்திர மகாராஜன் முன்னிலையில் வந்து, வந்தனஞ் செய்து படைகளைக் காண்பித்துவிட்டு, காவல னுனவன் சென்றதின் பின்பு, வானவர்கோமானுனவர், சாரதியை யழைத்து அப்பா மாதலியே! எனது புதல்வியானவள் சொல்லுஞ் சொல்லைப்போலவே, ரதத்தை நடத்திக்கொண்டு வாரும்பிள்ளாய் யென்று கட்டுதிட்டஞ் செய்துவிட்டு, படைத்தலைவனை யழைத்து, அடேயப்பா! போர்வீரனே கேளும், எனது புதல்வியானவள் எந்த

சொரிந்து புஷ்பவர்ஷையால் எவர்களும் மகிழ்ந்து சேர்ந்து இருந்துவிட்டார்கள் என்று மாதர்களும் வர்ஷையாய்க் கீழ்வீழ்ந்ததைக் கண்டு அதிசயமென்கிற திகைப்பொன்று மாரிபெய்து பார்த்து சற்றுநேரங்கொண்டு பின்னர் தெளிந்து வெண்சாமரங் கொண்டு வீசி கண் தெளிவித்தார்கள். அவர்களும் கண் தெளிந்தெழுந்து கற்பகவல்லியையும் நாகவேணியையும் பார்த்து, தெய்வநாயகங் கூறுகின்றாள்.

கேளீரம்மா தங்கைமார்களே! நாமெல்லோரும் தளங்களைக் கூட்டிக்கொண்டு யமலோகத்திற்குச் சென்று, யமனிடத்தில் சமர் புரிந்து நமது நாயகனின் ஆவியைக் கொண்டுவருவோம், வாருங்கள் அம்மா. நாம் வருமுன்பரியந்தம் நமது நாயகனின் சவத்தை, அழும்புசெய்யாமற் பதனமாக இவனுதானே பார்த்துக் கொள்ளச்சொல். ஒரு நாழிகைக்குள்ளாகச் சென்று ஜயமடைந்து வருவோம் வாருங்கள் தங்கைமார்களே என்று, தேவேந்திரன் புதல்வியாகிய தேவநாயகமோதியருளினாள்

இந்திரன் குமாரியம்பிய மொழியைக் கேட்ட நாகவேணியும், கற்பகவல்லியும், நல்லதென்று சம்மதித்து, வானவர் அரக்கர் படைகளும், நாகலோகச் சர்ப்பபடைகளும், பாம்புப்படைகளும், ஒருங்குகூடி மூன்று பெண்களும் மூன்று தேரிலேறிப் படைகளை பொரித்து நடத்திக்கொண்டு யமலோகத்திற்கு வந்து, போர் பேரிகையறைவித்து வில்லை வளைத்து நாணேற்றிக் கணைகளைத் தொடுத்து யமலோகத்தின்மீது சரமாரியாகப் பொழிந்துகொண்டிருக்கின்றதை, யமதரும மகாராஜனறிந்து சித்திரபுத்திரனை யழைத்து அப்பா மந்திரி! இதுயாரோ வந்து போர்க்கோலங் கொண்டுவந்து இருக்கின்றார்கள். நீ சென்று இன்னதென்றறிந்து வாருமென்று அனுப்பவுடனே, சித்திரபுத்திரனவர் அன்னார் வந்துபார்த்து இன்னதென்று தெரிந்துக்கொண்டு அரசனை நோக்கிக் கூறுகின்றார்.

கேளும் சுவாமி யமதரும மகாராஜனே! இன்றைய காலையில் பட்டாம்புரி பட்டணத்தில் அறுத்தானைக் கொண்டுவந்ததற்காக தேவேந்திரன் புதல்வியும், நாகராஜனின் புதல்வியும் மானிட வேந்தன் மகளும் மனைவிகளாகையினாலே, புருடனை மீட்டுக்கொண்டு போவதற்காக, போர்க்கோலங்கொண்டு வந்திருக்கின்றார்கள். இயமலோகம் அத்தியந்தமும் பாழாய்ப்போகும்போலக் காண்கின்றது. என்

சுவாமி! என்ன யோசிக்கின்றீர்? முன்னதாக நின்று சமர்புரிபவள் தேவேந்திரன் புதல்வி, ஆகையினாலே இன்றோடு எமலோகம் பாழா ய்ப்போய் விடுமென்பதன்று நிர்மாணமாகிவிட்டது. என்ன சுவாமி! சொல்ல சொல்ல மௌனமாக விருக்கின்றீரென்று சித்திரா புத்தி ரருரைத்தருளிய வாக்கியத்தைக்கேட்ட எமதரும மகாராஜன் கூறு கின்றார்.

அப்பா சித்திராபுத்திரனே யான் புகல்வதைச்சற்றே கவன மாய்க் கேட்பாயாக. அஃதென்னவெனில், ஈரேழு பதினாலு உலகங் களிலும் உற்பத்தியாகும் ஆன்மாக்களின் சிரசில் பிரமன் இன்னா ருக்கின்னபடி யென்றும், ஒவ்வொரு ஆன்மாவும் ஜீவந்தராயிருக் கும் வரையில் சிலகாலம் செல்வாதனாகவும், சிலகாலம் தரித்திரவா னாகவும், இருக்கவேண்டுமென்றும், இவ்வளவு காலம் ஜீவந்தரா யிருக்கவேண்டுமென்றும், இத்தனையாவது பிராயத்தில் இந்நோ வேளைக்கு இன்ன காரணத்தினால் உயிர் துறக்கவேண்டுமென்றும், உனக்கு வரைந்து கொடுத்திருப்பதினால், அதே பிரகாரம் ஒவ்வொரு ஆன்மாவின் ஆயுள் பிரமாணத்தின் கணக்கைக்கண்டு, பிரதிதினமும் என்னிடம் முறையிட என் பணியாட்களாகிய தூதுவர்களைக் கொ ண்டு ஒவ்வொரு ஆன்மாவின் உயிரைக்கவர்ந்து கொண்டுவரும்படி யான் ஆக்ஞாபிக்க, அவ்வாறே அத்தூதுவர்கள் ஓடோடியுஞ் சென்று எவன் உயிரை எக்காரணத்தினாற் பெறவேண்டுமோ, அன் னோன் உயிரை அக்காரணத்தினாற் பெறலாமென்று யூகித்தறிந்து, என் மீதும் அத்தூதுவர் மீதும் ஓர் பழியுமின்றி, மிருத்யு தேவ தையைக்கொண்டே அவ்வான்மாக்களின் உயிரைச் சுலபமாகப் பெ றுதல் நமக்குப் பணித் தொழிலாயிருக்கின்றது. ஆதலால் நாம் கூலிக்கு வேலை புரியும் குற்றேவற்காரர். அயன் ஆன்மாவையும் தா ணியில் உற்பவிக்கும்பொழுதே ஆயுட்பிரமாணம் ஏற்படுத்தி, அவ் வேற்பாட்டின் சீட்டை நம்மிடத்தில் தந்திருக்கிற பிரகாரம் பட்சா பாதமின்றி, அவ்வான்மாக்களின் உயிரைக்கொணர்ந்து, அவரவர் கள் செய்திருக்கும்படியான பாப புண்ணியங்களுக்குத் தகுந்த வாறு தீர்மானித்து, சுவர்க்கத்திற் சேர்ப்பவர்களைச் சுவர்க்கத்திற் சேர்ப்பதும், நரகத்திற் சேர்ப்பவர்களை நரகத்திற் சேர்ப்பதும் நம்முடைய தொழிலாக இருக்கிறது, இவ்வாறிருக்க இவ்வீரேழு பதினாலு உலகங்களிலுமுள்ள சர்வ ஆன்மாக்களுக்கும் இவ் வுண்மை விசிதமாய்த் தெரிந்திருக்க, இப்போது தேவேந்திரன் மகள் தன் புருடனின் உயிரைப்பெறுவதற்காக நடைவீரர்களும்,

ப்படைவீரர்களும், கொடிவீரர்களும், ரதகஜதுரகபதாதிகளையுஞ் சேர்த்துக்கொண்டு வந்தால் நாம் அஞ்சுவமோ? இந்த எமபுரம் எள்ளளவு பிரமாணமேனும் அசையுமோ? ஏமது எஜமானாகிய கருணாகரக்கடவுளாகிய உலகமாதாவாகியும் உமாமஹேஸ்வரியை வாமபாகத்திலமர்த்தி வீற்றிராநின்ற பயமின்மை, இரவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, ஒரு வினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை, முதலான எண் குணங்களையுடைய, திரிநேத்திரதாரியாகிய உமாமஹேஸ்வரன் ரிடபவாகனரூடராய் பஞ்சாயுதமேந்தி நம்மை யெதிர்த்து தேவேந்திரன் புத்திரியின் மணாளனாகிய அறத்தாள மகாராஜனின் உயிரைக்கொடுத்துவிடு என்று என்னை ஆக்ஞாபிக்க என்னஹேது உண்டு. அவ்வாறு அறத்தாளமகாராஜனின் பிராணனைக்கொடுத்துவிடு என்று புகலும் பக்ஷத்தில், இந்த அலுவல் நமக்கு வேண்டாம். அந்தட்சணமே இராஜிநாமா கொடுத்தவிட வேண்டியதுதான். ஏனெனில் சர்வேஸ்வரனே ஒவ்வொரு ஆன்மாவுக்கும் ஆயுள் பிரமாணம் ஏற்படுத்திவிட்டுப், பின்னர் தானே ஓர் ஆன்மாவின் உயிரைக்கொடுக்கும்படி போர் புரிதல் நலமோ ஆதலால் இத்தொழில் புரிவதே நமக்குத் தகுதியன்று. என்று சித்திராபுத்திரனிடத்திற் சொல்லிக்கொண்டே யிருக்கும்பொழுது, பட்டாம்புரி யென்னும் பட்டணத்தை யாளப்பட்ட கட்டழகு மகாராஜனின் புதல்வியாகிய கற்பகவல்லி யம்மாளும், தேவேந்திரன் மகளும், நாகராஜன் மகளும், ஆகிய இம்மூவரும் தங்கடங்கட்குரிய கொடிவீரர்களையும் ரதகஜதுரகபதாதிகளையும் சேர்த்து போர்க்கோலங்கொண்டு மூவரும் தளகர்த்தர்களாகி, சேனைகளை நடாத்திக்கொண்டு எமபுரத்தை நெருங்கி வருகும்போது, எமபுரம் ஆத்யந்தமும் போர்க்குரிய மேளதாளங்கள் ஆரவாரிக்க, ஆங்குள்ள எமபடாக்களனைவரும், மூன்று ஸ்திரீகள் தளகர்த்தர்களாக ஏற்பட்டு தண்டு தளங்களை நடாத்திக்கொண்டு வரும் ஒழுங்கினைக்கண்டு நடு நடுங்கி இயமதருமராஜனிடம் முறையிட்டுக்கொண்டனர்.

உடனே, இயமதருமராஜன் சில தூதுவரை யனுப்பி இவ்வளவு ஆடம்பரத்தோடு வருபவர்கள் யாரென்றும், இயாதுகாரணமாக இவ்வெமபுரம் நோக்கி வருகின்றாரென்றும் தெரிந்துக்கொண்டுவரும்படி உத்தரவளித்தவுடனே, சிலதூதுவர்கள்வருபவர்களை எதிர் கொண்டு சென்று அம்மா நீங்கள் ? எத்தேயம் ? யாது காரணமாக இங்கு வந்தீர்களெனத் தூதுவர் கேட்கும்போது கற்பக

வல்லியம்மாளும் தேவேந்திரன் புதல்வியும், நாகராஜன் புதல்வியும்; அதிக கோபாக்கினியுடன் எமது நாயகன் உயிரை எவ்வாறு உங்கள் எஜமானாகிய இயமதருமராஜன் கொணர்ந்துவந்தார். நாங்கள் எட்டு பிராயமுதல் முப்பத்திரண்டு தருமங்கள் வழுவின்றி இடையறாது புரிந்தும், சோமவாரவிரதம் முதலிய எண்ணிறந்த விரதங்கள் அநுஷ்டித்து வந்தும். எமது நாயகனுயிரைக் கொண்டுவந்ததைக் குறித்து இத்தேவர்கள் இந்தத்தெய்வலோகத்தில் இந்நீதி கேட்பாரில்லையோ, இலட்சுமியை மார்பினிடமாக அமைத்திருக்கும் திருமாலில்லையோ, அடியார்களைக் காத்து ரட்சிக்கும் அரவாபரணனில்லையோ, யாங்கள் யாரோடு புகன்று முறையிடுவோம் ஆகையால் நேரில் உங்களை எஜமானிடத்திலேயே போர்புரிய வந்தோம். நியாயமாக எமது கணவன் உயிரை விடுத்தாலாயிற்று. இல்லாவிடில் எமபுரம் அதோகதியாக அமளி குமளியாகிவிடுமென்று உங்கள் எஜமானனுக்குத் தெளிவாகத் தெரியப்படுத்தி, எமது கணவனுயிரைச் சீக்கிரம் விடும்படியாச் சொல்லுங்களென்று தூதுவரிடம் கூறினார்கள்.

இவற்றைக் கேட்டுக்கொண்ட தூதுவர்கள் விரைவாக ஓடோயுஞ் சென்று இயமதருமராஜாவைக் கண்டு பட்டாம்புரி என்னும் பட்டணத்தை யாளப்பட்ட கட்டழகு மகாராஜாவின் குமாரத்தியாகிய கற்பகவல்லியம்மாளின் கணவனது உயிரைத்தாங்கள் கொண்டுவந்ததற்காகத், தனது தந்தையின் பரிவாரங்களை நடாத்திக்கொண்டு போர்க்கோலமாகி வந்தனளென்றும், இந்தக் கற்பகவல்லியம்மாளை விவாகம் புரியாததற்கு முந்தியே தேவேந்திரன் புத்திரிக்கும் நாகராஜன் புத்திரிக்கும் கற்பகவல்லியம்மாளை மணம்புரிந்தபின்பு, மேற்கண்ட தேவேந்திரன் புதல்வியையும் நாகராஜன் புதல்வியையும் மணம் புரிவதாக கற்பகவல்லியம்மாளின் கணவனாகிய அறத்தாள மகாராஜன் வாக்குத்தத்தம் செய்து விட்டு வந்தபின்பு, கற்பகவல்லியம்மாளை மணம்புரிந்த பதினோராமாதமே, அப்புருடனுடைய உயிரைத் தாங்கள் கொள்ளை கொண்டதினால், அத்தேவேந்திரன் புதல்வியும் நாகராஜன் புதல்வியும் ஆகிய மூவரும் ஏகோபித்துத் தங்கள் மீது போர்க்கோலங் கொண்டுவந்து அவர்களது கணவனாகிய அறதாள மகாராஜனின் உயிரைவிடுக்கும்படி முறையிடுகின்றனர். அவ்வாறு உயிரைக்கொடாவிடில் போர்புரிவதே நலமென உத்தேசித்து வந்திருக்கிறார்களரசே என்று தூதுவர் சொன்னதைக் கேட்ட தென்றிசைக்கோன் ஏளனமாக நகைக்கலுற்றனர்.

அடா தூதுவர்களே! இங்ஙனம் திரண்ட சேனைகளுடன் வந்த மூன்று பெண்பாலருள் ஒவ்வொருவரும் எவ்வளவு உயர்ந்த அந்த ஸ்திரீரத்தினமாயிருந்தாலென்ன, தபோதனமகரிஷிகளின் புத்திரியாக இருந்தாலென்ன, மகாலட்சுமியின் வரப்பிரசாதத்தினுற்பவித்த குமரியாயிருந்தாலென்ன, யாவராயிருந்தபோதிலும் அவரவர்க்கு ஏற்படுத்திய ஆயுட்பிரமாணத்தின் பிரகாரந்தானே அவ்வவ்வான்மாக்களின் உயிரை வருடம், மாதம், தேதி நாழிகை, நிமிஷக் கணக்காகத்தானே உயிரைக் கொண்டுவரப்போகிறோம். இல்லாமல் அவரவர் ஆயுட்பிரமாணத்திற்கு முந்தியாகிலும் பிந்தியாகிலும் ஏன் கொண்டு வரப்போகிறோம். இப்பேர்ப்பட்டவர்கள் ஆயிரங் கணக்காக அனேகர் வந்தாலும் யாம் அஞ்சோம். நீங்களும் அஞ்சவேண்டாமென்று, தென்றிசைக்கோன் தூதுவரிடஞ் சொல்லிக் கொண்டிருக்கும்போது, சிறிதேனுந் தாமதியாமல் கற்பக வல்லியம்மாளும், தேவேந்திரன் புதல்வியும், நாகராஜன் புதல்வியுமாக மூவரும் எமகாபிந்து காலனைக்கண்டு, ஓ இயமதருமராஜாவே! எங்கள் மூவருக்கும் ஏகபர்த்தாவாகிய அறத்தாளமகாராஜாவின் பிராணனை நாங்களறியாமல் எவ்வாறு கொணர்ந்து வந்தீர்? ஒரு நாளேனும் அவர் பக்கல் படுத்து அயர்ந்து நித்திரை புரியவில்லையே. எங்களைப்போல் உனக்கும் பெண்களிருந்து அவர்கட்கு இவ்வளவு சீக்கிரத்தில வைதவ்யமடைவதாயிருந்தால் நீர் மனம் பொறுப்பீரா? எப்பேர்ப்பட்ட ஆறாத்துயரத்தில் ஆழ்ந்து கிடப்பீர். கிஞ்சித்தும் மனவிரக்கமில்லை, மக்களைப் பெறுமலடியா? மாசற்ற நெஞ்சோடு இம்மாபாதகத் தொழில் புரிவது உமக்கு நீதிதானோ? கற்பகவல்லியம்மாள் இளம்பிராயந்தொடங்கி நடாத்திக் கொண்டுவந்த முப்பத்திரண்டு அறத்தின் பலன் என்ன வீண்போகுமா? தான் அநுஷ்டித்துவந்த சோமவார விரதத்தின் பலன்தான் என்ன வீண்போகுமா? இவைகளெல்லாம் அறியாமல் வீணில் அவமானப்படப் போகிறீர். வேண்டாம் விட்டுவிடுமென்று தேவேந்திரன் புதல்வியும் நாகராஜன் புதல்வியும் புகலவே, தென்றிசைக்கோனாகிய இயமதருமராஜன் செவியில் நாராசங்காய்ச்சி ஊற்றியது போலிருந்தது. இருகண்களுங் கோவைப்பழம்போற் சிவந்து கோபாக்கிரந்தனாய் நிலத்தனைப் பலமுறை ஓங்கியுதைத்து அடடா! என்ன கூறினீர்கள். சபாஷ் நன்றாயிருக்கிறது. ஆனால் நீங்களோ பெண்பாலர். நீங்களனைவரும ஆண்பாலராக விருக்கில் உங்களோடு போர்புரிவது யுக்தம். உங்களுடன் போர்புரிவது அயுக்தமாகும். ஆயினும்

என் முன் நில்லாதீர்கள், உங்கள். ஜபதபங்கள் என் முன் ஒன்றுஞ் செல்லாது. நீங்கள் யாரை நோக்கித் தவப்புரிந்தீர்களோ! அவரிடம் விண்ணப்பஞ் செய்துக்கொள்ளுங்கள் என்று பற்பல விதத்திலும் நன்மையாகப் புகன்றும் எதையும் செவியிலேற்றுக் கொள்ளாமல், தாங்கள் கொண்ட கருத்தையே முடிக்கவேண்டு மென்கிற எண்ண முடையவர்களாய் யுத்தசன்னத்தராய் சண்டன்மீது சமர்புரியத் தொடங்கினர். அதுகண்ட தென்றிசைக் கோனானவர்,

"மாதர்க்கிதங் கவிவாணர்க்குச் சாலவணக்கங்குரு
நாதர்க்கு நீதியோடாசார நண்பினயந்தவர்க்குக்
கோதறறவாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டிப் பறிவுடையோர்,செய்யுமாண்மைகளே."

என்றவாறு இவர்கள் மாதர்களாயிருப்பதினால் இவர்கட்கு இதமாகப் புகன்றும் கேளாமல் கொடூரத் தன்மையே குடிகொண்டிருந்ததால் நாமுங் கொடூரத்தன்மையையே கொள்ளவேண்டு மென்று, தன் எமபடாக்களையேவி, அடா தூதுவர்களே இம்மூவரையும் எமபுரத்தெல்லை விட்டோடும்படி, அவர்கள் மீது காயம்படாமலே ஓட்டிவிட்டு வாருங்களடா தூதுவர்களே யென்று, மறலி ஆக்ஞாபித்தவுடன், தூதுவர்கள் கற்பகவல்லியம்மாளையும், தேவேந்திரன் புதல்வியாகிய தெய்வநாயகத்தையும், நாகராஜன் புதல்வியாகிய நாகவேணியையும், ஓடோடியும் துரத்தித் துரத்தி எங்கும்தங்கவொட்டாமல், எமபுரத்தெல்லைக்கு வெளியிலோட்டிவிட்டு, நீங்கள் எமபுரம் வந்ததற்கு உங்களை அக்கணமே தூதுவரைவிட்டு நரகக்குழியிற் றள்ளி எங்கள் எஜமானன் வதைத்திடுவர். ஆனால் இயாதோ தெரியவில்லை பெண்பாலராயிற்றே யெனச்சிறிது இரக்கமுடையவராய், உங்களை மன்னித்து விட்டு விட்டதே நீங்கள் பூர்வஜென்மத்தில் செய்தபுண்ணிய பலனாகுமென்று சொல்லித் துரத்திவிட்டு, எமபுரந்திரும்பித் தங்கள் எஜமானனைக் கண்டு வந்தனம் புரிந்து அம்மூவரையும் எமபுரத்தெல்லையை விட்டப்புறம் துரத்திவிட்டு வந்த சமாசாரத்தை அறிவித்து எஜமானிடம் உத்திரவுபெற்று தங்கள் தமதிருப்பிடம் போய்ச் சேர்ந்தனர்.

இவ்வாறு காலனது தூதுவராற் றுரத்தப்பட்ட மூவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து அதிக துக்காக்கிராந்தராய் அடி தமக்கையே! அடி தங்கையே! நாம் மூவரும் முந்திய ஜன்மத்தில் இயாது பாவம் புரிந்தனமோ தெரியவில்லை. இச்சென்மத்தில்

ளாம் இவ்வாறு மாங்கல்ய மிழந்தும் துன்பப்படலாயிற்றே. அல்லது நம் முன்னோர்கள் புரிந்த வினையின் கூற்றோ! நான் இளம் பிராயத்திலேயே பூர்வ ஜன்மத்திற் புரிந்த புண்ணியவசத்தினாலோ அல்லது என் முன்னோர்கள் புரிந்த தவப்பயனினாலோ, அறம் புரியுஞ் சிந்தையுடையவளாய் நாற்றுறு வாயற்படியுள்ள ஓர் தருமக்கோட்டை என் தந்தையாற் கட்டுவிக்கச் செய்து, ஆங்கு வந்து தருமம் கேட்பவர் எவ்வகையான தருமம்கேட்டபோதிலும் இல்லையென்னாமல், அவரவர் மனோபீஷ்டப் படியே குறைவின்றி முப்பத்திரண்டு தருமம் புரிந்து வந்தும், நாற்றெட்டு சோமவார விரதம் அனுஷ்டித்து வந்தும் யாது பலன் கண்டேனென்று, கற்பகவல்லியம்மாள் சொல்லி முடித்தவுடன், தேவேந்திரன் புதல்வியும் நாகராஜன் புதல்வியும் தங்களுக்குண்டாகிய குறைகளைத் தனித்தனியே விளம்ப ஆரம்பித்தனர். அவை யாவெனில், அடியம்மா கட்டழகு மகாராஜன் பெற்றெடுத்த கற்பகவல்லித்தாயே! நீயாகிலும் மன்னவரை மணம்புரிந்து பதினொருமாத காலமாக மன்மதனும் ரதியும்போல சகலவித லீலைகள் புரிந்து, இன்பசுகானுபவங்களை யெல்லாம் இருவரும் ஓர் படுக்கையிற்றுயின்று, விரகதாபங்களனைத்தையும் தீர்த்துக்கொண்டனை, யாங்களோ சொன்னமொழி தவறாமற் சூதாய் நடக்காத அறத்தாள மகாராஜன் வருவார் வருவாரென்று எதிர் பார்த்திருந்து காலங்கழித்தோமேயன்றி, ஓர் நாளேனும் அவருடன் சரசவார்த்தைகளாடி இன்பசுகானுபவங்களைச் சுகிக்காமல் வீணுக்குப்பேர் பெற்று, வெட்டிக்கு அறக்கவந்தோமே யொழிய வேறோர் சுகத்தைக் காண்கிலம். ஆயினுஞ் நீ புரிந்த தர்ம பிரபல்யத்தினாலாகிலும், நீ அனுஷ்டித்த சோமவார விரதத்தின் பலனாலாகிலும் எவ்வாறேனும் நமது பர்த்தாவை உயிர்ப்பித்துக் கொணர்ந்து வருவையேயாமாயின், அதுவே எங்கட்குப்போதுமான குதூகலமானதால், நீ கைலாயஞ்சென்று பரமசிவத்தைக் கண்டு, கணவனைக்கொண்டு வருவாய். அது வரையில் இங்ஙனமே தான் நாங்களிருப்போம். இவ்விடம் விட்டுப்போகோம் அம்மணி கற்பகவல்லித்தாயே என்று தேவேந்திரன் புதல்வியும் நாகராஜன் புதல்வியும் முறையிட்டு முடித்தனர்

இவ்வாறவ்விருவரும் முறையிட்டுக்கொண்ட பின்னர், கற்பகவல்லியம்மாள் சிறிது ஆலோசிக்கத்தொடங்கினள். ஆ! ஹா! இதென்ன விபரீதம் ஒரு கை தட்டினால் ஓசை கிளம்புமா? பலகை தட்டினால் ஓசை கிளம்புமா? இருவரும் கலந்து கொண்டு என்னை

முன்னே தள்ளிவிட்டு, பின்னே வேடிக்கை பார்க்க இருக்கிறார்களா? தேவர்களுக்கெல்லாம் அதிபதியாய் நின்ற தேவேந்திரனது புதல்வியாயிருந்துஞ் சமயத்தில் சமருக்குப் பின் வாங்கினளல்லவா? நாகலோகத்திற்கு அதிபதியாயிருக்கும் மகாராஜாவின் புத்திரியாயிருப்பதுமன்றி தன் வம்சத்தார் அனைவரும் சாக்ஷாத் பரமசிவத்திற்கு ஆபரணங்களாக இருப்பதனால், அப்பரமசிவமே இவட்கு அத்யந்த பிரீதியுடையவராக இருப்பரென்பதைத் தானறிந்தவளாயிருந்தும் சமருக்குப் பின் வாங்கினளல்லவா? இருவருஞ்சேர்ந்து என்னைத் தனியே விட்டு விட்டார்களல்லவா? நல்லதிருக்கட்டும் அவ்வாறே அவர்களது அபீஷ்டப்படியே பரமசிவனிடத்திற்கு நாம் செல்லவேண்டியது நமது தலைவிதியாயிருக்கிறதென்று, தனக்குள் தானே நிர்மாணித்துக்கொண்டு கருணாகரக்கடவுள் வீற்றிருக்கின்ற கைலயங்கிரிக்கு நாம் செல்லவேண்டியது முக்கியமானதுதானென்றுறுதிகொண்டவளாய், தேவேந்திரன் புதல்வியினிடத்திலும் நாகராஜன் புதல்வியிடத்திலும் நான் கைலைக்குச்சென்று திரிநேத்திரதாரியாகிய பரமசிவத்தைக் கண்டு நமது பர்த்தாவைக்கொண்டு வரும்படியான மார்க்கம் புரிந்து, திருமாங்கல்யப்பிச்சை பெற்று வருகிறேனென்று, மிகுந்த உபசார வார்த்தைகளாய்ச்சொல்லி நான் வருகிற பரியந்தம் இங்ஙனமே நீங்களிருவரும் இருங்களெனப் புகன்றதும், அவ்விருவர்க்கும் ஆறாத்துயரம் மேலிட்டு நாங்கள் ஜனன மெடுத்தது முதல் அனேக பிரஜைகளுடன் ஆடல்பாடல்களுடன் விளையாடிக்கொண்டு காலங்கழித்ததுபோய், இக்கணம் யாதொரு பிரஜையுமில்லா இவ்வடவியிலிருக்கும்படி பிரமன் எங்கள் தலையிலெழுதினனோ? இல்லாவிடில் கைக்கெட்டினது வாய்க்கெட்டாமற் போய்விடுமா "தன்னையே நோவனே பிறரையே நோவனே. தற்காலமதை நோவனே" என்கிற பிரகாரம் ஒருவரை வெறுப்பதிற் பயனில்லை, நாம் பூர்வ ஜன்மத்திற் புரிந்த புண்ணியபலன் அவ்வளவு தானுக்கும். அது தான் எங்கிருந்தவர்களோ எங்களழைத்துக்கொண்டு வந்து விட்டது? நாம் இக்கானகத்தில் இக்காலத்தில் இங்ஙனம் வந்து பர்த்தாவையு மிழந்து இவ்வாறு தவிக்கப்போகிறோ மென்று எள்ளளவேனும் சொப்பனத்திலாகிலுங் கண்டோமா? எல்லாஞ் சிவன் செயலே யன்றி நம்மாலாவது யாதொன்றுமில்லை என்று பலவாறு துக்கித்து மறுபடியும் தங்களுக்குத் தாங்களே திருப்தியடைந்தவர்களாய், அம்பணி கற்பகவல்லித்தாயே! உன் சொற்படியே நாங்கள் இங்ஙனமே இருக்கின்றோம்

ஆனல் நீயும் நமது பர்த்தாவாகிய அரக்கர்கள மகாராஜனாக இங்ஙனம் வருகிறபடியாக்கும் அன்னவாறு நினையா திருந்தோம். இங்ஙனமுள்ள காய்கனி சருகுகளைப் புசித்து காலங்கழிப்பதுமன்றி, ஆனந்தமான பராபரத்தின் அருளைப்பெற்று எங்ஙனம் வரப்போகிறுயென்று எதிர்பார்த்துக்கொண்டு நாங்களும் இங்ஙனம் இருந்தபடியே அந்தத் திரிபுரமெரித்த திரிநேத்திரதாரியாகிய பார்வதி பரமேஸ்வரனை இடைவிடாது தொழுதுகொண் டிருக்கின்ருேம். ஆயினும் நாங்கள் உனக்குச் செய்வதொன்றிருக்கிறது. அதென்னவெனில் நீ கைலைபங்கிரிக்குச் சென்று கைலைபங்கிரியில் பார்வதிபரமேஸ்வரன் வீற்றிராநின்ற திருக்கைலாயசந்நிதியின் வாசற்படியில் இரண்டு துவாரபாலகர்கள் இருப்பர். அவர்களை நமஸ்கரித்து உத்தரவு பெற்றபின்பு அதிகார நந்தி இருப்பர். அவரது உத்தரவில்லாமல் ஒருவரும் உள்ளே செல்லப்படாது. ஆகையால் இவைகளையெல்லாம் நன்ருய்க் கவனித்து அவரவர்க்குத் தக்கபடி நடந்துகொண்டு, பின்னர் பரமேஸ்வரனைக் கண்டு தொழுது நம்குறைகளையிரந்து வேண்டுவன வற்றைப் பெற்றுவரக் கடவாய். கற்பகவல்லித்தாயே. என்று தேவேந்திரன் புதல்வியும் நாகராஜன் புதல்வியும் புகன்றனர்.

இவ்வாறு அவ்விருவருஞ் செப்பியவாறு காடு, கானகம், ஆறு, காணறு, நதி, மலை, முதலிய யாவற்றையுங் கடந்து பொன்மலையாகிய இமயமலையி னிடத்து, வெள்ளிமலையாகிய திருக்கயிலை வெள்ளிய விபூதியை அணிந்தாற்போல நூல்களாற் சிறப்பித்துக் கூறும் நீண்ட இமயமலையின் பக்கத்திலுள்ள திருக்கயிலை தன்னியல்பை அன்பரன்றி எவ்வகையார்க்கும் அறிதற்கரிய சிவபிரான் எந்நாளும் நிலைபெற்று வீற்றிருந்தும் பெருமை பொருந்திய திருக்கைலாயமலையானது தன் கண் வாழும் மனிதர்க்குக் கிருதயுகம் முதல் நான்குயுகங்களினும் அறிவு, வலிமை, ஆயுள், அழகு, சரீரம் முதலியவற்றை முன்யுகம்போலாது மற்றையுகங்கட்கு வேறுபடக் கொடுப்பதாய், வேறு வேறு சாதிகளை உடைத்தாயிருக்கும் கன்மபூமியென்னும் இப்பரதகண்டத்தின் எல்லையாகிய பாரதவருடத்தில் கிழக்குமேற்குச் சமுத்திரங்களைப் பொருந்திப் பூமிக்களவுபோல் போன்று, ஒன்பதினுயிரம் யோசனை நீட்சியுடைப்பதாய் பனிமயமாய் இருக்கும் இவற்றின் வடகீழ்பாலில் பாதுகாஞ்சன், சிந்தாமணி முதலிய சித்திரப்பொருள்களையும் அடைந்தார்க்குப் பயம், பகை, அவமிருத்து இவைகளை நீக்கிப் பிறவாமற்செய்யும் விசேஷங்களை

யும் உடைய எல்லைக்கண் அமர்ந்திருக்கும் திருக்கயிலையின் படிகம் போலும், வெள்ளிய சோதி சொரூபத்தில் மேருவின்கணுள்ள சோதிட் சமென்னும் சிரத்திலும், மிக்க பிரியத்தால் இமயான் செய்த பெருந்தவங்களையும், உமாதேவியார்க்குத் தந்தையென்னும் முறையால், மாதுலனெனக் கொண்ட பெருங்கருணையினாலும் சித்தர், காந்தருவர், கின்னரர், கிம்புருடர், கருடர், எக்கரானுஞ் சேவை செய்யவும், உருத்திரர்கட்கும், பிரம விஷ்ணு முதலிய தேவர்கட்கும், நியாமகராய் நந்தி முதலிய கணநாதர்களும், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர ரிஷிகளும், முனிகணங்களுந் தம்மைச் சேவிக்கக் காட்சிகொடுத்து, மணிமயமான திருக்கோயிலில் இரத்தின சிம்மாசனத்தில் உலகமாதாவாகிய உமாதேவியாருடன் சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கைலாயமலையை நோக்கிக் கற்பகவல்லியம்மாள் நெருங்கிச் செல்லும்போது, மேன்மைபொருந்திய நான்கு வேதங்களின் ஓசையும், விஞ்சையர் கானவீன ஓசையும், மேகத்தோடு மாறாக மதம் பொழிகின்ற யானைகளின் முழக்கொலியும், குறைவற்ற சிறப்பினையுடைய தேவதுந்துபிகளின் ஆரவாரமும் கேட்கின்றன. குளிர்ச்சிபொருந்திய விண்ணுலகின் கண் வாழும் தேவர்கள் வணங்கிச் சூழ்ந்து நிற்கும் அளவிறந்த அழகியமுடிவரிசையும், அத்தேவர் முடிமேற்றொங்கும் பரிசுத்தமான கற்பக விருட்சத்தின் மலரால் தொகுக்கப்பட்ட பொன்னரிமாலைகளும், முனிவர்கள் அஞ்சலியாகக் குவித்த கைகளின் வரிசையும் உயர்ந்த தேவர்கள் வாழும் பதங்களும், விருப்பினால் அறியத் தக்க பஞ்சமாபூதங்களையும் உண்டாக்கவல்லன. அனேக கோடி குறள் வடிவினையுடைய சிறிய பூதங்கள், பாடிக் கூத்தாடுவதையுங் கண்டனள்.

அதன் பின்னர் தெய்வப் பெண்கள் நிருத்தஞ் செய்யுங்கால் அதற்கேற்ப ஒலிக்கும் மத்தள ஓசையும், அம்மலை யருகிலுள்ள அருவிகளும் ஒன்றோடொன்று மாறுபட்டு ஒலிக்கும்படி சிவபிரானிடத்து வரத்தைத் தாம் பெறவேண்டுமென்கிற ஆசையுடைய மனத்தோடு கற்பகத்தருவின்தேன் பொருந்திய பூக்களை இருகரத்துந் தாங்கிக் கொண்டு இடையுடின்றி நெருங்கிய, மலையடிவாரத்திலிருந்து ஏறும்வழிகளில் அலங்காரமாய்க் கட்டிவிட்டிருக்கும் சிறிய விமானங்களின் கீழுள்ளபடி யென்னும் மிக்குயர்ந்த வழியால் ஏறிச் சென்று, இந்திரன் முதலிய தேவர்கள் துதிக்கும்படி பொலிவடைந்துள்ளதைக் கண்டு ஆச்சரியமுடையவளாய், தலைவரும் முதற்கட

வுருமாகிய சிவபிரானது திருக்கோயிலுக்குக் காக்குந் தன்மை பூண்ட திருநந்திதேவரைக்கண்டு, அவர் திருவடியை வணங்கி நமஸ்கரித்தவுடன், திருநந்திதேவர் கையிற் பிரம்பு தாங்கின வண்ணமாய் அம்மையே நீயார்? நீ இப்போது யாது காரணமாக இங்குவந்தனை? என்று வினவினர். அதற்கு கற்பகவல்லியம்மாள் அடிபணிந்து தெண்டனிட்டு சுவாமி அடியாள் பூலோகத்தில் ஐம்பத்தைந்து தேயத்தையும் ஒரு குடையிலரசாண்டு, குடிகளிடம் ஆறிலொருகடமை வாங்கி நீதி தவறாமல் தன் மனைவியுடன் வாழ்ந்துவருநாளில், நெடுங்காலம் புத்திரப்பேறின்றி மனோவியாகூலப்பட்டிருக்கும் நாளில், ஓர் சந்நியாசி ஆங்கு வந்து ஓர் மாதுளங் கனிகொடுக்கவும், அதை என்னன்னையுந் தந்தையும் புசித்தபின் யான் உதித்தனன். அடியாளுக்கு வயது வந்து பருவ பக்குவமடைந்து புட்பவதியானவுடனே என் தந்தை சொக்கலிங்கசாஸ்திரியாரைக் கொண்டு ஜாதகங் கணிக்கச் சொன்னதில், அவர் கணித்து சுவாமி அரசே! தங்கள் குமாரத்தி புட்பவதியானதினம் ஆகாததினம், அஸ்த நக்ஷத்திரங் கூடிய நவமிதிதியில் புட்பவதியானதால், ஆறாமாதத்தில் அன்னையையிழப்பாளென்றும், ஒரு சக்ரவர்த்தி புத்திரனை மணம்புரிந்த பதினோராமாதத்தில் திருமாங்கல்யம் இழந்து வைதவ்யம் நேரிடுமென்றும் புகன்றதன் பின் அதவிசனமுற்றனர். அதை என்னன்னை யறிந்து என்னிடம் தெரிவிக்க அடியாள் எனது குலகுருவைப் பணிந்து சோமவார விரதத்தை அநுஷ்டித்து முடிவு பெற்று சடாமகுடதாரியாகிய திருநீலகண்டப் பெருமான் பார்வதி சமேதராய் பிரசன்னமாகி திருமாங்கல்யப் பிச்சை தந்தும், எனக்கு வைதவ்யம் வந்து நேரிட்டு விட்ட விஷயத்தைப்பற்றி, அடியார்க்கருள் செய்யும் அம்பலவாணரிடம் விண்ணப்பஞ் செய்துகொள்ள வந்தனன் சுவாமி. அடியாள்மீது தயைபுரிந்து உட்செல்லும்படி உத்தரவளிக்கக் கேட்டுக் கொள்ளுகின்றேன் சுவாமி என்று வினவியவுடன் திருநந்திதேவர் மனமகிழ்ந்தவராய் உட்செல்லும்படி உத்தரவளித்தனர்.

நெற்றிக்கண்ணை யுடையவரும் நான்கு பெரிய திருப்புயங்களை யுடையவரும், விபூதியையணிந்த திருமேனியையுடையவருமாய் எண்ணிறந்த இடபத்தை வாகனமாகக் கொண்ட சிவபிரானடியவர்களும், அச்சிவபிரானது திருவருளைப் பெற்றவர்களுமாகிய அவர்கட்கெல்லாம் முதன்மையாய் இருக்கும் பள்ளிவிடையையும், செந்தாமரை மலர்போலுந் திருக்கரத்தில் உடைவாளையும் பிரம்பையும், நீண்ட சடைமுடியையுடைய சிவபிரான் திருவருளினால்

ஆகையா லெங்கள் தமுன் அடியாள் குறை யிரப்ப
வாமபா கத்தாரே வஞ்சக மறலியை
இங்ஙனமழைப்பித் தென்கணவ னுயிரை
உங்கள் முன் பாக உண்மையாய்க் கொணர்ந்து
தரும்படிச் செய்வீர் தயாபரா சரணம்
தாளூர யணிமகிழ் தாண்டவா சரணம்.

இவ்வாறு சந்நிதிமுன் இம்மங்கைசொல்லிக் கண்ணீர் தாரை தாரையாய் விட்டுப் புலம்பிக்கொண்டிருக்கும் வனிதையை உமையம்மை பரமசிவத்தை நோக்கிச் சுவாமி! இங்ஙனம் புலம்பும் மங்கை யாரெனில் பெண்மணி பார்வதி, அம்மங்கை பட்டாம்புரி யென்னும் பட்டணத்தை யாளாநின்ற கட்டமுது மகாராஜாவின் புத்திரி. இம் மங்கையோ எட்டு வயதிலேயே திருக்காஞ்சிபுரத்தி லியற்றிய முப்பத்திரண்டறங்களும் புரிந்து வந்தவள். நாற்றெட்டு சோமவாரங்களும் தன் குலகுருவைத் தன்னருகில் அமர்த்திக்கொண்டு, முறைப்படி கிரமம் தவறாமல் விரதம் அனுஷ்டித்தவள். அந்த நாற்றெட்டா நாள் நாமிருவரும் சென்றுதரிசனந்தந்து திருமாங்கல்ய பிச்சை தர வைதவ்யத்தை போக்கிக்கொண்டவள். பூவுலகின்கண் இப்புண்ணியவதியைப் போல் கற்பு நிலையில் நின்றவள் ஒருவருமில்லை. கற்பு நிலையைக்காத்தவள் தெய்வபக்தி, புருடபக்தி, புருஷவிசுவாசம், கணவன் சொற்கடவாதவள் இப்பேர்ப்பட்டவளாது கணவனின் ஆயுள் முடிவாகி இயமனால் உயிர் கொண்டு போகப்பட்டதால், தனக்கு வைதவ்யம் நேரிட்டிருப்பதைப்பற்றி, முறையிட வந்தவளென்று ஜெகதீசன் விளம்பவே, உமையம்மையும உளமகிழ்ந்தவளாய் இப்பெண்ணரசியைப் பார்த்தால் இளம் பிராயமாகவும், கற்புநிலையில் நின்றவளாகவுந் தோற்றப்படுகிறது. மேலும் எப்பொழுது சோமவார விரதம் விடாது அனுஷ்டித்தனளோ அவட்குத் தாங்கள் திருமாங்கல்ய பிச்சை தந்து கிருபைசெய்யவேண்டியது உசிதமேயென்று உமாமகேஸ்வரி உரைத்தனர்.

அச்சமயம் சந்நிதியில் நாரதமுனிவர் பாடவும், நான்முகன் தாளம் போடவும், நந்தி, பிருங்கி, ஸ்ருங்கி, வடுகன், வயிரவன் கொண்டாடவும், பாலய பாலய வென்று தேவர் போற்றவும், தும்புருவர் கீதம்பாடவும், தூதர்கள் தாளங்கள் போடவும், அம்பலத் தாடியென்று அனைவருங்கொண்டாடவுமாக இருக்குந் தருணத்தில் கரகோஷ்டங்கள் முதலிய யாவற்றையும் நிறுத்தும்படி ஆக்ஞாபித்து, அம்மணி கற்புநிலைமாறாத கற்பகவல்லித்தாயே! அழுகையை நிறுத்திவிடு. நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். இதோகாலனை

வரவழைத்து உன் கணவனுயிரைத் தரும்படிச் செய்கிறேனம்மா அஞ்சேல் அஞ்சேல் என்று கூறிப் பின், அதிகார நந்தித்தேவரை அழைத்து ஓ நந்தி, நமது சிவகணங்களில் ஒருவனை யமபுரம் அனுப்பி இயமதர்மராஜாவை யான் அழைத்து வரும்படிச்சொன்ன தாக அனுப்பிவையுமென்று புகல, அக்கணமே நந்திதேவர் ஓர் சிவ கணத்தையழைத்து நீ எமபுரம் சென்று, இயமதருமராஜனை நமது பரமசிவம் அழைத்துவரச்சொன்னதாக தெரியப்படுத்தி அதி சீக் கிரத்தில் அழைத்து வருவாயப்பா என்று வாய்திறந்து வாய்மூடு முன்னமே, அச்சிவ கணம் எமபுரஞ் சென்று தென்றிசைக் கோனை னைக்கண்டு சுவாமி தென்றிசை யரசே தங்களைப் பரப்பிரம்ம சொரூ பியாயும் அடியார்க் கெளியனாகியுமிராநின்ற சாக்ஷாத் சாம்பசிவ மூர்த்தி அழைத்துவரச் சொன்னாரென்றவுடனே, திரேகம் ஆர்யங் தழும், நடுநடுங்கி, மெய்தளர்ந்து சோர்வடைந்து இயாது காரணத் திற்காக நம்மை அழைக்கின்றனரோ வென்று திகிலடைந்தவனாய், வாயுவேக மனோவேகமாய் கைலயங்கிரிக்குவந்து கைலைபம்பதி சமு கத்தில் இருகைகளையுஞ் சிரமேற்கூப்பி, அரகரா சம்போ மஹாதே வாசரணம் சரணம்சுவாமி தாங்கள் அடியேனை இயாது காரணமாக அழைப்பித்தீர்களென்று வினவினான்.

அக்கணம் அச்சொல்லானது இளம்பிறைச் சந்திரனைச் செஞ் சடையிலுடைய உலகரக்ஷகனாகிய உமாபதியின் செவியில் நாராசங் காய்ச்சி விட்டதுபோலிருந்தபடியால், சோமசூரியாக்கினி யென் னும் திரிநேத்திரங்களும் பொறிபறக்கும்படியாக கோவைப்பழம் போற் கண்சிவந்து மிக்க கோபாக்கிராந்தராய் அடா எமா இயாது காரணமாக இப்புண்ணியவதியின் கணவனது ஆவியைக் கொணர்ந் து வந்தாய் அவனது அயனால் ஏற்படுத்தப்பட்ட ஆயுள்பிரமாணம் முடிவானபோதிலும் இப்புண்ணியவதி புரிந்திருக்கும் முப்பத்திர ண்டறங்களின் பலன்களாலும், முறைபிறழாமல் நூற்றெட்டு சோம வார விரதத்தை அனுஷ்டித்துவந்த மகிமையினாலும், அவளது கண வனின் ஆயுள்பிரமாணம் கடந்துபோயிற்று எவ்வாறெனில் பூர்வ காலத்தில் நளமகாராஜாவின் பௌத்திரனின் மனைவியாகிய சீமந்தி னியென்பவள் தனக்கு நேரிட்டிருக்கும் வைதவ்யத்தை நிவர்த்தி செய்துகொள்ளும் பொருட்டாக, சோமவாரவிரதம் அனுஷ்டித்து வந்ததினால் அவள் கணவனுக்கு நேரிட்டிருக்கும் ஆயுட் பிரமாணத் தை நீக்கி அவள் எந்நாளும் திருமாங்கல்ய ஸ்திரீயாயிருக்கவேண் டியதென யான் வரந்தந்ததுமன்றி, உனக்கும் அன்னோனது ஆயுட்

பிரமாணம் முடிவானபோதிலும் அவன் மனைவி அநுஷ்டித்திருக்கும் சோமவார மகிமையினால், அவள் கணவனின் ஆயுட்பிரமாணம் விலக்கப்பட்டது. ஆகையால் அன்னோன் உயிரைவிட்டு விடென்று உனக்கு யான் ஆக்ஞாபித்ததுமன்றி, யாரொருவர் சோமவாரவிரதத்தை அநுஷ்டித்து வருகின்றார்களோ, அவர்களது கணவனின் ஆயுள் பிரமாணத்தின் பிரகாரம் பிடித்துக்கொண்டு வரவேண்டியதில்லை. சோமவார விரதம் அநுஷ்டித்து வந்தவர்கள் நெடுங்காலம் மாங்கல்யஸ்திரீயாகவேயிருந்து சிவலோக பிராப்தியடைய வேண்டியதென்று உனக்கு ஆக்ஞாபித்திருக்கையில், இக்கணம் இப்புண்ணியவதியாகிய கற்பகவல்லியம்மாள் நூற்றெட்டு சோமவாரவிரதம் முறைபிறழாது அனுஷ்டித்து வந்ததால், அவள் நோன்புக்கிரங்கி யான் பார்வதியுடன் பிராப்தமாகி, அவட்கு திருமாங்கல்யபிச்சை வரந்தந்தது உனக்குத் தெரியாமற்போனதென்ன, மேலும் சோமவாரவிரதத்தை அனுஷ்டித்த பெண்பாலரின் பர்த்தாவின் உயிரை என்னுத்தரவின்றி கொண்டு வரப்படாதென்று உனக்கு யான் முன்னமே ஆக்ஞாபித்திருந்தும் அதை அசட்டைசெய்து கற்பகவல்லியம்மாளது பர்த்தாவின் உயிரைக்கொண்டு வந்தபடியால் உன்னைக்கடுங்காவலில் வைக்கவேண்டும், ஆயினும் மன்னித்தேனாகையால், அதிசீக்கிரத்தில் கற்பகவல்லியம்மாளின் கணவனது உயிரை முன்னதாக விட்டு விட்டு மறுவேலை பார்க்கவேண்டியதென்று பரமசிவம் கட்டளையிட்டதும், இயமதருமராஜன் அறத்தாள மகாராஜனின் பிராணனை அன்னோனது பொந்தியிலேயே புகவிட்டனன். பின்னர் கற்பகவல்லியம்மாள்

கற்றவர்களுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுதமானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தாபோற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலத்தானனே போற்றி போற்றி.

என்னுமித்தேவாரத்தைக் கற்பகவல்லியம்மாள் பாடி உமாபதியையும், உமையையும் வணங்கித்தொழுது கைகூப்பி நின்றனள்.

இளம்பிறைச்சந்திரனைச் செஞ்சடையிலுடைய பரமேஸ்வரனைவர் அம்மணி கற்பகவல்லித்தாயே! உன் மனோபீஷ்டப்படியே

நின் பர்த்தாவின் ஆவியை அன்றே உடலிலேயே விட்டு விடும்படித் தென்றிசைக்கோனுக்கு உத்தரவளித்திருக்கின்றனாகையால், ஆன்றோன் அவ்வாறே நடப்பன் நீ யாதொன்றுக்கும் அஞ்சாமல் நின்னிருப்பிடம்போய்ச் சேர்வாயாகில் நின் கணவன் உயிர் பெற்றிருப்பன். நீயும் தீர்க்காயுள் பெற்று நித்யசுமங்கலியாயிருக்கக் கடவாய் அம்மணி கற்பகவல்லியெனத் திருவுளம்பற்றினன். அவ்வாறு களிப்புறப் புகன்ற கடவுளின் வார்த்தையைச் சிரமேற்றாங்கினவளாய் திருக்கைலாயத்தை விட்டு கைலையங் கிரியின் அடிவாரத்தில் வந்ததும், கங்கையில் ஸ்நானஞ்செய்து மலர் பறித்து சிவபூஜைசெய்து ஆங்குள்ள காய்கனிகளை அருந்து உண்டு களைப்படைந்து சற்றே அயர்ந்து துயின்றனள்.

அத்துயிலில் என் கற்பகவல்லித்தாயே! இன்னுங் காலதாமசஞ் செய்துக்கொண்டிருக்கின்றாய் உன் கணவன் துயில்நீங்கி எழுந்து தேடுபவன்போல் கற்பகவல்லி எங்கே எங்கேயென்று தேடிக் கொண்டிருக்கின்றானே. அஃதன்றி நின்சோதரிகளிரண்டுபேரும் அடவியில் தன்னந்தனிமையாக அலைந்துகொண்டிருக்கின்றார்களே, இவைகளையெல்லாம் விட்டுவிட்டு இங்ஙனம் நீ துயில் புரிவது உனக்குத் தர்மமல்லவென தன்கனவில் ஓர் பண்டாரம்போல்வந்து இவைகளைச் சொல்லித் தட்டியெழுப்பினதாகச் சொற்பனங்கண்டு, உடனே விழித்துக்கொண்டு சுற்றிச்சுற்றிப்பார்த்து ஒருவரையுங் காணாதயங்கி நமது கருணாகரக் கடவுள்தான் நம்சொற்பனத்தில் தோன்றி யாட்கொண்டனரென்று மிகவுங் களிப்புடையவளாய், உடனே தன் சோதரிகளிருக்கும் நாட்டிலுள்ள காட்டைநோக்கி தன் இரண்டு சகோதராள் இருக்கும் இடத்திற்கு முகமலர்ச்சியோடு வந்து சேர்ந்தனள். அவ்வாறு இருவரையும் காணவேண்டுமென்று பேராவலுடன் காலத்தை வீண்போக்காமல் ஓட்டோடியும் நோக்கி வந்த கற்பகவல்லியைக்கண்டு, அம்மா நீ கைலைக்குச்சென்ற விவகாரம் எவ்வாறாயிற்றென? சகோதரிகளே நான் கைலைக்குச்சென்று உமாபதியைத்தெரிசித்து, அவரைப்பணிந்து, என் குறையை யிரந்து, விண்ணப்பஞ்செய்து அவரது மனமுருகும்படி தேவாரம்பாடி மகிழச் செய்வித்து நமது கணவனின் பிராணனை இயமனைக்கொடுக்கும்படி வரம்பெற்றனனென்று புகன்றவுடனே, அவ்விருவரும் நாம் இங்கு இனி என் இருக்கவேண்டும்? இயாதோ கற்பகவல்லியம்மாளின் திருபாகடாக்ஷத்தினால் நமது கணவன் வந்து விட்டானே போதுமான சிலாக்கியம், நாம் கொண்ட பெரும்பாக்கியம், கற்பகவல்லி

யம்மாளுடன் கைலைக்குச்சென்று பார்வதி பரமேஸ்வரனை நாம் தரிசியாதது நமது துர்ப்பாக்கியமென்று தங்களைத் தாங்களே இகழ்ந்துகொண்டு மூவரும் புறப்பட்டு பட்டாம்புரிக்குச்சென்று, கற்பகவல்லியம்மாளின் தருமக்கோட்டைக்குள் வெகு ஆவலுடன் தங்கள் கணவனது இருப்பைக்கண்டு களிக்கவேண்டுமென்று உட்செல்லுகையில், அறத்தாளமகாராஜன் பாங்கிகளுடன் வார்த்தையாடிக்கொண்டிருக்கவும், அப் பாங்கிப்பெண்கள் கற்பகவல்லியம்மாளைக் கண்டவுடன் ஓடோடியும் வந்து அம்மா எங்களரசியே! நாங்கள் செய்த பாக்கியமானது, எங்களரசன் பத்து நாளைக்கு முன்னமே நித்திரைதெளிந்தெழுந்தவர்போல் கற்பகவல்லி கற்பகவல்லி என்றழைத்தனர். அவ்வோசையைக்கேட்டு நாங்கள் ஓடோடியும் வந்து சுவாமி என்னவேண்டுஞ் சுவாமி என்றதற்கு, கற்பகவல்லி எங்கே யென சுவாமி எங்களரசி இங்ஙனமில்லை, யாது காரணமாகவோ எமபுரஞ் சென்றிருக்கினரென்று புகன்றோம். அதைக்கேட்டவர் சிறிது களிப்புடையவராய் எனக்கு அதிக பசியாயிருக்கிறதால் அன்னமளியுங்களென்றறைந்த வுடனே, அறுசுவையோடுகூடிய அசனமளித்தோம். அதை உண்டு அயர்ந்து நித்திரை புரிந்தனர். அதுமுதல் அடிக்கடி கற்பகவல்லி இன்னும் வரவில்லையா என்று கேட்டுக்கொண்டேயிருக்கின்றனர். தாயே என்று கூறினர். அதை மூவருங்கேட்டுக்கொண்டு அறத்தாளமகாராஜன் சயனித்திருக்கும் பள்ளியறைக்குச்சென்று பார்க்கையில் அப்பொழுதுதான் உணவருந்தி இளைப்புடன் அயர்ந்து நித்திரை செய்வதைக்கண்ணுற்றவர்களாய் சற்றே நிதானித்துப்பார்த்து, பிறகு யோசனை செய்வது நெடுநாள் பிரிந்திருந்தவளானதால் அரசன் கோபித்துக்கொண்டாலும் பெரிதல்லவெனத் துணிந்து கற்பகவல்லியானவள் அரசே! அரசே! என்றழைத்துக்கொண்டே அரசனைச்சேர்த்திருக்கக்கட்டி நீங்காத பேரன்பை வெளிப்படுத்தி எழுப்பி உட்கார வைத்தனர்.

அப்பொழுது அறத்தாள மகாராஜனனவர் நேத்திரத்தை கிமிட்டிக்கொண்டு கற்பகவல்லியையும் தெய்வநாயகத்தையும் நாகவேணியையுங்கண்டு, ஓ தெய்வநாயகமே, ஓ நாகவேணியே நீங்களிருவரும் எப்போது இங்ஙனம் வந்தீர்களென்று வினவினர். அப்பொழுது தெய்வநாயகமானவள் கலுக்கென்று நகைத்து கணவனை நோக்கிக் கேளுஞ்சுவாமி பிராணநாதா! தாங்கள் மரணமாகி விடவும். நாங்கள் மூவரும் தண்டுதளங்களைச்சேர்த்துக்கொண்டு எல்லோரும் இயமலோகஞ்சென்று உமது ஆவியைக்கொடுக்கும்படி போர்க்கோலங்

கொண்டு சென்றதை இயமனறிந்து தமது தூதுவரைக்கொண்டு நம்முடன் போராட வந்தவர்கள் பெண்பாலராயிருப்பதால், எங்கள் எஜமானன் உங்களுடன் போர்புரிவது தகுதியல்லவெனப்புகன்று, எங்களை அவ்வெமபுரத்தி னெல்லையைக் கடக்கும்படிச் செய்தனர். அதன் பின்னர் முன்வைத்தகாலைப் பின் வாங்காதவர்களாய் தீர்க்காலோசனை செய்து நாங்களிருவரும் அங்ஙனமே இருந்து, கற்பகவல்லியை மாத்திரம் கைலைக்கு அனுப்பித் தங்களுயிரைக்கொணர்ந்து வரும்படிச்செய்தபின், மூவரும் ஒருங்கனே கலந்து இங்ஙனம் வந்தோமென்று ஆதியோடந்தமாய்ப் பிரிவாகப்புகன்றதைச் செவிசாய்த்த அறத்தாளமகாராஜன் குதூகலமடைந்துவீற்றிருந்தனன்.

உடனே தெய்வநாயகம் எழுந்து கேளுங் சுவாமி! ஓர் விண்ணப்பம் அஃதியாதெனில் தாங்களும் கற்பகவல்லியம்மாளும் இந்த க்ஷணம் என்னுடன்கூட தெய்வலோகம் வருகவேண்டும் நாமெல்லோரும் அங்ஙனம் மணஞ்செய்து கொண்டு மண்ணுலகத்திற்கு வந்துவிடுவோம். அதிலும் அம்மா கற்பகவல்லித்தாயே நமது நாயகனும் நீயுமன்றி மற்ற யாராயிருந்த போதிலும் தெய்வலோகத்திற்கு வரப்போகாது. இந்த நாகவேணியானவள் நாகலோகத்துப் பெண்ணாகையினாலே இவளும் இவளது சேனைகளும் வரலாகும். ஆகையினாலே உனது குடும்பத்தார்களெல்லோரும் இங்கு தானே இருக்கட்டும். நாமெல்லோருஞ்சென்று நாளையதினம் இன்னேர வேளைக்கு இங்கு வந்து விடலாம் ஆகையால் அதிக சுருக்காகப் பிரயாணப்படுங்களென்றுரைத்தவுடனே, கற்பகவல்லியானவள் தாய் தந்தையர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு நாயகனைக் கரத்திற்பிடித்துக்கொண்டு வாருமென்று வெளியில் வந்து தெய்வரதத்தின்மீது அமர்ந்த வுடனே தெய்வநாயகமானவள் சாரதியாக அமர்ந்து படைகளையெச்சரித்து இரதத்தைத் தூண்டித் தெய்வலோகத்திற்கு வந்து, தனது அரண்மனையில் இரதத்தைக்கொண்டு வந்து நிறுத்தி, நால்வரும் இரதத்தை விட்டிறங்கினார்கள். உடனே படைத்தலைவன் சென்று தேவேந்திரனைக்கண்டு சென்று வந்தசேதியை போதிவிட்டுப் படைகளை யழைத்துக்கொண்டு சென்றுவிட்டதின் பின்பு, தெய்வநாயகமானவள் மூவர்களுக்கும் ஆசனம் போட்டு அமர்த்தி விட்டு, அரண்மனைக்குள்ளாகப்புகுந்து தந்தையைக்கண்டு வணங்கி வந்தனை வழிபாடுகள் செய்து கேளுமென்னை யருந்தவஞ்செய்து பெற்ற அண்ணலே! அடியாளும் நாகலோகத்தரசன் புதல்வியும், கட்டழகு மகாராஜன் புதல்வியாகிய கற்பகவல்லியம்மாளும் ஆகிய மூவரது

சேனைகளையுந் திரட்டிப் போர்க்கோலங்கொண்டு எமபுரஞ்சென்று இயமனுடன் போராடியும் பயனற்று எமபுரத்தெல்லையை விட்டகலும்படி அன்னோனது தூதுவர்களால் துரத்தப்பட்டு, அடியாளும் நாகலோகத்தரசன் புதல்வியும் அங்ஙனமே இருந்து கற்பகவல்லியம்மாளை கைலைக்கனுப்பித் தான் புரிந்த முப்பத்திரண்டறத்தின் பலன்களாலும், அநுஷ்டித்த நூற்றெட்டு சோமவார விரதத்தின் பலன்களாலும் எங்கள் கணவனது ஆவியைக்கொணர்ந்து வரும்படித்தூண்டி அனுப்பினோம் அதற்குச் சம்மதித்தவளாய் அவ்வாறே கைலைக்குச்சென்று திரிநேத்திரதாரியாகிய பரமசிவத்தினிடத்தினின்று கணவனது ஆவியைக்கொண்டு வந்தனள். தந்தையே என்றுபுகன்றதும் தேவேந்திரனவர் அப்புண்ணியவதி எங்கே? உன்னுடன்கூட வந்திருக்கிறார்களா? அப்பேர்ப்பட்ட கணவனைக் காத்த கற்பகவல்லியம்மாளை நாம் தரிசனஞ்செய்யவேண்டும். அந்தம்மாள் எங்கே என்று கேட்க, இதோ என்னுடன்கூட தான் கொணர்ந்து வந்திருக்கின்றேன். என்று புகலவும் உடனே அம்மணி கற்பகவல்லித்தாயே கைலைக்குச்சென்று கணவனது ஆவியைக்கொணர்ந்துவந்த புண்ணியவதி நீதானோ? இங்கு நீ வந்தது நான் முந்திய ஜன்மத்திற் செய்த புண்ணியமாகும். என் பாக்கியமே பாக்கியம் என்று வியப்படைந்து தன் குமாரத்தியைப்போல் சன்மானித்தனர். இவ்வாறு தேவேந்திரமகாராஜன் சந்தோஷமாயிருப்பதனால் இது தான் தக்க தருணமென்று எனையீன்ற தந்தையே! ஆதியில் கேட்டுக்கொண்ட பிரகாரம் இக்கக்ஷணமே விவாஹமும் முடித்தருள் வேண்டுமென்று தெய்வநாயகம் கூறிய மொழியைக்கேட்ட வேந்தனவர், மகளுடனே பாதசாரியாய் நடந்து வரும்போது நாகவேணியைப்பார்த்து இது யாரம்மா வென்று வினவும்போது, இவள் நாகராஜனின் புதல்வி. இவளும் எனது கணவனுக்கு மனைவியாக வேண்டியவள்தான். இவட்கும் கற்பகவல்லிக்கும் அடியாளுக்கும் அறத்தாளமகாராஜனையே மணமகனாக்கவேண்டியதுதான். ஆகையால் காலதாமதஞ்செய்யாமல் அதி சீக்கிரம் விவாஹம் நடத்த வேண்டியதுதானென்று புகன்றவுடனே, தன் ஆட்களையழைத்து நாகலோகத்திற் சென்று நாகராஜனைக்கண்டு, தன் புதல்வி இங்ஙனம் வந்திருக்கிறதாகவும், விவாஹம் நடத்தவேண்டி யிருப்பதாகவும் சேதி தெரிவித்து உடனே அழைத்து வரும்படி அனுப்பித்துவிட்டு விவாஹத்திற்குரிய அலுவல்களைத் தொடக்கஞ்செய்து நடத்திக்கொண்டிருக்கும்போது, நாகராஜனும் அங்ஙனம் வந்து சேர்ந்த

னன். தேவேந்திரமகாராஜன் பிராமணாளைக்கொண்டு ஓர் முகூர்த்த தினம் ஏற்படுத்தி தேவர்களெல்லாம் புடைசூழவும், சுபமாங்கல்ய ஸ்திரீகள் வாழ்த்தவும், அறத்தாளமகாராஜன் ஏற்படுத்திய முகூர்த்த தினத்தில் மூவருக்கும் திருமாங்கல்யந்தரித்து தேவேந்திரமகாராஜனிடத்தில் விடைபெற்று நால்வரும் ரதத்திலேறி விண்ணுலகம் விட்டு மண்ணுலகிலுள்ள தனதிருப்பிடமாகிய தருமக்கோட்டையில் வந்திறங்கி சாதிக்குத்தகுந்த மரியாதை செய்து விடை கொடுத்தனுப்பி விட்டனர்.

பின்னர் அறத்தாளமகாராஜன் தன் மாமன் மாமியாகிய கட்டழகு மகாராஜனிடத்திலும் திட்டவேணியம்மாளிடத்திலும் தன்னூருக்குப்போவதாக விடைபெற்றுக்கொண்டு அளவில்லாத் தண்டு தளங்கள் புடைசூழும்படியாக மூன்று மாதர்களும் சிவிகையில் வரவும், முன்னதாக அறத்தாளச்சக்ரவர்த்தியும் இடையில் கதிரைமேற்பண்டாரமுமாக அமர்ந்து படைகளைத்தூண்டிக் காடு, கானகம், காறுகளெல்லாங் கடந்து, வியாசர்பாடி யரசனிடத்திற் கொடுத்து வைத்த பண்டாரக்கிழவனின் பொருள் மூட்டையை வாங்கிக்கொண்டு, அங்ஙனமிருந்து படைகளை யெச்சரித்து வனம் வனாந்திரங்கடந்து தனது தேயமாகிய ஞானபுரி யென்னும் பட்டணத்திற்கு வந்து தனது முதன் மந்திரியாகிய பெரியவரைக்கண்டு, சென்று வந்த சேதியை யாதியோடந்தமாய் எடுத்துக்கூறிவிட்டு மூன்று மாதர்களுடனே சிம்மாதனத்திலமர்ந்து ஆண்டிப்பெரியோரை அருகிலமர்த்திக்கொண்டு, இராஜமுடியைச் சிரசிற்றரித்து, முத்திரை மோதிரத்தைத் தன் விரலிற்றரித்து, செங்கோலைக் கரத்திலேந்தி அறத்தாளமகாராஜனானவர் ஆறிலொரு கடமை பெற்று நீதிதவறாது அரசுரிமை புரிந்து கொண்டிருந்தனர். சுபம்.

(வெண்பா)

காலனையே வென்று கணவனைக்காத்த கற்பை
மூலபாயனைத்திற்கு மூதளிக்க—ஞாலமதில்
பூரணமாய் வாசித்துப் புத்தியுடனடப்போர்க்குக்
காரணமாய் வழிகாட்டுமே காண்.

## கற்பகவல்லிக்கதை

முற்றிற்று.

---

## புதிதாய் அச்சிட்ட நூதன கதை புத்தகங்கள்.



# கலாவல்லபி யென்னும் தலைவாங்கி அபூர்வ சிந்தாமணி.

இவ்வரும் பெயர் பூண்ட தலைவாங்கி அபூர்வச் சிந்தாமணி யென்னும் பெண்ணானவள் கேட்கும் மூன்று கேள்விகட்கும் விடை விளம்பிச் சிந்தாமணியை மாலையிடுவதாகவந்தத் தனது மாதுலனாகிய புரந்தர மகாராஜனை முதலில் வெட்டி அதன் பின்பு ஐம்பத்தைந்து தேயத்திலுள்ள அரசர்களையும் அறிவர்களையுந் தோற்கடித்து தொலாயிரத்தி தொண்ணூற்றி யொன்பது மாந்தர்களின் சிரசை வெட்டி தனது மாளிகையின் மீது வைத்துக்கொண்டு கொழுத்த குந்தார்த்தைப்போல் செழித்திருக்கும் நாளில் கைவல்யபுரத்துச் சக்ரவர்த்தியின் குமாரனான மெய்யழகனென்பவன் இப்பெண்ணின் கேள்விக்கு விடை தெரிந்துக்கொள்ளும் பொருட்டாக முதலாவது மதிவசனபுரத்திற்குப் போகுந் தருணத்தில் அனுபவிக்கும் துக்காதுக்கங்களைக் கேட்டால் கல்லுங்கரைபு மானைகயினுலே பின்னு மிரண்டு கேள்விகட்காகப் படுவதும் ஒருபால் துக்கமும் மற்றொருபால் களிப்பும் உண்டாவதுமன்றி இறுதியில் மெய்யழகனென்பவன் சிந்தாமணியின் காத்தால் மாண்ட தொலாயிரத்தி தொண்ணூற்றி யொன்பது பேர்களையும் உயிர் கொடுத்து எழுப்புவது பிரமசிருஷ்டிக்கு சரியென்னலாகுந் தவிர தலைவாங்கி யபூர்வச் சிந்தாமணியை வெற்றிகொண்டு அவளது தலைக்குந்தலை தனது புரவியின் காலில் கட்டவிழுப்பதுசாயபட்சிக்கு நிகரென்னலாகுமே யொழிய அறம்பொருள் இன்பம் வீடு நான்கையும் ஆறு சாஸ்திரத்தையும் அறுபத்திநான்கு கலைக்ஞானத்தையும் பதினெண் புராணத்தையுந் தொகுத்துக் காட்டிக் காதலாமலகம்போல தெள்ளிய செந்தமிழ் நடையில் எம்புலவராகிய கதாரத்னாகரங் காமனையிந் தக்கட்சி உபாத்தியாயர் சி. நா. குப்புசாமி முதலியாராலெழுதிய தலைவாங்கி அபூர்வச் சிந்தாமணிக்கதையை வாசிக்கும் நேயர்களின் மனமானது ஆநந்தக் கடலிலாடி யெம்மையும் எம் புலவரையும் ஆசீர்வதிப்பீரென்று சொற்ப விலைக்கு விற்பனைசெய்து வருகின்றோம். புத்தகம் 1-க்கு ரூபா 1 0 0

# சம்பந்தமூர்த்தி அல்லது சகோதர வாஞ்சை

என்ற பெயரையுடைய ஒரு தமிழ் நாவல் புதிதாய் அச்சிட்டு விலைக்குத் தயாராயிருக்கிறது.

இதில் சகோதரவாஞ்சையைப்பற்றி தெளிவாய் எழுதப்பட்டிருக்கிறது. கதாநாயகனாகிய சம்பந்தமூர்த்தி யென்னும் மூத்த சகோதரன் தன் தாயிடம் வைத்திருக்கும் அன்பும், தன்மேல் அபாண்டம் சுமத்திய தன் தம்பிமேல் காட்டும் விசுவாசமும், முடிவில் தன் தாயின் மனதைத் திருப்தி செய்வதற்காக அத்தம்பியைக் காப்பாற்ற அவன் செய்த கொலைக்குற்றத்தைத் தன்மேல் சுமத்திக்கொள்வதும் வியப்புண்டாக்கும். முடிவில் உண்மை வெளிக்கு வந்து தண்டனை விடுதலை யடைவதும் அவன் காதலித்த கன்னிகையை மணம்புரிவதும் சந்தோஷத்தை யுண்டாக்கும், ஆரணி - குப்புசாமி முதலியாரால் எழுதப்பட்டது. இதன் விலை அணா 4.

அபூர்வ மனோவல்லாசனி யென்னும்

# விவேகாநந்தக் கதை.



கல்விற் சிறந்த செல்வர்காள் கதையென்றால் யெல்லாங் கதைதானா? படாடோபமாகப் பெயர்கள் பூண்டு உலகில் உலாவுங் கதைகளை வாங்கி வாசித்துச் சொல்லிலக்கணம் பொருளிலக்கண மின்றிக நெடுவனவற்றை யுணர்ந்த எம்புலவராகிய இந்நூலாசிரியரால் எழுதப்பட்ட அபூர்வ மனோவல்லாசனி யென்னும் விவேகாநந்தக் கதையில் குருவுஞ் சீடனும் காசியாத்திரைச் செல்லுங்கால் தங்குமிடங்களில் சீடனாகிய வேத கோவிந்தன் வினவும் வினாக்களுக்கு குருநாதர் உரைக்கும் விடையானது பரமரகசியமானதினை இதில் இறங்கி வரும் சுந்தரக்கோ~ வின் குமாரனான புத்தி மூடனானவன் தன்னுடையில் இருக்கும் மாணிக்கக் கல்லினால் இருளன் குமாரத்தியாகிய கற்பிகிளியாளிடம் அகப்பட்டுக் கொண்டு கண்ணீரைச் சோரவிட்டு அன்னவனுக்கு பத்தி மூடன் கூறுங் கதை யொன்றே இல்வாழ்க்கைக்குத் துணையாகவும் நேசிக்கும் கேட்கட்கும் கேட்பவர்கட்கும் ஆ ஆ அந்தோ யிதென்னத் தேனோ பாலோ கனியோ கரும்போ பாகோ கற்கண்டோ இனிமை விளைவிப்பது மன்றி இக்கதைக்கு நிகரானக் கதை யுலகில் இல்லையெனக் கருவிகரணாதி கண்ட சாட்சியாகப் பலருஞ் சொல்லுவாரென்பது திண்ணம்.

புத்தகம் 1-க்கு கிரயம் அணா 0 12 0

சற்குணசிபன் அல்லது

# சங்கடந்தீர்த்த சதுரன் சரிதை.



அகம்பாவம் பூண்டு கர்வித்துத் திரிவோர்கள், கடைநாளில் பலரால் நிந்திக்கப்பட்டுத் தாமும் சுகம் அடையாமல் தம்மையடைந்தவர்களாகிய தாய், தந்தை, மனைவி, மக்கள், முதலியோர்களையும் துன்பத்திற்கு ஆளாக்கித் துக்கப்படுத்துவதையும், தகுந்த தீரத்துடன் தக்கபடி நடப்போர் எவ்வித இடையூறுகளையும், கஷ்ட நஷ்டங்களையும் எளிதில்ஜெயித்து இன்பமடைதலையும் நிரூபிப்பதற்கென்று எழுதப்பட்ட கதை, சற்குணசிபன் என்னும் இளஞ்சிறுவன் தனக்குண்டாகிய மகாகொடிய விபத்துகளைக் கடந்ததும், காணாதுபோன தன் தந்தையைக் கண்டுபிடித்ததும் மிக ஆச்சரியகரமாக விருக்கும் இக்கதையின் முதல் அதிகாரத்தில் எழுதப்பட்டிருக்கும் சிநேகத்தைப்பற்றிய வியாசத்தை வாசிப்போர் ஒவ்வொருவரும் சிநேக லக்ஷணங்கள் சிநேகிக்கத்தக்கவர்கள், கெட்ட சகவாசத்தால் வருங்கேடு, நல்ல சகவாசத்தால் வரும் நன்மை, கூடிப்பிரியாமை முதலியவைகளை யெல்லாம், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளிதிற் காண்பர்.

இக்கதையினால் பெற்றோரொழுக்கம், மக்களொழுக்கம், சிநேகபாவம், துன்பம் துடைத்தல், பொறுமை விடாமுயற்சி, அடாது செய்தோர் படாது படுதல், புத்திமான் பலவானாவான், என்பது போன்ற அனந்த நீதிகள் விளங்கும்,

இதன் விலை அணா 6.



# மதன மனோகரி.

"மதனமனோகரி" என்பது ஓரினிய நல்லியற் செந்தமிழ் நாவல் இது மிக்க கற்பனை யலங்காரங்களையும் பல நீதிகளையும் அமைத்து யாவருக்கும் நன்கு விளங்கத்தக்க தெள்ளிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றது இதனை ஒருமுறை படித்தவர்கள் மீண்டும் மீண்டும் பலமுறை படிக்காமல் இரார்கள். இது மற்றவற்றைப்போல் வேறு பாஷைகளினின்று மொழிபெயர்க்கப்பட்டதும், வேறு கதைகளினின்று மாற்றுருவமானதுமாகாமல், புதுவதாகப் புனைந்தெழுதப்பட்டதாகும் அன்றியும் இது மிகச்சிறந்த இலக்கணப் புலவராகிய ம-ா-ா-ஸ்ரீ, கா. ர. கோவிந்தராஜ முதலியாரவர்களால் எழுதப்பட்டதாகலின் இதைப்படிப்போர்க்குப் [illegible]ஷை நடையும் நன்கமையும் சிலர் இவ்விதக் கதைகளை யெழுதுவதற்கு இவ்வளவு சிறந்த பண்டிதர்கள் வேண்டுமோ மற்றையோர்கள் எழுதல் கூடாதோ என்று கருதுகின்றனர் அவர்களுக்கு நாவல் என்பது இத்தகைத்தெனத் தெரிவித்துவிடில் அவ்வித எண்ணங்கள் நீங்கிவிடுமாதலின் அதைப்பற்றிச் "செந்தமிழ்ப் புதுவனாந்தனவியல்" என்னும் "வியாசத்தில்" எழுதப்பட்டுள்ளதை ஈண்டெடுத்துக்காட்டுகின்றேன் ஆவலை விளைக்கும்.........மனக்கவலையாலும் வேலைமிகுதியாலும் மிகவுங்காய்ந்து உள்ளஞ்சாய்ந்தவர்கள் தமது ஓய்ந்த வேளைகளிற் கதைப்போக்காற்பொழுதுபோக்காய்ப் படித்துக்கொண்டே இயற்கை வனப்புகளையும் மனிதர் தஞ்சுபாவங்களையும் நன்கு ஆராய்ந்தற்குக் கருவியாயுள்ளவை. இதன் விலை அணா 8.

## உல்லாசவல்லி யென்னும்

# பாதாள புவனராணி.

நண்பர்காள்! கதையென்பது வேதங்களை பெற்றெடுத்த சார்பு நூலாகையினாலே உலகிலுலாவுகின்றக் கதைகளெல்லாங் கதைகள்தானா இலக்கிய விலக்கணத்தேற்சியும், சுருதி யுக்தி யனுபவமும் பெற்றுள்ள எம் புலவராகிய சதாரஞ்சரங் காமனெரிந்தக் கட்சி உபாத்தியாயரவர்களெழுதிய உல்லாசவல்லி யென்னும் பாதாள புவனராணி யென்றுந் திருநாமம் பூண்ட இந்த அருமையாகியக் கதையானது வாசிக்கும்போது முதலில் புவனச்சக்ரேஸ்பரனானவர் வேட்டையாடுகின்ற நேர்மையும் பொன்மானைத் துரத்திக்கொண்டுபோய் நவரத்தின மிழைத்தத் திருக்குளத்தைக்கண்டு வியப்படையும்போது ஆகாயத்தை யளவிட்டுக்கட்டிய எழடுக்கு அரண்மனையிற் புகுந்து ஆங்குள்ள விந்தைகளை காண்பது யோகீசர்கள் தன்னைத்தானே யறிந்துப் பார்க்கின்ற ஆனந்தத்திற்கும் எண்மடங்கதிகமேயன்றி ஏழாவது மாளிகை மேலிருக்கின்ற பாதாளப் புவனராணியைச் சந்தித்தது திடீரென்று பிரிவது மாயாஜாலத்தைப் போலவும் ருத்திரப் பிரளய மாகவுங் காண்பதுமன்றி மறுமுறையில் புவனேஸ்பரனானவர் வனத்தில் நவநாயக மென்னும் பெண்மணியைக்கண்டு இவரெடுத்துக் கூறும் பழமொழியில் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கையும் விளக்கிக்காட்டி தெய்வ வணக்கமும் நாயகனுக்கு நாயகி யொடுக்கமும் தந்தைக்குச் சேயடக்கமும் அரசருக்கு அமைச்சர் பணிந்தொழுகுவதும் மன்னர்கள் குடிப்படையை யாதரிக்கு மொழுக்கமும் காதலாமலகம்போல் தெள்ளிய செந்தமிழ் நடையில் எழுதி அச்சிட்டிருக்கின்றது.

இதன் விலை அணா 8.

